மாணவர்

# தமிழ் வியாச விளக்கம்

புதுக்கோட்டை

மஹாராஜா கல்லூரித் தமிழாசிரியர்

பண்டித, நா. கனகராஜையர், B.O.L.,

எழுதியது.




T. G. கோபால் பிள்ளை

தெப்பக்குளம் :: திருச்சிராப்பள்ளி

பதிப்புரிமை] 1940 விலை அணா 12

# முகவுரை

துரைத்தனத்தார் திருத்தி வெளியிடப்பட்டுள்ள புதிய பாட திட்டத்தில் தமிழ் மொழி பயிலும் மாணவர்க்கு நல்ல நடையில் வியாசம் எழுதும் பயிற்சி அளிக்கப்பட வேண்டும் என்பது ஒரு முக்கிய அமிசமாய் அமைந்துள்ளது. மாணவர் தம் மனக் கருத்தை நன்கு வெளியிடும் ஆற்றல் உடையவராகப் பயிற்சி பெற வேண்டும் என்பதே இதன் நோக்கமாகும். இந் நோக்கங்கொண்டு ஹைஸ்கூல் மாணவர்கட்குப் பயன்படத்தக்க வியாச புத்தகம் ஒன்று எழுத வேண்டும் என்ற முயற்சியின் பயனாக இச் சிறு நூல் வெளி வரலாயிற்று.

இந்நூலில், முதற்கண் மாணவர் வியாசம் எழுதும் போது சர்தாரணமாக விளைகின்ற குற்றங் குறைகள் சில கூறப்பெற்றுள்ளன. அப்பால், சில முக்கிய விதிகளும், நிறுத்துக் குறிகளின் விளக்கமும், வாக்கியம் அமைக்கும் முறையும், நேர்க்கூற்று, அயற்கூற்றுக்களை அமைக்கும் வகைகளும் உதாரணங்களோடு விளக்கப்பெற்றிருக்கின்றன. அவற்றின் பின் கதை, கடிதம், சம்பாஷணை, பொதுவகைக் கட்டுரைகள் ஆகியவைகளை அமைக்கும் முறைகள் ஏற்ற உதாரணங்களோடு இயன்ற அளவு தெளிவாக எழுதப்பெற்றுள்ளன.

மாணவர் பிழையற்ற எளிய இனிய நடையில் பல வகை வியாசங்களையும் எழுதுதற்கு இச்சிறு நூல் உதவியாகுமென்று நம்புகிறேன். இதனைத் தமிழாசிரியரும், தலைமை உபாத்தியாயரும், பிறரும் அன்புடன் ஆதரிக்கப் பெரிதும்

வேண்டுகிறேன். இதனைப் பின்னும் நன்கு அமைத்தற்குரிய முறைகளை அறிஞர்கள் அன்புடன் தெரிவிப்பார்களாயின், அங்ஙனமே செய்ய முயல்வேன்.

இப்புத்தகத்தை அச்சிடுவதில் ஒப்பு நோக்குதல் முதலிய அரிய உதவிகள் புரிந்த அன்பர்கட்கு எனது மனமார்ந்த நன்றி உரியதாகும்.

இங்ஙனம்,

**நா. கனகராஜையர்.**

## பொருளடக்கம்

மாணவர்

# தமிழ் வியாச விளக்கம்

## 1. பொது அமைதிகள்

## (General Features)

1. வியாசம்: வியாசம் என்னும் சொல் யாதேனும் குறிப்பிட்ட ஒரு பொருளைப்பற்றி நன்கு சிந்தித்துப் பல அங்கங்களாக வகுத்துக்கொண்டு விளக்கி எழுதுதல் எனப் பொருள்படும். இதனைக் கட்டுரை எனவும் வழங்கலாம். கட்டுரை என்னும் தொடர் மொழி 'மனக் கருத்துக்களை வாய்மொழியாலேனும், எழுத்து உருவத்தாலேனும் முறைப் படி அமைத்து, பிறர் உணரும் வண்ணம் விளக்கிக்கூறுவது,' என்னும் பொருள் தருவதாம். கட்டி உரைக்கப்படுவது கட்டுரையாகும். [கட்டுதல் - ஒரு வரையறைக்குள் அடக்குதல்.]

2. வியாசம் எழுதப் பழகுதல்: சிறந்த வியாசங்கள் எழுதுவதற்கு நூலறிவும், உலகறிவும், எழுதும் பழக்கமும் வேண்டும். முயற்சியின் துணைகொண்டு சிறிது சிறிதாக எழுதிப் பழகுவோர், சிறந்த எழுத்தாளர் ஆவதும் உண்டு. கட்டுரைகள் சிற்றுருவத்தில் நன்கு அமைக்கப் பயின்ற பிறகே பெரு முயற்சிகளில் இறங்குதல் நலம். முன்னோர் கைக்கொண்ட முறைகளை அநுசரித்து எழுதப்பயிலுதல் எவ்வகையிலும் நன்மை பயக்கும். முதன் முயற்சியிற் பிழை மலிந்திருத்தல் இயல்பே. அதனால் மனந்தளர்ந்து முயற்

சியை விட்டொழித்தல் ஆகாது. விடாமுயற்சியால் விளையாத பயன் இல்லை.

3. வியாசம் எழுதும் முறை: வியாசம் எழுதத் தொடங்கு முன்பு எடுத்துக்கொண்ட விஷயத்தை இன்ன வாறு இத்தனை பிரிவுகளாக வகுத்துக்கொள்ள வேண்டும் என்றும், அவற்றுள் இன்னின்னவற்றை இன்னின்னவாறு விளக்கவேண்டும் என்றும் முடிவு செய்துகொள்ளவேண்டும். நோக்கமும் திட்டமும் நிர்ணயப்படாமல எழுதத் தொடங் கிய வியாசம் நன்கு அமையாது. விரைந்து எழுதுதல் எல் லோர்க்கும் இயல்வதன்று. நன்கு மனப்பயிற்சி பெறாதவர் விரைந்து எழுதத் தொடங்குவராயின், இடையிடையே கருத்துத் தடைபாடு உண்டாகி இடர்ப்படுவர். எழுதத்தொடங்கு முன்பே கருத்துக்களையும் அவற்றை விளக்குவதற்குரிய உப கரணங்களையும் ஒழுங்காக அமைத்து வைத்துக்கொள்ள வேண்டும். உரைக்கப்படும் பொருளை உள்ளத்து அமைத்துக் கொண்டு பின்பு எழுதப் பெறும் கட்டுரை நன்கு அமையும் என்பதிற் சிறிதும் ஐயுறவில்லை.

4. சாமானியமான குறைகள்: எழுத்துக் குற்றங்கள் பலதிறப்படும். அவற்றுட் சில இங்கே காட்டப்படும்: 'அதற்கு' என்பதை அதர்க்கு, அதர்கு என்றும்; 'நிரம்ப' என் பதை ரெம்ப, ரோம்ப, ரொம்ப என்றும்; 'தேகம்' என்ப தைத் திரேகம் என்றும்; 'பயிற்சி' என்பதைப் பயிர்சி, பயிர்ச்சி. பயிற்ச்சி என்றும்; 'மாட்சி' என்பதை மாக்ஷி என்றும்; 'காட்சி' என்பதைக் காக்ஷி என்றும்; 'சூழ்ச்சி' என்பதைச் சூட்சி, சூக்ஷி, ஸூக்ஷி என்றும் எழுதுவார் உளர். இவை போல்வன பல உள.

ஒருமை பன்மைகளை மயங்க வைத்தலும், வாழைபழம் என்னும் தொடர்மொழிபோலப் புணர்ச்சி முறை அறியாது

எழுதுதலும், இடமாறுபாடுபெற எழுவாய் பயனிலைகளை அமைத்தலும், இடம் அறிந்து நிறுத்துக்குறிகளை அமைக்காமல் எழுதுதலும், இடத்துக்கு ஏற்ற சொல்லைப் பிரயோகிக்க அறியாதிருத்தலும், இவை போல்வன பிறவும் சாமானியமாக மாணவர் வியாசம் எழுதும்போது செய்யும் குற்றங்களாம்.

எம்மொழியையும் குற்றமற எழுதுதற்கும் பேசுதற்கும் இலக்கண அறிவே அடிப்படையாம். தமிழ் மொழியில் பிழையின்றி எழுதும் பல முறைகளை இலக்கணம் இளைஞர்களுக்கு விளக்குவதாம். அரிய விதிகள் பல உளவாயினும், அவற்றைப் பார்த்து இளமாணவர் மலைத்தல் வேண்டா. எளிய இனிய நடை எழுதப் பயிலுதற்கும் இலக்கணப் பயிற்சி அவசியம் வேண்டும். ஆங்கில மொழியில் இலக்கண முறைகளை அனுசரித்தே கட்டுரைப் புத்தகங்கள் அமைந்திருப்பது கவனிக்கத் தக்கது. ஆகையால், இப்புத்தகத்திலும் முதலிலே எழுத்து, சொல், சொற்றொடர் (வாக்கியம்) முதலியவற்றைப் பற்றிய எளிய இலக்கண முறைகள் ஆரம்பத்தில் விளக்கப்பட்டுள்ளன. சொற்றொடர் அமைப்பு நன்கு அமைதற்கு எழுத்திலக்கணம் பெரிதும் உதவி புரியும் என்பதைப் பின் வரும் பயிற்சிகளால் அறியலாம்.

---

## II. முக்கிய எழுத்திலக்கண விதிகள்
## (Important rules on Orthography)

தமிழ் மொழியில் உயிர், மெய் என்னும் இரு வகை எழுத்துக்களே முக்கியமானவை. ஆய்தம் ஒழிந்த பிற எழுத்துக்களெல்லாம் இவற்றிலிருந்து பிறந்தவைகளே. ஆகையால், இவை முதல் எழுத்துக்கள் என்றும், மற்றவை சார்பு எழுத்துக்கள் என்றும் கூறப்படும். உயிர் எழுத்துக்கள் குறில், நெடில் என இரு வகைப்படும். மெய்யெழுத்துக்கள் வல்லெழுத்து, மெல்லெழுத்து, இடையெழுத்து என மூன்று வகைப்படும்.

1. மொழி முதல் எழுத்துக்கள்: தமிழில் மொழிக்கு முதலில் வரத்தக்க எழுத்துக்கள், உயிர் பன்னிரண்டும், உயிர் ஏறிய க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ, ங, என்னும் மெய் பத்துமாம். மெய்களுள் க், ச், த், ந், ப், ம் என்னும் ஆறும் தனித்தனி பன்னிரண்டு உயிரோடும் கூடி மொழிக்கு முதலாம். வகரம் எட்டு உயிரோடும், யகரம் ஆறு உயிரோடும், ஞகரம் நான்கு உயிரோடும், ஙகரம் ஒருயிரோடும் கூடி மொழிக்கு முதலில் வரும். தமிழில் மொழிக்கு முதலாக வராத எழுத்துக்களையுடைய வேறு பாஷைச் சொற்களை எழுதும்பொழுது சிலவற்றிற்கு முன் ஏற்ற உயிரெழுத்தைச் சேர்த்து எழுத வேண்டும்.

உ - ம் ;—ராமன்—இராமன், லோகம்—உலோகம்.

பயிற்சி

பின் வருவனவற்றைத் திருத்துக :—

(1) ராமன் டாம்பீகம் செய்கிறான்.

(2) லட்டுத் தின்றால் ருசியாய் இருக்கும்.

(3) ரம்பம் மரம் அறுக்கும்.

2. மொழி இறுதி எழுத்துக்கள்: தமிழில் மொழி இறுதியில் நிற்கும் எழுத்துக்கள் எகரம் ஒழிந்த பதினோருயிர்களும், ஞ், ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள் என்னும் பதினொரு மெய்களுமாம். ஆகவே, மெய்யெழுத்துக்களில் க், ச், ட், த், ப், ற், ங் என்னும் இவை மொழி இறுதியில் வாரா. இவ்வொலிகளை இறுதியிற் பெற்று வரும் பிற பாஷைச் சொற்கள் தமிழில் வருமானால், இறுதி மெய்யோடு ஓர் உகரம் சேர்த்தெழுதுதல் வேண்டும்.

உ - ம்:—பார்க் (Park) - பார்க்கு, பீச் (Beach) - பீச்சு, போர்ட் (Ford)-போர்டு, பிளைமௌத் (Plymouth)- பிளைமௌத்து, சோப் (Soap) - சோப்பு.

குறிப்பு:—தமிழிலும் ஒலிக்குறிப்பு முதலிய சொற்கள் வல்லின மெய்களை ஈற்றில் பெற்று வரும்போது இவ்வாறே உகரச் சாரியை சேர்த்து எழுதப்படும்.

உ - ம்:—பட் பட் என்று—பட்டுப்பட்டென்று.

பயிற்சி

பின் வருவனவற்றைத் திருத்துக:—

(1) பக் பக் என்று எரிகிறது.
(2) நச் நச் என்று பேசாதே.
(3) வாங்பாத் ருசியாய் இருக்கும்.
(4) பொட் பொட் எனக் கண்ணாடி உடைந்தது.
(5) கப் கப் என்று புகை வண்டி ஓடுகிறது.

3. இடையில் மயங்கும் எழுத்துக்கள்: மொழிகளின் இடையிலே மெய்கள் இரு விதமாக மயங்கும். தன்னொடு தான் மயங்குவது உடனிலை மெய்ம்மயக்கம் எனப்படும். பிறிதொடு பிறிது மயங்குவது வேற்று நிலை மெய்ம்மய்க்கம் எனப்படும். மெய்களுள் க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம்,

ய், ல், வ், ள், ற், ன் என்பவை உடனிலையாய் மயங்கும். ங், ஞ், ட், ண், ந், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் என்பவை வேற்று நிலையாய் மயங்கும். க், ச், த், ப் என்னும் நான்கும் வேற்று நிலையாய் மயங்கா. ர், ழ் என்ற இரண்டும் உடனிலையாய் மயங்கா. மற்ற எழுத்துக்கள் இரு முறையிலும் வரும்.

உதாரணம்

### 1. உடனிலை மெய்ம்மயக்கம்

பக்கம், இங்ஙனம், அச்சம், மஞ்ஞை, விட்டம், உண்ணல், அத்தம், செந்நெல், உப்பு, அம்மை, மெய்யன், கல்லல், செவ்வனம், உள்ளம், பற்று, முன்னம்.

### 2. வேற்று நிலை மெய்ம்மயக்கம்

சங்கு, பஞ்சு, காட்சி, வண்டு, பந்து, வம்பு, நெய்தல், பார்வை, எல்வை, அவ்யானை, வாழ்தல், உள்கல், அற்பம் கன்று.

வேற்று நிலை மயக்கத்தில் குற்றம் பல வகையாய் வருதலால், இனி அவை தனித்தனி எடுத்துக் காட்டப்படும்.

பயிற்சி

பின் வருவனவற்றைத் திருத்துக:—

(1) சங்கரன் சஞ்கு ஊதினான்.

(2) அங்ச எழுத்துக்கள் நெஞ்சில் நிலவுக.

(3) வஞ்சகர் எஙகும் சஙசலம் அடைவர்.

### 2. நகர, னகர, ணகரங்கள்

ந, ன, ண என்னும் மூன்று எழுத்துக்களும் மெல்லினத்தைச் சேர்ந்தவை. இவற்றின் அமைந்த ஒலி வேறுபாட்டை நன்கு உணர்தல் வேண்டும்.

1. ஙந்தனர், அந்தணர், மந்திரம் என்னுஞ் சொற்களில் நகர மெய் தகர மெய்யை அடுத்து வருதல் காண்க. இவ்வாறு வருதற்குரிய நகரம் தந்நகரம் என்று வழக்கிற் கூறப்படும்.

[த், ந் என்பவை ஒன்றுக்கொன்று இனமாம்.]

2. ஒன்ற, மன்றம், கன்ற என்னும் சொற்களில் னகர மெய் றகர மெய்யை அடுத்து வருதல் காண்க. இவ்வண்ணம் வருவதற்குரிய னகரம் றன்னகரம் என்று கூறப்படும்.

[ற், ன் என்பவை ஒன்றுக்கொன்று இனமாம்.]

3. வண்டு, கொண்டல், பண்டம் என்னும் சொற்களில் ணகர மெய் டகர மெய்யை அடுத்து வருதல் காண்க. இவ் விதம் வருதற்குரிய ணகரம் டண்ணகரம் என வழங்கப்படும்.

[ட், ண் என்பவை ஒன்றுக்கொன்று இனமாம்.]

குறிப்பு—முன்னளில் றன்னகரத்தையும் தந்நகரத்தையும் உச்சரிக்கும் முறையில் நுட்பமான வேறுபாடுகள் இருந்தன. இந்நாளில் அவை இலக்கண நூல்களால் அறியப்படும். வழக்கில் உச் சாரண பேதம் காணப்படவில்லை. டண்ணகரத்தை உச்சரித்து வேறுபாடு காணலாம்.

பயிற்சி

பின் வருவனவற்றைத் திருத்துக:—

(1) தன்தையும் மைன்தனும் வன்தார்கள்.
(2) இந்ரு குந்ரம் செந்ரோம்.
(3) கொண்டல் வன்னன் கன்டான்.
(4) மந்ரில் நிந்று ஓரம் சொல்லல் நந்று அநறு.
(5) பென்டிரும் மக்களும் கொன்டவன்
(6) அந்தப் பன்து யாருடையது?
(7) பெண் யானைக்குத் தன்தம் இல்லை.
(8) நன்தகோபந் சின்தை மகிழ்ன்தாந்.
(9) அன்டம் பிளக்கக் கொன்டல் முயங்கியது.
(10) வென்பாவிற் புகழேன்தி.

## 3. லகர, ளகர, ழகரங்கள்

ல, ள, ழ என்னும் மூன்றெழுத்துக்களும் இடையினத்தைச் சேர்ந்தவையாம். உச்சரிப்புக் கிரமத்தில் இவற்றுள் அமைந்த வேறுபாடு நன்கு விளங்கும்.

ளகரம் தமிழ் மொழிக்கும் வடமொழிக்கும் பொதுவாய் இருப்பதால் பொது ளகரம் எனப்படும். ழகரம் தமிழ் மொழிக்கே சிறப்பாய் இருப்பதாற் சிறப்பு ழகரம் எனப்படும். லகரம் இவ்விரண்டினின்று நன்கு பிரித்தறியத்தக்க ஒலி வேறுபாடு உடையதாய் இருப்பதால், அதற்குத் தனிப் பெயர் அமையவில்லை.

அழகன், பழமை, செழுமை, உழவு, மழவிடை என்னும் சொற்களில் வரும் ழகரம் சிறப்பு ழகரமாம். அளகம், உள்ளம், தெளிவு, சுளகு, குளகு, மள்ளர், உள்ளம் என்னும் சொற்களில் வரும் ளகரம் பொது ளகரமாம். நிலம், சலம், நலம், அலகு, வலயம், தலை, குலை என்னும் சொற்களில் வருவது லகரமாம். இம்மூன்று எழுத்துக்களுள் லகர ளகரங்கள் உடனிலை, வேற்று நிலை இரு வகையாயும் மயங்கும் என்பதையும், ழகரம் வேற்று நிலையாகவே மயங்கும் என்பதையும் முன் காட்டிய பயிற்சிகளிற் காண்க.

### பயிற்சி

பின் வருவனவற்றைத் திருத்துக :—

(1) வாலை மரத்திற் பளம் பளுத்திருக்கிறது.

(2) கள்ளவர்கலை நாள்தோறும் வணங்குக.

(3) காக்கை உட்காரப் பனம் பளம் விளுந்தது.

(4) அறிவிளார்க்கு அடக்கம் இள்ளை.

(5) காலை மாடு வயளில் உளுதது.

(6) உள்ளத்தில் உழ்ழதை ஒழிக்காமல் உரைக்க.

(7) கொல்லவும் கொடுக்கவும் குறையாது கழ்வி.

(8) மெழ்ழச் சென்றால் வெள்ளல் எவிது.

## 4. ரகர றகரங்கள்

ர, ற என்னும் இரண்டு எழுத்துக்களில், ரகரம் இடையினத்தைச் சேர்ந்ததாதலால், இடையின ரகரம் எனப்படும். றகரம் வல்லினத்தைச் சேர்ந்ததாதலால், வல்லின றகரம் எனப்படும். ரகரம் வடமொழிக்கும் தமிழ் மொழிக்கும் பொதுவாகும். றகரம் தமிழ்க்கே சிறப்பாய் அமைந்ததாம்.

இவ்விரண்டு எழுத்துக்களையும் உச்சரிப்பதில் உள்ள நுட்பமான வேறுபாடுகள் இலக்கண நூல்களில் நன்கு கூறப்படும். இடையின ரகரத்தை நன்கு உச்சரிக்கும் முறை தமிழ் வழக்கில் இல்லை. மலையாள மொழியில் இவ்விருவகை எழுத்துக்களும் இருக்கின்றன. மலையாள மக்கள் இடையின ரகரத்தை உச்சரிக்கும் முறையே, இலக்கண நூல்களுக்குப் பொருந்திய முறையாம்.

தமிழர் வல்லின றகரத்தை வன்மையாக உரப்பியும் இடையின ரகரத்தைச் சிறிது மென்மையாகச் சொல்லியும் உச்சரிக்கின்றனர். இவை சொற்களில் வழங்கும்போது பொருள் வேறுபாடு ஏற்படுவது வெளிப்படை.

### உதாரணம்

| | | | |
|---|---|---|---|
| கரி | —அடுப்புக்கரி | பொரு | —போர் செய் |
| கறி | —காய்கறி | பொறு | —பொறுத்துக்கொள் |
| அரம் | —அராவும் கருவி | அரை | —பாதி |
| அறம் | —தருமம் | அறை | —சிறிய இடம் |
| விரல் | —கைவிரல், கால்விரல் | மரை | —மான் |
| விறல் | —வலிமை | மறை | —வேதம் |
| பரவை | —கடல்(பரந்திருப்பது) | பிரை | —பாலில் தெளிக்கும் மோர் |
| பறவை | —பட்சி (பறப்பது) | பிறை | —சந்திரன் |
| குரங்கு | —வாநரம் | கரை | —ஆற்றங்கரை, குளக்கரை |
| குறங்கு | —தொடை | கறை | —கறுப்பு, களங்கம் |
| இரத்தல் | —யாசித்தல் | உரை | —அர்த்தம் |
| இறத்தல் | —மரணமடைதல் | உறை | —மூடி |

இங்ஙனம் இன்னும் பல உதாரணங்கள் காட்டலாம். ஆயினும், தமிழ் நடை எழுதப் பயில்வோர் ரகர றகர வேறுபாடுகளைப் பல நல்லாசிரியர் உரை நடையைப் பயின்றே அறிய வேண்டும்.

ரகர றகரங்கள் மொழி முதலெழுத்துக்களாய் வாரா என்பதும், ரகரம் வேற்று நிலை மயக்கம் பெறும் என்பதும், றகரம் உடனிலையாயும் வேற்று நிலையாயும் மயங்கும் என்பதும், றகரமெய் மொழி இறுதியில் வாராது என்பதும் முன்னே குறிக்கப்பட்ட, இவ்விதிகளைக்கொண்டு ரகர றகர வேறுபாட்டை ஒருவாறு ஊகிக்கலாம். இவ்விதிகளுள் அடங்காமல் வரும் நுட்பமான வேறுபாடுகளை அறிஞர் ஆட்சியைக்கொண்டே அறிய வேண்டும்

## பயிற்சி

எழுத்துப் பிழைகளைத் திருத்துக :—

(1) விறைவில பாள் கரந்து வறுக.
(2) ஆர்றில் நீற் நிரைந்து பெறுகுகிர்ரது.
(3) நான் கூரியது உன் காதில் ஏரவில்லையா ?
(4) மறத்தின்மேல் ஏரினால் குறங்கு கடிக்கும்.
(5) ஆசிறியர் கூறியதை நான் நன்கு தெறிந்துகொண்டேன்.
(6) இந்தப் பொளப்பு நள்ள பொளப்பு இள்ளை.
(7) னீ இஞ்ஞாநம் சொள்வது நன்னா இள்ளை.
(8) ஞாந் யெந்நாள் ஆந வறைக்கும் பாடு படுகுரேந்.
(9) வீந் காளம் களிக்காதே.
(10) நாளு நாலைக்கு மின்னெயே ஞாந் குடுத்திட்டேன்.

## III. நிறுத்துக் குறிகள்
## (Punctuations)

நாம் வாசிக்கும்போது வாக்கியங்களின் பொருள் நன்கு விளங்கும் பொருட்டுப் பொருத்தமான இடங்களில் நிறுத்திப் படிக்க வேண்டும். அப்படி நிறுத்த வேண்டிய இடங்களை உணர்த்தும்பொருட்டுச் சில குறிகளை இந்நாளிற் கையாண்டு வருகிறோம். அவற்றிற்கு நிறுத்துக்குறிகள் என்னும் பெயர் வழங்குகிறது. செய்யுட்களை எழுதுங்காலையிலும் அவற்றை உபயோகித்தல் நலம்.

1. , காற்புள்ளி (Comma): இங்கு ஒரு மாத்திரை அளவு நிறுத்த வேண்டும்.
2. ; அரைப்புள்ளி (Semi-Colon): இங்கு இரண்டு மாத்திரை அளவு நிறுத்த வேண்டும்.
3. : முக்காற்புள்ளி (Colon): இங்கு மூன்று மாத்திரை அளவு நிறுத்த வேண்டும்.
4. . முற்றுப்புள்ளி (Full Stop); இங்கு நான்கு மாத்திரை அளவு நிறுத்த வேண்டும்.
5. ? வினாக்குறி (Mark of interrogation): இது கேள்வியை உணர்த்தும் குறியாம். இங்கும் நான்கு மாத்திரை நேரம் நிறுத்த வேண்டும்.
6. ! வியப்புக்குறி (Mark of Exclamation); இஃது ஆச்சரியத்தை உணர்த்தும் குறியாம். இங்கு மூன்று அல்லது நான்கு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.
7. "..." மேற்கோள் குறிகள் (Quotation Marks): எதையேனும் பிறர் சொல்லியதுபோலச் சொல்ல வேண்டியிருப்பின், இக்குறிகளை உபயோகிக்கவேண்டும்.

குறிப்பு :—கண்ணிமைப் பொழுதும் கைந்நொடிப் பொழுதும் ஒரு மாத்திரைக்குரிய கால அளவாம்.

இக்குறியீடுகள் பின் வரும் வாக்கியங்களில் முறைப் படி அமைந்திருப்பது காண்க:—

குகன் இராமபிரானிடத்து மிகுத்த அன்புள்ளவன். அத னல், தந்தையின் கட்டளையை வேத வாக்காக மதித்துக் காட்டுக் குச் சென்ற வள்ளலை மீண்டும் அழைத்து வரத் தவ வேடம் புனைந்து வந்த பரதனை, அவன் முதலிற் சந்தேகித்துக் கூறுவான்:

“ எதன்பொருட்டு இளவரசனாகிய இப்பரதன் இங்குற்றான்! இவனுக்கு நாட்டைக் கொடுத்து, நாம் வாழும் காட்டுக்கு வந்த நம் வள்ளலை இவன் தொடர்ந்து வந்தது, நல்லெண்ணத்தோடு ராது. காட்டகத்தே சூழ்ச்சி செய்த வீரர், ‘இங்கும் அது செய்யலாம்,’ என எண்ணிக்கொண்டனரோ! நான் ஒருவன் இங்கு இருக்கின்றேன் என்பதை இவர் அறியார்போலும்! வில்லைப் பிடித்துப் போர் செய் யும் தொழிலில், வேடரை இவர் வென்றுவிடுவரோ! விற்றொழில் எம் குலத்தொழில் என்பதை இன்று இவர் அறியச் செய்வேன்!”

இம்மனம் வெகுண்டு கூறிய குகன் பரதனை அண்மி, துய ரமே உருவாய் இருக்கும் அவனது நிலையையும் தவ வேடத்தையும் கண்டு, “எம்பெருமான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு!” என்று கூறினன்.

## பயிற்சி

கீழ் வரும் வாக்கியங்களில் இடங்களுக்கேற்ற குறியீடுகளை அமைத்துக் காட்டுக:—

1. *திரௌபதி கண்ணனை நோக்கிப் பின் வருமாறு கூறி னள் ஆபத்பாந்தவா கண்ணில்லான் மகன் எனது கூந்தலைப்பற்றி இழுத்து அரசவையில் என்னைப் பரிபவப்படுத்திய அந்நாளில் பாண்டவர் அக்காட்சியைப் பார்த்த வண்ணம் வாளாவிருந்தனர் அன்றும் என் வேண்டுகோளைச் செவிக்கொண்டு என் மானம்*

அழியாது காத்தவன் நீயே இவர்கள் அவன்பால் இரந்து ஐந்து ஊர்கள் பெற்று வாழ்ந்தால் எனது அவிழ்ந்த கூந்தலை நான் எவ்வாறு முடிப்பேன்.

2. பகைவர் தம்மை வளைந்துகொள்ள அப்பொழுது உயிர் பிழைக்க எண்ணிய கலிங்க வீரரிற் சிலர் தம் வில் நாண் கயிற்றை அறுத்துப் பூணூலாகத் தரித்துக்கொண்டு ஐயா யாங்கள் வேதியர் காசிக்கு யாத்திரையாக வந்தோம் இங்குத் தங்கி இவ்வாறு அகப்பட்டுக்கொண்டோம் எங்களைக் காப்பாற்ற வேண்டும் என்று கூறிப் பிழைத்தனர் வேறு சிலர் இரத்தத்திற்றோய்ந்து செந்நிறம் உடையதாய் இருக்கும் ஆடையை இரண்டாக்கி ஒன்றை உடுத்து மற்றொன்றைப் போர்த்துக்கொண்டவராய்த் தலையை முண்டனம் செய்துகொண்டு ஐயா யாங்கள் கலிங்கரல்லேம் சாக்கியராவேம் எனக் கூறித் தப்பினர்.

3. சோழர் பெருமானுன குலோத்துங்கன் ஒரு நாள் புலவர்களோடு அளவளாவிக்கொண்டிருக்கையில் அவர்களை நோக்கிப் புலவீர் யான் இப்போது மூன்று கேள்விகள் கேட்க விரும்புகின்றேன் நீவிர் அவற்றிற்குத்தக்க விடையளித்தல் வேண்டும் என்றான் புலவர்கள் அவ்வாறேயாகுக என்றார்கள் அதன்மேல் அரசன் புலவீர் நிலத்திலும் பெரியது யாது கடலினும் பெரியது யாது மலையினும் பெரியது யாது என்ற விளுக்களை விடுத்தான் விடுக்கவே புலவர்கள் ஒன்றும் தோன்றாது விழித்தனர் அவர்கள் என்ன இவ்விளுக்கள் நூதனமாகக் காணப்படுகின்றன. இவற்றிற்குத் தக்கவாறு விடையளிப்பது எங்ஙனம் என்று நினைத்து வாட்டம் அடைந்து வாளாவிருந்தார்கள் அரசனும் புலவர்கள் விடை இறுக்கமாட்டாது விழிப்பதைக் கண்டு மீண்டும் அவர்களைக் கேட்க மனமற்றவனாயிருந்தான்.

## IV. வாக்கிய அமைப்பு
## (Structure of Sentences)

வாக்கியம் என்பது ஒரு பூரணமான கருத்தை வெளியிடும் சொற்றொடராம். இது பல திறப்படும். பின் வரும் பல பயிற்சிகளிலும் வாக்கிய வேறுபாடுகளைக் காணலாம் :

| | எழுவாய் | பயனிலை |
|---|---|---|
| 1. | இராமன் | படிக்கிறான். |
| 2. | சூரியன் | (ஒளி) தருகிறான். |
| 3. | கிருஷ்ணன் | தூங்குகிறான். |
| 4. | மாடு | (வயலில்) உழுகிறது. |
| 5. | சுந்தரம் | (கோவிலுக்குப்) போகிறான். |
| 6. | வெள்ளம் | (எங்கும்) பரவியது. |
| 7. | சோம்பியிருப்பது | (வறுமையை) வருவிக்கும். |
| 8. | ஆகாய விமானம் | (விண்ணில்) பறந்தது. |
| 9. | பொறுமையே | பூஷணமாம். |
| 10. | முருகன் | சிறியவன். |
| 11. | கண்ணன் | (ஆய்ப்பாடியில்)வளர்ந்தான். |
| 12. | கம்பர் | (இராமாயணம்) பாடினார். |

ஒவ்வொரு வாக்கியத்திலும் இரண்டு முக்கியமான பகுதிகள் உண்டு என்பதை அறிய வேண்டும். முதற்பகுதி எழுவாய் எனப்படுகிறது ; இரண்டாம் பகுதி பயனிலை எனப் படுகிறது. வாக்கியத்தில் எப்பொருளின் செய்தி கூறப்படுமோ, அதன் பெயர் எழுவாயாம். என்ன செயல் நிகழ்வதாகக் கூறப்படுமோ, அது பயனிலையாம். எழுவாய் என்பதற்கு, 'முதலில் நிற்பது' என்பது பொருள். பயனிலை என்பதற்கு 'எழுவாயினால் நிகழும் தொழிற்பயன் நிலை பெறுதல்,' என்பது பொருள். மேலே காட்டிய வாக்கியங்களில் பயனிலையை ஒட்டி வேறு சில சொற்கள் வந்திருப்பதையும் காணலாம்.

### பயிற்சி

பின் வரும் வாக்கியங்களில் உள்ள எழுவாய் பயனிலைகளைக் குறிப்பிடுக:—

(1) முருகன் பள்ளிக்கூடம் போகிறான்.
(2) திருவள்ளுவர் திருக்குறள் இயற்றினார்.
(3) ஆறு ஓடுகிறது.
(4) உன்னுடைய நடத்தை நன்றாய் இல்லை.
(5) சுந்தரன் கண்கள் சிவந்திருக்கின்றன.
(6) படிப்பும் உழைப்பும் பெருமை விளைக்கும்.
(7) கல்வி அறிவு ஒழுக்கம் உள்ளவர் இனிய சொற்கள் பேசுவர்.
(8) பொறுமையே பெருமை தரும்.

எழுவாய் பயனிலைகள் தனிச் சொற்களாய் இல்லாமல் வேறு சில சொற்களுடன் சேர்ந்து வருதலும் உண்டு. அங்ஙனம் வரும் சொற்கள் எழுவாய் பயனிலைகளின் பொருளை நன்கு விளக்க உதவி புரியும். சில வாக்கியங்களில் ஒரே எழுவாய்க்குப் பல பயனிலைகளும், ஒரே பயனிலைக்குப் பல எழுவாய்களும் வருவது உண்டு.

### உதாரணம்

1. நன்கு முயன்று உழைப்பது எவர்க்கும் வெற்றி விளைக்கும்.
2 இராமன் ஓடுகிறான்; விளையாடுகிறான்.
3. பரதனும் சுமந்திரரும் கங்கைக்கரையை அடைந்தனர்.

இவற்றுள் முதல் வாக்கியத்தில் 'உழைப்பது' எழுவாய். அதனைத் தழுவி 'நன்கு முயன்று' என்னும் சொற்கள் வந்தன. 'விளைக்கும்' என்பது பயனிலை. அதனைத் தழுவி 'எவர்க்கும் வெற்றி' என்னும் சொற்கள் வந்தன. இரண்டாவது வாக்கியத்தில், 'இராமன்' என்னும் எழுவாய்க்கு 'ஓடுகிறான், விளையாடுகிறான்' என்னும் இரு பயனிலைகள் வந்தன. மூன்றாவது வாக்கியத்தில் 'பரதன், சுமந்திரர்' என்னும் இரண்டு சொற்களும் எழுவாய்கள் ஆயின. பெயரையும் வினையையும் தழுவி வரும் சொற்கள் பல திறப்படும்.

| | எழுவாய் | தழுவு சொல் | பயனிலை | தழுவு சொல் |
|---|---|---|---|---|
| 1. | நீர்ப்பெருக்கு | புதிய | பரவியது | விரைந்து |
| 2. | கண்ணன் | வெண்ணெயுண்ட | விளையாடினன் | யமுனையில் |
| 3. | தூங்கியவன் | மயங்கி | விழிப்பான் | மருண்டு |
| 4. | ஆடுவது | மயில் | தெரிவிக்கும் | மழை வரவு |
| 5. | பாடுவது | குயில் | குறிக்கும் | இளவேனில் |
| 6. | நெருப்பு | பந்தரிற் பற்றிய | பரவியது | வீடு எங்கும் |
| 7. | கம்பர் | கல்வியிற் பெரிய | அற்றவர் | கர்வம் |
| 8. | ஒட்டக்கூத்தர் | புலவர் தலைவராகிய | மகிழ்ந்தார் | புகழேந்தி வருந்தக்கண்டு |
| 9. | தண்ணீர் | காவிரியின் | உதவுகிறது | தாய்போல |
| 10. | ஆறுகளும் | நீர் இல்லாத | உண்டு | நம் நாட்டில் |

மேற்காட்டிய எழுவாய் பயனிலைகள் தழுவு சொற்களோடு பின்வருமாறு பொருந்தி வரும்.

1. புதிய நீர்ப்பெருக்கு விரைந்து பரவியது.
2. வெண்ணெயுண்ட கண்ணன் யமுனையில் விளையாடினன்.
3. மயங்கித் தூங்கியவன் மருண்டு விழிப்பான்.
4. மயில் ஆடுவது மழை வரவு தெரிவிக்கும்.
5. குயில் பாடுவது இளவேனில் குறிக்கும்.
6. பந்தரிற் பற்றிய நெருப்பு வீடு எங்கும் பரவியது.
7. கல்வியிற் பெரிய கம்பர் கர்வம் அற்றவர்.
8. புலவர் தலைவராகிய ஒட்டக்கூத்தர் புகழேந்தி வருந்தக் கண்டு மகிழ்ந்தார்.
9. காவிரியில் தண்ணீர் தாய்போல உதவுகிறது.
10. நீர் இல்லாத ஆறுகளும் நம் நாட்டில் உண்டு.

இவ்வாக்கியங்களிலே எழுவாய் பயனிலைகளைத் தழுவி வந்த சொற்கள் அவற்றின் பொருளை விளக்க அவசியமாய்

இருப்பது காணலாம். வாக்கிய அமைதிக்குத் தழுவு சொற்கள் எழுவாய்க்கும் பயனிலைக்கும் முன் இருப்பதே தகுதியாம். ஆயினும், இங்கு அவை எழுவாய் பயனிலைகளைச் சார்ந்தே வாக்கியங்களிற் பயன் பெறுவது விளங்கும் வண்ணம் பின் வைத்துக் காட்டப்பட்டன.

**பயிற்சி**

**பின் வரும் வாக்கியங்களில் உள்ள தழுவு சொற்களை எடுத்தெழுதுக :—**

1. இரவலர்க்கு இடுவது இறைவனுக்கு இடுவதே ஆகும்.
2. சுந்தரன் தமிழ்ப் பேச்சுத் தெலுங்குபோல இருக்கிறது.
3. அறிவு படைத்த மனிதன் ஒவ்வொருவனும் தனது உயர் நிலைக்குத் தானே காரணன் ஆவன்.
4. பத்துக்குதிரை பூட்டினாலும் அலை நிறைந்த கடலில் தேர் ஓடாது.
5 ஆயிரவர் முயன்றாலும் நாவாய்கள் நிலத்தில் மிதந்தோட மாட்டா.

பயனிலையாய் வரும் வினை, செயப்படுபொருள் பெற்றும் பெறாமலும் வருவது உண்டு. செயப்படுபொருள் பெற்ற வினை செயப்படுபொருள் குன்றிய வினை எனப்படும். மற்றது செயப்படுபொருள் குன்றா வினை எனப்படும்.

| | எழுவாய் | பயனிலை | செயப்படுபொருள் |
|---|---|---|---|
| 1. | சங்கரன் | படிக்கிறான் | புத்தகத்தை |
| 2. | வேலன் | வெட்டுகிறான் | மரத்தை |
| 3. | கிளிப்பிள்ளைகள் | கொத்துகின்றன | மாம்பழத்தை |
| 4. | வேப்பமரம் | சொரிகின்றது | பூக்களை |
| 5. | தட்டான் | உருக்குகிறான் | தங்கத்தை |
| 6. | விமானி | இயக்குகிறான் | விமானத்தை |
| 7 | குழந்தை | பேசுகிறது | மழலை மொழிகளை |

கட்டத்தில் உள்ள வாக்கியங்களில் செயப்படுபொருள் இயல்பாய் அமைந்திருப்பதால், பயனிலைகள் செயப்படு பொருள் குன்றா வினைகள் ஆயின. 'இராமன் வருகிறான்,' 'நதிபாய்கிறது,' என்பனபோன்ற வாக்கியங்களில் செயப்படு பொருள் அமையவே இடம் இல்லாமையால், பயனிலைகள் செயப்படுபொருள் குன்றிய வினைகள் ஆயின. தமிழ் நடையில் செயப்படுபொருள் எழுவாய்க்கும் பயனிலைக்கும் இடையில் இருக்கும்.

## பயிற்சி

பின் வரும் வாக்கியங்களில் உள்ள பயனிலைகள் செயப்படு பொருள் குன்றா வினைகளா, குன்றிய வினைகளா என்பதைத் தெரிவிக்க :—

1. உணவு உடம்பை வளர்க்கும். 2. மழை பெய்கிறது. 3. கல்வி அறிவைத் தரும். 4. சோம்பல் சுகத்தைக் கெடுக்கும். 5. கப்பல் கடலில் ஓடும். 6. பெருமீன்கள் சிறு மீன்களைத் தின்னும். 7. என் எண்ணெய் தரும். 8. நான் வருகிறேன்.

எழுவாய் பயனிலைகளுக்குத் தழுவு சொற்கள் அமைந்தது போலச் செயப்படுபொருட்கும் தழுவு சொற்கள் அமையும். அவற்றை ஊகித்து உணர்ந்துகொள்க. செயப்படு பொருள் குன்றா வினைகள் செய்வினை, செயப்பாட்டுவினை என மாறி வருவதும் உண்டு.

## உதாரணம்

1. சங்கரன் புத்தகத்தைப் படிக்கிறான். —செய்வினை
2. புத்தகம் சங்கரனால் படிக்கப்படுகிறது. —செயப்பாட்டுவினை
3. வேலன் மரத்தை வெட்டுகிறான். —செய்வினை
4. மரம் வேலனால் வெட்டப்படுகிறது. —செயப்பாட்டுவினை
5. விமானி விமானத்தை இயக்குகிறான். —செய்வினை
6. விமானம் விமானியால் இயக்கப்படுகிறது. —செயப்பாட்டுவினை

செய்வினைப் பயனிலை பெற்ற வாக்கியத்தில் எழுவாயாக இருந்த சொல், செயப்பாட்டுவினை வாக்கியத்தில் மூன்றும் வேற்றுமை பெற்று இடையில் வரும். செய்வினை வாக்கியத் திற் செயப்படுபொருளாய் இருந்த சொல், செயப்பாட்டுவினை வாக்கியத்தில் எழுவாயாய் வரும். மேலே காட்டிய வாக்கியங் களில் இம்முறையைக் காண்க.

### பயிற்சி

செய்வினையைச் செயப்பாட்டுவினையாகவும், செயப்பாட்டு வினையைச் செய்வினையாகவும் மாற்றுக:—

1. வேதங்கள் உண்மைப் பொருளை விளக்குகின்றன
2. தத்துவப்பொருள் நல்லோர்களால் பரப்பப்பட்டது.
3. அறம் செய்வோன் இன்பத்தையே அடைவான்.
4. புண்ணிய பாவங்கள் செய்தோரைத் தொடரும்.
5. தெய்வ சிந்தனை துயரத்தைப் போக்கும்.
6. பகவற்கீதை கிருஷ்ணனால் அருச்சுனனுக்கு உபதேசிக்கப் பட்டது.
7. சிவபிரான் சாக்கியராற் பூசிக்கப்பட்டார்.
8. கண்ணப்பர் சிவபெருமானுக்குத் தம் கண்களைக் கொடுத்த!!
9. ஆகாய விமானம் அமெரிக்கரால் அமைக்கப்பட்டது.
10. தென்கடல் நீர் அகத்தியராற் குடிக்கப்பட்டது.
11. தமிழ் மொழி கம்பரால் வளப்படுத்தப்பட்டது
12. திருவள்ளுவர் திருக்குறளை இயற்றியருளினர்.

## V. தனி வாக்கியமும் தொடர் வாக்கியமும் (Simple and Complex Sentences)

மேற்காட்டிய இரண்டு அல்லது மூன்று உறுப்புக்களைக்கொண்ட வாக்கியத்தைத் தனி வாக்கியம் எனலாம். பல பொருள்களை முன்னும் பின்னும் சேர்த்துக்கொண்டு பெருகி வரும் வாக்கியத்தைத் தொடர் வாக்கியம் என்றும், சேர்க்கை வாக்கியம் என்றும் கூறலாம். தொடர் வாக்கியங்களிலே எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஒவ்வொன்றே யாக இருப்பினும், அவற்றைத் தழுவி வரும் சொற்றொடர்கள் வாக்கியத்தைப் பெருக்கிக்காட்டும்.

### 1. தனி வாக்கியங்கள்

1. இராமன் வருகிறான்.
2. கிருஷ்ணன் கடவுளை வணங்குகிறான்.
3. மழை பெய்கிறது.
4. பசு பால் கொடுக்கிறது.

இவ்வாக்கியங்கள், வேறு தொடர்ச்சியின்றி, எழுவாய் பயனிலை என்னும் அளவில் முடிவு பெற்றிருப்பது காண்க. செயப்படுபொருளும் தனி வாக்கியத்தின் உறுப்பாகும் என்பதை மேலே காட்டிய வாக்கியங்களிற் காண்க.

### 2 தொடர் வாக்கியங்கள்

1. கல்வியில் தேர்ந்ததனால் மிக்க புகழ் படைத்த புலவர் ஒருவர், தம் நாட்டில் மாத்திரம் அன்றி, அயல் நாடுகளிலும் பாராட்டப்படுகிறார்.

2. மனத்திலே தோன்றிய எண்ணமெல்லாம் நடக்க விரும்புகின்ற ஒருவனை, உலகவுயிர்களின் நன்மையையே நாட்டமாகவுடைய கடவுள், தம்முடைய நியாய சபையில் விசாரித்துத் தக்கவாறு தண்டித்து, நல்வழியில் திருப்புவார்.

3. உள்ளத்தை நன்னிலையில் நிறுத்த விரும்பும் மனிதன் திரிகரணங்களையும் ஒடுக்கி உணர்ந்த உண்மையைப் பெரியோர் சிறியோர் என்ற பேதம் கருதாது, எவர் முன்னிலையிலும் பேச வேண்டும்.

| | தழுவுசொல் தொடர் | எழுவாய் | தழுவு சொல் தொடர் | செயப்படு பொருள் | தழுவு சொல் தொடர் | பயனிலை |
|---|---|---|---|---|---|---|
| 1. | கல்வியில் தேர்ந்ததனால் மிக்க புகழ் படைத்த | புலவர் ஒருவர் | | | தம் நாட்டில் மாத்திரம் அன்றி, அயல் நாடுகளிலும் | பாராட்டப் படுகிறார். |
| 2. | உலக உயிர் களின் நன்மை யையே நாட்ட மாக உடைய | கடவுள் | மனத்திலே தோன்றிய வண்ணமெல் லாம் நடக்க விரும்புகிற | ஒருவனை | தம்முடைய நியாய சபை யிலே விசாரித் துத் தக்கவாறு தண்டித்து, நல் வழியில் | திருப்புவார். |
| 3. | உள்ளத்தை நன்னிலையில் நிறுத்த விரும் பும் | மனிதன் | திரிகரணங்க ளையும் ஒடுக்கி உணர்ந்த | உண்மையை | பெரியோர் சிறி யோர் என்ற பேதம் கரு தாது, எவர் முன்னிலையி லும் | பேச வேண்டும். |

தொடர் வாக்கியங்களில் உள்ள எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்களையும், அவற்றைத் தழுவும் சொற்களை யும் முன் காட்டிய கட்டத்திற் கண்டு தெளிக.

பயிற்சி

பின் வரும் வாக்கியங்களில் உள்ள தழுவுதொடர் மொழி களை எடுத்தெழுதுக:—

1. கல்வி அறிவு பெறாத மனிதன் மனம், மண்ணும் மணிக்கு நிகராகும்.

2. இராமபிரான் தனிமையில் நின்று போர் புரியும் திறத் தைக் கண்டு, பல்லாயிரம் படைஞருடன் போர்க்கு வந்த கர தூட ணர், நெஞ்சு நடுங்கினர்.

3. துறவி வேடம் பூண்டு தனது இயற்கைத் தோற்றத்தை மறைத்து வந்த இராவணன், இராம லக்குமணரைப் பிரிந்து தனியே இருந்த சீதையைத் துணையற்ற பெண் மானிடம் புலி நெருங்குவது போல நெருங்கினன்.

குறிப்பு:—தழுவுதொடர் மொழிகள பெயரெச்சம் போலப் பெயர்ச்சொல்லைத் தழுவுதலும், வினையெச்சம்போல வினைச் சொல்லைத் தழுவுதலும், பெயர்ச்சொல் போலவே வருதலும் உண்டு. இவற்றை மேலே காட்டிய வாக்கியங்களிற் காண்க.

நீண்ட வாக்கியங்கள்

வாக்கியங்கள் இயன்றவளவு சுருக்கமாக அமைவதே நலம். அதற்காக ஒரு கருத்தை விளக்க நான்கைந்து வாக் கியங்களை அமைத்தலாகாது. தமிழ் மொழியில் உரை நடை நன்கு அமையாதிருந்த காலத்திலே முதன்முதலாக அதனை எழுதப் புகுந்த சிலர், பெரும்பாலும் செய்யுட்கள் செய்வதிலேயே பயிற்சி பெற்றவராகையால், நீண்ட வாக்கி யங்களையே எழுதுவாராயினர். ஒரு வாக்கியத்திற் கருத்தை

விளக்க அறியாது நான்கைந்து வாக்கியங்கள் அமைப்பது குற்றம் ஆவது போலவே, இங்ஙனம் நீண்ட வாக்கியங்கள் அமைப்பதும் குற்றமாம். விநோதரச மஞ்சரியில் உள்ள ஒரு வாக்கியம் இங்கே உதாரணமாகக் காட்டப்படும்:

"தேடுங்கால் கல்வி வரையறைப்படாததனால், அதனை முற்றக் கற்பதற்கு ஆயுள் நீடித்திராமையாலும், கற்பவர் சரீரமோ பிணிக்கெல்லாம் பிறப்பிடமாகையாலும், முடியாமையால் கை விட்டு விடாமலும், அல்லது 'கண்டது கற்கப் பண்டிதனாவான்' என்பதோர் சாமானிய வாசகத்தை நம்பி, கண்டதெல்லாம் ஆகிய மூடர்களுக்கேற்ற தந்தனப்பாட்டும் ரஞ்சனக்கூத்தும் உள்ளிட்ட பின் கல்வி கற்றுப் பொழுது போக்காமல், நீரைப் பிரித்துப் பாலைப் பருகும் அன்னப்பறவை போல, சாஸ்திரங்களில் விசேஷ சாமானியங்களை யூகித்துச் சாராமிசம் தெரிந்து, இகபர சாதனமாய் எவற்றினும் விழுமிதாகிய மெய்ம்மைக் கல்வியையே உயிர்போலப் பெரும்பொருளாக விரும்பி, இலக்கிய இலக்கண சம்பிரதாயம் தெரிந்த நல்லாசிரியரைத் தேடியடைந்து, அவர் சந்நிதானத்திற் செல்வர் முன் வறியர் ஏக்கற்றிருப்பதுபோல இருந்து, குறிப்பறிந்து ஒழுகி, அவர் கருணை கூர்ந்து கற்பிக்க, முறை வழுவாமலும் நெறி பிறழாமலும், பேய்போற் பேருண்டியை இச்சியாமலும் பெரியம்மை பிரசன்னமானாற்போலப் பெருந்தூக்கம் தூங்காமலும், அம்பலம் தீப்பட்டது என்றாலும், 'அதைத்தான் சொல்வானேன்?' என்று கெட்டொழிந்த முழுச்சோம்பரைப்போலச் சோம்பியிராமலும், அனைவரும் தன்னைத 'தம்பி பள்ளிக்கூடத்தான்,' என்று சொன்னாற் போதும் என்று நினைத்துப் பிரதிஷ்டைக்காகக் குழப்புவான்போல விளையாட்டினாற் குழப்பிவிடாமலும், பலகாலும் மிக முயன்று ஐயந்திரிபற அமையக் கற்கவேண்டும்."

இஃது ஒரு வாக்கியம். இதைக்காட்டிலும் நீண்ட வாக்கியங்கள் விநோதரச மஞ்சரியிற் பல உள. இம்மாதிரியான வாக்கியங்கள் புதுமைத் தமிழ் நடைக்குப் பொருந்துவன ஆகா. சிறந்த அனுபவம் உடையவர்களுக்குங்கூட, வாக்கி

யங்கள் நீண்ட பிறகு எடுப்பிற்குத் தக்க முடிப்பு அமைப்பதில் மயக்கம் உண்டாய்விடும். அதனால், இம்முறையிற் புகுந்த சிறுவர் நிச்சயமாகத் தவறு செய்ய இடமுண்டாகும் என்பது கூறவும் வேண்டுமோ!

எந்த எச்சத்தை எதனோடு இணைப்பது என்பதிலேயே சந்தேகம் தோன்றி மனத்தில் நினைத்தபடி எல்லாம் முடித்து, வாக்கிய உருவம் அமையாமல் ஒரு சொற்கூட்டத்தைப் படைத்த அளவில் நிற்க நேரிடும். ஆகவே, சிறு வாக்கியங்களாக எழுத முயல்வதே சிறப்பாம். இனி அநாவசியமாக வாக்கியங்களைப் பெருக்கும் குற்றத்தைப் பற்றியும் சிறிது கூறுவோம்.

"இராமச்சந்திரன் மாலைக் காலத்திலே பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பியதும், புஸ்தகங்களை வீட்டில் ஒழுங்காக வைத்துவிட்டுச் சிறிது சிற்றுண்டி உட்கொண்டு, பிறகு விளையாடப் போனான்," என்பது ஒரு கருத்தை வெளியிடும் ஒரு வாக்கியமாகும். இதனையே,

"1. மாலைக்காலம் ஆயிற்று. 2. இராமச்சந்திரன் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பினான். 3. உடனே புஸ்தகங்களை வீட்டில் ஒழுங்காக வைத்தான். 4. சிறிது சிற்றுண்டி உட்கொண்டான். 5. பிறகு விளையாடப் போனான்."

என்று ஐந்து வாக்கியங்களாக எழுதுவாரும் உளர். ஆனால், இவ்வாறு எழுதுவது கால விரயத்துக்கு இடமாவதோடு இலக்கிய அமைதிக்குப் பொருந்தாத ஒரு புதுமைத் தமிழ் நடை உண்டாகவும் காரணமாகிறது. இயன்றவரை சுருங்கச் சொல்லி விளங்க வைத்தலே நலமாகையால், ஒரு வாக்கியத்தில் அமையக்கூடிய ஒரு கருத்தை, ஐந்து வாக்கியங்களாற் கூறுவது பொருந்தாததாகும்.

## சேர்க்கை வாக்கியம் அமைத்தல்

### மாதிரிப் பயிற்சி

| தனி வாக்கியங்கள் | சேர்க்கை வாக்கியங்கள் |
| --- | --- |
| 1. சுந்தரனுக்குத் தெலுங்கு மொழி பேசத் தெரியும். அவனுக்குத் தெலுங்கு எழுதத் தெரியும். | 1. சுந்தரனுக்குத் தெலுங்கு மொழி பேசவும் எழுதவும் தெரியும். |
| 2 வால்மீகி முனிவர் வடமொழியில் இராமாயணம் இயற்றினர். அவர் ஆதி கவி எனப்படுகிருர். | 2. வடமொழியில் இராமாயணம் இயற்றிய வால்மீகி முனிவர் ஆதி கவி எனப்படுகிருர். |

### பயிற்சி

பின் வரும் சிறு வாக்கியங்களைத் தொடர் வாக்கியங்களாக அமைக்க :—

1. கோதுமை அமெரிக்க ஐக்கிய நாடுகளில் விளைகிறது அது ருஷ்யாவில் விளைகிறது. இந்தியாவிலும் விளைகிறது.

2. பசுவினிடமிருந்து நாம் பாலைப் பெறுகிருேம். மோர், தயிர், வெண்ணெய், நெய் என்னும் பொருள்களையும் பசுவிடமிருந்து பெறுகிருேம்.

3. வாழை மரம் நமக்குக் காய்களை உதவுகிறது. அது பழங்கள் தருகிறது. பூவையும் நமக்குக் கொடுக்கிறது.

4. கோபாலகிருஷ்ண கோகலே இந்திய ஜனங்களால் மிகவும் விரும்பப்பெற்ருர். ஆங்கிலேயர் அபிமானத்துக்கும் அவர் பாத்திரராயிருந்தார்.

ஒரு வாக்கியத்தில் தெரிவித்தற்குரிய கருத்துக்களை இயன்றவளவு ஒரே நெறியில் அமைத்தல் நலம். பெயரெச்ச வினையெச்சங்களைப் போன்று வரும் பன்மொழித் தொடர்களை அமைத்து நம் கருத்தை விளக்கலும் நன்று ஆகும்.

### மாதிரிப் பயிற்சி

| | |
|---|---|
| *அவனுக்கு விரைவில் தண்ணீர் கொடு. இல்லாவிட்டால், அவன் இறந்து போவான்.* | *அவனுக்கு விரைவில் தண்ணீர் கொடாவிடில், அவன் இறந்து போவான்.* |

### பயிற்சி

**பின் வரும் வாக்கியங்களைச் சேர்த்து அமைக்க :—**

1. *நான் மரத்தில் ஏறிக்கொண்டேன். அவ்வாறு செய்யாதிருப்பேனாகில், கரடி என்னைக் கொன்றிருக்கும்.*

2. *நாம் பாடங்களை நன்றாகப் படிக்கவேண்டும். அல்லாவிடில் உபாத்தியாயர் கோபிப்பார்.*

### மாதிரிப் பயிற்சி (வேறொரு வகை)

| | |
|---|---|
| *மணி ஐந்து அடித்தது. நான் படுக்கையினின்று எழுந்து, கடவுளை மனமார வாழ்த்தித் தொழுதேன்.* | *மணி ஐந்து அடித்ததும் நான் படுக்கையினின்றெழுந்து, கடவுளை மனமார வாழ்த்தித் தொழுதேன்.* |

### பயிற்சி

**இம்முறைப்படி பின் வரும் வாக்கியங்களை அமைக்க :—**

1. *சூரியன் மறைந்தான். உழவர் தம் வேலைகளை நிறுத்திப் புறப்பட்டனர்.*

2. *மாணிக்கம் தூங்கி விழித்தான். பாம்பு ஒன்று பக்கத்திலே படமெடுத்து ஆடிக்கொண்டிருந்தது. அவன் அதைக் கண்டு பயந்தான்.*

3. *தலைமை ஆசிரியர் வகுப்புக்கு வந்தார். மாணாக்கர் அனைவரும் எழுந்து நின்றனர்.*

4. *முருகன் பள்ளிக்கூடத்துக்கு வந்தான். பாடங்களை நன்றாகப் படித்தான். அன்று நடந்த பரீட்சையில் தேறினான்.*

## மாதிரிப் பயிற்சி (வேறொரு வகை)

| | |
|---|---|
| 1. ஒரு புலவர் இராமாயணப் பிரசங்கம் செய்தார். மூடன் ஒருவன் அதைக் கேட்டுக்கொண்டிருந்தான்; பிரசங்கம் முடிந்து திரும்பும் போது, "சீதைக்கும் இராமனுக்கும் என்ன சம்பந்தம்?" என்று அருகில் இருந்தவர்களைக் கேட்டான். | 1. மூடன் ஒருவன் ஒரு புலவர் செய்த இராமாயணப் பிரசங்கத்தை முடிவு வரையில் கேட்டிருந்தும், திரும்பும் போது, "சீதைக்கும் இராமனுக்கும் என்ன சம்பந்தம்?" என்று அருகில் இருந்தவர்களைக் கேட்டான். |
| 2. மாணிக்கம் தமிழ் கற்பதில் மிக்க விருப்பம் உள்ளவன். அவன் இருந்த ஊரில் தமிழ்ப்புலவர் ஒருவர் இருந்தார். புலவர்க்குத் தக்க திரவிய உபகாரம் செய்ய அவன் சக்தியில்லாதிருந்தான். அதனால், அவன் தமிழ் கற்கக் கூடாதவனானான். | 2. மாணிக்கம் தமிழ் கற்பதில் மிக்க விருப்பமுள்ளவனாய் இருந்தும், அவன் இருந்த ஊரில் தமிழ்ப்புலவர் ஒருவர் இருந்தும், அவருக்குத் தக்க திரவிய உபகாரம் செய்ய அவன் சக்தியில்லாதவனாயிருந்ததால், தமிழ் கற்கக் கூடாதவனானான். |

### பயிற்சி

**பின் வரும் சிறு வாக்கியங்களைச் சேர்த்துச் சேர்க்கை வாக்கியங்களாக அமைக்க :—**

1. அரிச்சந்திரன் மிக்க பராக்கிரமமுடைய ஓர் அரசன். அவன் மெய்ம்மையே விரதமாகக் கொண்டிருந்தான். ஆயினும், விசுவாமித்திர முனிவரிடம் தன் அரசைக் கொடுத்துவிட்டுக் காசியில் இழி தொழிலாகிய சுடலை காக்கும் தொழிலை மேற்கொண்டு சில காலம் வாழ நேர்ந்தது.

2. பரோடா மஹாராஜா தம் நாட்டினிடத்தில் மிக்க அபிமானமுள்ளவர். அயல் நாடுகள் பலவற்றையும் சுற்றிப் பார்த்திருக்கிறார். தம் நாட்டிலே பல வகைப்பட்ட புதிய சீர்திருத்தங்களைச் செய்து, கல்விச் செல்வத்தைப் பெருக்குகிறார்.

3. முனியன் என்பவன் மிக்க நம்பிக்கைக்குப் பாத்திரமாகிய வேலைக்காரனாய் இருந்தான். ஒரு நாள் அவன் அறியாமையால் தன் யஜமானரது பணப்பையைத் திருடிவிட்டான். யஜமானர் அதை உணர்ந்தார்; அப்பையை அவனுக்கே கொடுத்து, 'இனி ஒழுங்காக நட,' என்று கூறினார். அன்று முதல் அவன் உயர்ந்த குணசாலியாய் மாறினான்.

4. சோம்பேறித்தனம் மிகுந்த சுந்தரம் என்பவன் வழக்கமாகப் பள்ளிக்கூடத்துக்கு வேளை தப்பி வருவான்; பள்ளிக்கூடத்தில் தன் வகுப்பில் உபாத்தியாயர் கண்ணிற்படாமல் மறைந்து கொள்வதாய் எண்ணி, ஒரு மூலையில் உட்கார்ந்துகொள்வான்; முகத்தைப் புஸ்தகத்தால் மறைத்துக்கொண்டு தூங்குவான்; பரீட்சைக்காலத்தில் ஒவ்வொரு பாடத்திலும் மிகவும் கீழான நிலைமையில் இருந்தான்.

5. அர்ஜுனன் பாண்டியன் மகளை ஒரு சோலையிற் கண்டான்; அவளை மணம் புரிந்துகொள்ள விரும்பினான்; பாண்டியனிடம் தன் எண்ணத்தைத் தெரிவித்தான். பாண்டியன் "என் மகள் பெறும் மகனை அரசை ஏற்றுக்கொள்ளும்படி தருவதாயிருந்தால், அவளை மணந்துகொள்ளலாம்," என்றான். அர்ஜுனன் அதற்கிசைந்து மணம் புரிந்துகொண்டான்.

# VI. நேர்க்கூற்றும் அயற்கூற்றும்
## (Direct and Indirect Speech)

பிறர் கூறிய சொற்களை அவர் கூறிய வண்ணமே எடுத்துரைப்போமாயின், அதனை நேர்க்கூற்று எனல் வேண்டும். நேர்க்கூற்று, சுவகதனம், தன்மொழி என்பன ஒரு பொருள் தருவன. பிறர்கூறிய சொற்களை மாற்றிக்கொண்டு படர்க்கை முறையாற் கூறுவோமாயின், அதனை அயற்கூற்று எனல் வேண்டும். அயற்கூற்று, பரகதனம், பிறர் மொழி என்பன ஒரு பொருள் படுவன. நேர்க்கூற்று ஆங்கில மொழியில் 'டைரெக்டு ஸ்பீச்சு' (Direct speech) எனவும், அயற்கூற்று 'இண்டைரெக்டு ஸ்பீச்சு' (Indirect speech) எனவும் கூறப்படும்.

உதாரணம்

1. உபாத்தியாயர், "இராமா, நீ ஏன் நேற்றுப் பள்ளிக்கூடத்துக்கு வரவில்லை?" என்று விசாரித்தார். (நேர்க்கூற்று)

2. உபாத்தியாயர் இராமனை அவன் நேற்று ஏன் பள்ளிக்கூடத்துக்கு வரவில்லை என்று விசாரித்தார். (அயற்கூற்று.)

நேர்க்கூற்றை எடுத்துரைக்கையில் "..." என்னும் மேற்கோட்குறிகள் இடுகல் அவசியம்.

(உ-ம்.) விசுவாமித்திரர் தசரதரைப் பார்த்து, "உனக்கு இராமனுடைய மகிமை தெரியாது. அதனை நான் அறிவேன். வசிஷ்டர் அறிவார். இங்குள்ள மற்ற முனிவர்களும் அறிவார்கள்," என்று கூறினர்.

இதனை அயற்கூற்றாக எழுதுகையில் மேற்கோட் குறியீடுகளை எடுத்துவிடல் வேண்டும்.

(உ-ம்.) விசுவாமித்திரர் தசரதரைப் பார்த்து அவருக்கு இராமருடைய மகிமை தெரியாது என்றும், அதனைத் தாம் அறிவர் என்றும், வசிஷ்டர் அறிவர் என்றும், அங்கிருந்த மற்ற முனிவர்களும் அறிவார்கள் என்றும் கூறினர்.

பயிற்சி

கீழ்க்காணும் வாக்கியங்களை அயற்கூற்றாக மாற்றுக :—

1. ஓநாய் ஆட்டுக் குட்டியைப் பார்த்து, "நீ என்னை ஒரு வருடத்துக்கு முன்பு திட்டினயே! ஏன் திட்டினய்?" என்று கேட்டது.

2. ஆட்டுக்குட்டி பயந்து நடுநடுங்கி, "ஐயா, நான் ஒரு வருடத்துக்குமுன் பிறக்கவேயில்லையே! நான் பிறந்து ஆறு மாதந்தானே ஆகிறது! நான் எவ்வாறு உம்மைத் திட்டியிருப்பேன்?" என்றது.

3. ஓநாய், "ஆயினும் என்ன? நீ திட்டாவிடில் உன் தாய் திட்டியிருப்பாள். அதற்காக நான் உன்னைத் தண்டிக்கப் போகிறேன்." என்று கூறி மேமேலே பாய்ந்தது.

பின் வரும் அயற்கூற்று வாக்கியங்களை நேர்க்கூற்று வாக்கியங்களாக மாற்றுக :—

1. குகன் பரதனிடம் தாயின் உரையைக்கொண்டு தந்தை உதவிய தரணியை, அவன் தீயது என்று கருதி நீத்து, முகத்திலே சிந்தனையைக் காட்டிய வண்ணமாய் இராமனை நாட்டுக்கு அழைத்துப் போகுமாறு வந்த பெருந்தன்மையைப் பாராட்டி, ஆயிரம் இராமர் வந்தாலும் அவனுக்கு நிகராகார் என்று கூறினன்.

2. அரச சபையில் திரௌபதிக்கு நேர்ந்த மான பங்கத்தைக் கண்டும், தருமன் பொறுமையோடு சில மலர்கள் காலையில் மலரும்; சில மாலையில் மலரும்; அழியும் காலம் வந்

தால் எல்லாம் ஒருமிக்க அழியும்; பொறுமையே சிறப்புடையதாம்; அதுநாள் வரையிற் பொறுமையோடு இருந்த பாண்டவர் அதற்கும் பொறுத்து எதிர் காலத்தில் எல்லாம் நிறைவேற்ற வழி தேடல் நலம் என்று கூறினான்.

3. தனது நாட்டிலுள்ள சிறு ஆண் குழந்தைகளைக் கொன்று குவித்த கஞ்சன், கண்ணன் என்ற குழந்தையும் ஒழிந்திருப்பான் என்று எண்ணித் தன் அமைச்சரிடம் தான் அதற்குமேல் நிம்மதியாக வாழப்போவதாகவும், சிசுவதை செய்யப்போவதில்லை என்றும் கூறினான்.

## வினா விடை

ஒருவர் பிறர் வினவிய வினாக்களையும் தாம் அவற்றுக்குக் கூறிய விடைகளையும் அயற்கூற்றாக மாற்றுகையில் கேட்டல், விசாரித்தல் முதலிய சொற்கள் பிரயோகிக்கப்படும்.

நேர்:—"நீ ஏன் படிக்கவில்லை?" என்று ஆசிரியர் என்னைக் கேட்டார்.

அயல்:—நான் ஏன் படிக்கவில்லை என்று ஆசிரியர் என்னைக் கேட்டார்.

நேர்:—"நீர் இங்கு நுழையத்தக்கவர் ஆவீரா?" என்று வாயில் காவலன் குசேலரிடம் கூறினன்.

அயல்:—வாயில் காவலன் குசேலரிடம் அவர் அங்கு நுழையத்தக்கவர் ஆவரோ என்று கேட்டான்.

நேர்:—கன்னன் துரியனை நோக்கி, "நீ விகன்னன் சொல்லையும் கேட்டையோ?" என்றான்.

அயல்:—கன்னன் துரியனை நோக்கி அவன் விகன்னன் சொல்லையும் கேட்டனனோ என்று விசாரித்தான்.

நேர்:—"இரவில் என்றால் படிக்க இயலவில்லை," என்று மாணவன் சொன்னான்.

அயல் :—இரவில் நன்றாய் படிக்க இயலவில்லை என்று மாணவன் சொன்னான்.

நேர் :—“நான் கண்ணனுடைய பாலிய நண்பன் ஆவேன்,” என்றார் குசேலர்.

அயல் :—குசேலர் தாம் கண்ணனுடைய பாலிய நண்பர் ஆவர் என்று தெரிவித்தார்.

நேர் :—துரியன் கன்னனை நோக்கி, “நான் நின் உரையைச் செவிக்கொள்வேனே அன்றி, வீடுமர் கூறினும் செவிக்கொளேன்,” என்றான்.

அயல் :—துரியன் கன்னனை நோக்கி, அவன் கன்னனது உரையைச் செவிக்கொள்வானேயன்றி, வீடுமர் கூறினும் செவிக்கொளான் என்றான்.

## ஏவலும் வியங்கோளும்

ஏவலும் வியங்கோளும் செயவென்னெச்சமாய் மாறி அயற்கூற்றாகும்.

நேர் :—ஆசிரியர் மாணாக்கனை நோக்கி, “பாடம் படி,” என்றார்.

அயல் :—ஆசிரியர் மாணாக்கனைப் பாடம் படிக்கச் சொன்னார்.

நேர் :—புலவர் அரசனை, “நீ நீடூழி வாழ்க!” என வாழ்த்தினார்.

அயல் :—புலவர் அரசனை அவன் நீடூழி வாழ்கென வாழ்த்தினார்.

நேர் :—நியாயாதிபதி, “குற்றவாளியை அழை,” என்றார்

அயல் :—நியாயாதிபதி குற்றவாளியை அழைக்கச் சொன்னார்.

நேர்:—" அந்தோ! என் உயிரை இழந்தேனே! " என்றனள் மந்தோதரி.

அயல்:—தன் உயிரையே இழந்ததாக மந்தோதரி புலம்பினள்.

நேர்:—" என்னே இவ்வுலக இயல்பு இருந்தவாறு! அறிஞர் வறுமையில் வருந்த, அறிவிலார் செல்வம் பெற்றுக் கொழிக்கின்றனரே!" என்றார் ஒரு புலவர்.

அயல்:—ஒரு புலவர், அறிஞர் வறுமையில் வருந்த, அறிவிலார் செல்வம் பெற்றுக் கொழிக்கும் இவ்வுலக இயல்பை இழித்துரைத்தார்.

### பயிற்சி

பின் வருவனவற்றை அயற்கூற்றாக மாற்றுக:—

1. ஆசிரியர் என்னை நோக்கி, "பாம்பொடு பழகேல் என்று நான் எப்பொழுதும் உன்னிடம் கூறியதில்லையா?"

2. கடன்காரன் உன் வீட்டில் நின்று, " நீ எப்பொழுது பணத்தைத் திருப்பித் தருவாய்?" என்று கூறுகிறான்.

3. " தந்தாய், இவ்வினாவுக்கு எங்ஙனம் விடைகூறத் தகுதியாம்?" என்று மைந்தன் வினவினான்.

4. இராமன் சீதையை நோக்கி, " இன்னும் நீ என்னுடன் வரத்துணிகின்றாயோ?" என்றான்.

5. "கடவுளே, என் வீடு விழுந்தது; நான் வறுமையிற் புகுந்தேன்," என்றான் ஒரு வியாபாரி.

6. "என்ன கொடுமை இது!" என்றார் புலவர்.

7. "என்ன சொன்னீர்? உம் ஒரு சொல்லால் நம் குலம் அழிந்ததே!" என்றாள் மந்தோதரி.

8. "அருளின் உருவே, என் துயர் போக்கி அருளாயோ?" என்றனள் விசயை.

9. கோசலை தன்னை வணங்கிய குகனையும் பரத சத்துருக்கனரையும் நோக்கி, "மைந்தர்களே, இனி நீங்கள் துயரால் வருந்தற்க நாட்டை அகன்று காட்டை நோக்கி இராம லக்குமணர் வந்தது நல்லதாயிற்று. இந்தக் குகனோடு கலந்து ஐவீரும் ஒருவீராய் இப்பூமியை ஆண்டு கொண்டிருங்கள்," என்று கூறி வாழ்த்தினள்.

10. வாகுவன் வேதியனை நோக்கி. "ஐயா, குணங்களாற் சிறந்த வீமராசன் குமாரியை நளன் நடுக்காட்டிலே நள்ளிருளிலே விட்டுப்பிரிந்து சென்றது வினைப்பயனேயாகுமன்றி, அவனது செயலாகாது," என்று கூறினான்.

# VII. கதை எழுதும் முறை
## (The method of Story - Writing)
### (முதற்பகுதி)

கதை எழுதுவதில் இரு வகை உண்டு: ஒருவர் சொல்லிய கதையைக் கேட்டு, அதன் கருத்துக்களை மனத்திற் பதித்து எழுதுபவர் தமது சொந்த நடையாற் சுருக்கி எழுதுவது ஒரு வகை. புதுமையாக ஒரு நீதியை விளக்கத் தமது கற்பனு சக்தியைக்கொண்டு கதையாக அமைத்து எழுதுவது மற்ருெரு வகையாகும். கதை சிறு கதை என்றும் பெருங் கதையென்றும் இரு வகைப்படும். பெருங்கதைகளே இக் காலத்தில் வழங்கும் நவீனங்கள் (Novels) ஆகும். சிறு கதைகள் 'சுதேச மித்திரன்' வாரப்பத்திரிகையிலும் அது போன்ற பத்திரிகைகளிலும் சுருக்கமாக இரண்டு மூன்று பக்கங்களில் முடியுமாறு எழுதப்படுவனவாம். ஒருவர் சொல்லிய கதையைக் கேட்டுச் சுருக்கி அமைத்தற்குரிய வழிகளைப் பற்றிச் சில அமிசங்களை முதலிற் கூறுவோம்.

ஆசிரியர், மாணுக்கர் முன்னிலையில் ஒரு கதையைக் கூறுகின்ருர். கதை கேட்பதில் இயல்பாகவே விருப்பமுள்ள சிறுவர், அதனை மிகவும் உற்சாகத்தோடு கேட்கின்றனர். கதை முடிந்த பிறகு ஆசிரியர் மாணவர்களைப் பார்த்து அதனையொட்டிப் பல சிறு கேள்விகள் கேட்கின்ருர். சிறுவரும் நகை முகத்தோடு விடை கூறுகின்றனர். பிறகு ஒருவனை அக்கதை முழுவதையும் சுருக்கிக் கூறச் சொல்கின்ருர். அவன் அவ்வாறே கூறுகின்ருன். அதன்மேல் அவர் மாணுக்கர் எல்லோரையும் அக்கதையை எழுதுமாறு கூறுகின்ருர். இம்முறையை அனுசரித்தால், சிறுவர் தாம் கேட்டறிந்த பொருளைப்பற்றி, வினவிடைகளுக்குச் சித்தமா

விருப்பத்தோடு வாய் மொழியாலும், எழுத்துருவாலும் அதனையே திரும்ப உரைக்கும் எழுதும் வன்மையை உடையவர் ஆகின்றனர்.

### மாதிரிப் பயிற்சி

கதை.—ஓர் அரசன் ஒரு நகரத்தை வெகு காலம் முற்றுகையிட்டான். அந்நகர ஜனங்கள் அவனுக்குத் தோற்றதாகக் கூறி வந்து வணங்கினார்கள். தன்னுடைய பரிவாரங்கள் அந்நகரத்துட் புகுமுன் அவ்வரசன், "எனக்குப் பெண்டிரையும் சிறுவரையும் வதைக்க விருப்பமில்லை. இந்த நகரத்தில் உள்ள பெண் மக்கள் தங்களுக்கு மிகவும் உவப்பான மதிப்புற்ற பொருள்களை எடுத்துக்கொண்டு வெளியேறலாம்," என்று பறையறைவித்தான். மறுநாட் காலையில் அந்நகரத்துப் பெண்டிர் எல்லாரும், தம் சிறுவர்களை நடத்திக்கொண்டு முதுகின்மேல் மிக்க பாரமான சுமையைச் சுமந்து சென்றனர். அரசன் அம்மூட்டைகளைப்பற்றி விசாரித்தபோது, கணவன்மார்களையே அப்பெண்டிர் சுமந்து சென்றனர் என்று அறிந்தான். பெண் மக்களுக்குக் கணவனிலும் சிறந்த உரிமை வேறொன்று உளதோ?

இக்கதையிலிருந்து உபாத்தியாயர் கேட்கலாகும் கேள்விகளில் சில வருமாறு:—

1. முற்றுகை என்பது என்ன?

2. நகரத்தின் ஜனங்கள், தோல்வியை எப்படித் தெரிவித்துக்கொண்டார்கள்?

3. அவ்வாறு அவர்கள் சொல்லக் காரணம் என்ன?

4. அரசன் அதற்கு மறு மொழியாக என்ன செய்தி அனுப்பினான்?

5. ஆண் மக்களைத் தண்டிக்கக் கருதிய அரசன் எண்ணம் எதனால் மாறிற்று?

6. அந்நகரத்துப் பெண் மக்கள் பெரும்பொருளாகக் கருதியது எப்பொருளை? அதனை எப்படித் தெரிவித்தார்கள்?

7. இக்கதையைச் சுருக்கிக் கூறுக.

பயிற்சி

இந்த மாதிரியைப் பின்பற்றிப் பின் வரும் கதைகளை எழுதுக :—

## 1. காக்கையின் தந்திரம்

ஒரு நாள் காகமொன்று தாகத்தால் மிக வருந்தி, உயிரே போய்விடும் நிலைமையில் இருக்கையில் கிணற்றங்கரையொன்றிலே ஒரு தண்ணீர்க் குடத்தைக் கண்டது. அதில் தண்ணீர் சிறிதளவே இருந்தாலும், குடத்தின் கழுத்துக் குறுகலாய் இருந்ததாலும் காகம் தண்ணீர் குடிக்கக் கூடாமல் ஏங்கிற்று. சிறிது நேரத்தில் அதற்கு ஒரு யுக்தி தோன்றவே, அஃது அங்கு அருகிற்கிடந்த சிறு கற்களை ஒவ்வொன்றாக எடுத்துக் குடத்துக்குட் போட்டுக்கொண்டிருந்தது. சிறிது நேரத்தில் தண்ணீர் குடத்தின் கழுத்தண்டை உயர்ந்து வரவே காக்கை அதைக் குடித்துவிட்டுப் பறந்து போயிற்று.

## 2. நாயும் வைக்கோற்சுமையும்

ஒரு நாய் இங்கும் அங்கும் திரிந்துகொண்டிருக்கையில், காலியாயிருந்த மாட்டுக் கொட்டில் ஒன்றைக் கண்டு, அதனுள் நுழைந்து, அங்கே கிடந்த வைக்கோற்சுமையின்மேல் ஏறிப் படுத்துக்கொண்டது. சிறிது நேரத்திற்குள் வெளியிற் சென்றிருந்த பசு அங்கே திரும்பி வந்து, வைக்கோலைத் தின்னக் கருதி, அதன் அருகில் நெருங்கியது. அதைக் கண்ட நாய், வைக்கோலைத் தின்னவொட்டாமற் குரைத்துக்கொண்டு பசுவின்மீது பாய்ந்து கடிக்க வந்தது. பசு, " அப்பா, இந்த வைக்கோல் எனக்கு ஆகாரம்;

உனக்கு ஒரு விதத்திலும் உதவாது. பசி வேளையில் என்னைத் தின்னவொட்டாமல் தடுக்கின்றாயே! இது நியாயமா?" என்று கேட்டது. நாய், "பசுவே, இந்த வைக்கோல் எனக்கு உபயோக மாகவில்லை என்று கூறுகின்றாய். நான் நன்றாக மெத்தையிற் படுப்பதுபோலப் படுத்துக்கொண்டிருக்கிறேன், என் தூக்கத்தைக் கலைக்காதே; போ!" என்றது.

## 3. நாயின் நல்லறிவு

ஒரு நாயின்மேல் வண்டிச் சக்கரம் ஒன்று ஏறிவிட்டதைக் கண்ட வைத்தியர் ஒருவர், அந்நாயைத் தம் வீட்டுக்கு எடுத்துச் சென்று, சிகிச்சை செய்து அனுப்பிவிட்டார். மறுநாள் அதே நேரத்துக்கு அந்நாய் அவரிடம் வர, அவர் அதற்கு மருந்துபோட்டு அனுப்பினார். சில நாட்களில் அந்நாய் பூரண சொஸ்தம் அடைந்தது. அதன் பிறகு அது தினந்தோறும் வைத்தியரிடம் வந்து, சிறிது நேரம் துள்ளி விளையாடி, அவர் முதுகிலே தட்டிக்கொடுப் பதைக் கண்டு சந்தோஷித்துச் செல்வது வழக்கம். இப்படி நடந்து வருகையில், ஒரு நாள் அந்நாய் கதவண்டையில் நின்று குரைத்ததைக் கேட்டு வைத்தியர் கதவைத் திறந்து பார்க்கையில், அந்த நாய் வேறொரு நாயுடன் வந்திருக்கக் கண்டார். பழைய நாய் புதிய நாயின் காதைக் கவ்விப்பிடித்து, வைத்தியர் இரணச் சிகிச்சை செய்யும் இடத்துக்கு அழைத்துச் சென்றது. வைத்தியர் புதிய நாய்க்குக் காலிலே பலத்த காயம் உண்டாயிருக்கக் கண்டார். அதற்கு நன்கு சிகிச்சை செய்து இரண்டு நாய்களையும் சேர்த்து அனுப்பினார்.

## 4. வழிப்போக்கன் தந்திரம்

வழிப்போக்கன் ஒருவன் நள்ளிரவில் சத்திரம் ஒன்றை அடைந்து, கதவை இடித்தான். சத்திரக்காரன் கதவுக்குட்புறத்தி லிருந்தே, "ஐயா, கதவு திறக்க இயலாது. பூட்டுச்சாவி கை சோர்ந்துவிட்டது. உம்மிடம் ஒரு வெள்ளிச் சாவி இருந்தால் அதைக் கொடும். கதவைத் திறக்கிறேன்," என்றான் இதன்

குறிப்பை அறிந்த பிரயாணி ஒரு ரூபாய் நாணயத்தை எடுத்துக் கதவின் சந்தில் நுழைத்தான். சத்திரக்காரன் அதை வாங்கிக் கொண்டதும் கதவைத் திறந்தான். பிரயாணி உள்ளே சென்றதும் அவனைப் பார்த்து, "ஐயா, வெளியே என் சாமான்களில் சில வற்றை வைத்துவிட்டு வந்திருக்கிறேன். தயவு செய்து அவற்றை எடுத்து வாரும்," என்றான். சத்திரக்காரன் வெளியே போனதும் பிரயாணி கதவைத் தாழிட்டுக்கொள்ளச் சத்திரக்காரன் கதவைத் தட்டினான். அதற்கு உத்தரமாகப் பிரயாணி, "ஐயோ! சாவி ஒடிந்துவிட்டதே! என்ன செய்வேன்! உன்னிடம் ஒரு வெள்ளிச் சாவி இருந்தாற் கொடு," என்றான். வேறு வழியில்லாததைக் கண்ட சத்திரக்காரன் ரூபாயைத் திருப்பிக் கொடுத்துவிட்டுக் கதவு திறந்ததும் உள்ளே சென்றான்.

## 5. உள்ளன்பின் வேகுமதி

ஒரு கிராமத்தையடுத்த பாதையில் பெரிய கற்பாறை ஒன்று கிடந்தது. பகற்காலங்களில் ஜனங்கள் பாதையிற் போகும்போது, அந்தக் கற்பாறையைச் சுற்றிக்கொண்டு விலகிப் போவார்கள். ஒருவரேனும் அதை அப்புறப்படுத்த வேண்டும் என்று நினைக்க வில்லை. அந்தப்பாறையோ, வழியின் குறுக்கே கிடந்ததால், அவ் வழியில் வருவோர்க்கெல்லாம் மிக்க சிரமத்தைக் கொடுத்தது. இராக் காலங்களில் அங்கே அக்கல் இருப்பதை அறியாத சிலர் இடறி விழுந்து கை கால்களை முறித்துக்கொண்டதுமுண்டு. வண்டிகளும் மாடுகளும் அவ்வழியிற் பட்ட பாட்டை உரைக்க முடியாது.

இங்ஙனம் இருக்க, ஒரு நாள் அவ்வழியே சென்ற ஏழைக் குடியானவன் ஒருவன் அக்கல்லைக் கண்டான். "ஐயோ! இஃது இங்கே கிடந்து இத்தனை பேரைக் கஷ்டப்படுத்துகின்றதே! இதை அப்புறப்படுத்தி விடுவோம்," என்று நினைத்து, இரண்டு மூன்று நாழிகையாக வெகு பாடு பட்டு, ஒருவர் உதவியுமின்றித் தனியனாகவே அதைப் புரட்டிச் சாலையோரத்திற் சேர்த்தான்;

கல் இருந்த இடத்திலே குனிந்து பார்த்தான். அங்கு ஆயிரம் ரூபாய் அடங்கிய பண மூட்டையொன்றும், அதன்மேல் ஒரு சீட்டும் இருக்கக் கண்டான். அந்தச் சீட்டில், "இந்தக் கல்லைப் புரட்டி ஓரத்திற் சேர்ப்பவருக்கு இது வெகுமதியாகும்." என்று எழுதப்பட்டிருந்தது. அதைப் பார்க்க அங்கே கூடிய ஜனங்கள் அக்குடியானவனுடைய நல்லதிர்ஷ்டத்தைப் புகழ்ந்து பாராட்டிச் சென்றார்கள்.

## VIII. கதை எழுதும் முறை
## (The method of Story-Writing)

[இரண்டாம் பகுதி]

கீழே கொடுக்கப்பட்டிருக்கும் சிறு குறிப்புக்களை உதவியாகக் கொண்டு சிறு கதைகள் எழுதும் வழியைக் கற்பிக்கலாம். கதைக்கு அத்தியாவசியமாய் வேண்டிய அம்சங்களெல்லாம் இக்குறிப்பில் காணப்படும். இடையிடையே தொடர்புபடச் சில வாக்கியங்களைச் சேர்க்க வேண்டுவதே எழுதுவோர்க்கு உள்ள காரியமாம்.

இம்மாதிரியான குறிப்புக்களை மாணவர்க்கு வாசித்து, அவர்களைத் தங்கள் குறிப்புப் புத்தகங்களில் எழுதிக் கொள்ளுமாறு செய்து, கதையின் பரந்த போக்கு ஒருவாறு விளங்கும்படி சொல்லி, பிறகு அதனை விரித்து எழுதச்செய்ய வேண்டும். சொந்தமாகச் சிறு கதைகள் எழுதப் பயில்வதற்கு இது முதற்படியான உதவியாம்.

### மாதிரிப் பயிற்சி

ஒரு சிறு கிராமம் - கடைத்தெரு - பழக்கடை - வியாபாரி-பிறரை ஏமாற்றும் குணம் உள்ளவன் — குடியானவன் வருதல் - தாகம் மிகுதி - கொடிமுந்திரிப் பழம் - விலை விசாரித்தல் - வியாபாரி நிறையிற் குறைவு செய்தல் - குடியானவன், "ஏன் நிறை குறைவாயுள்ளது?" - "வியாபாரி சுமந்து செல்லச் சௌகரியமாக இருக்கும்!" - குடியானவன் பணத்தைக் குறைந்துக் கொடுத்தல் - அவ்விருவர் சம்பாஷணையின் முடிவு - நீதி.

### தொடர்ந்து வரைந்த கதை

"பாண்டி நாட்டிலே ஒரு சிறு கிராமம் உண்டு. அந்தக் கிராமம் உருவத்தாற் சிறியதாயினும், ஒரு பெரிய சாலையின்

இடையில் இருந்ததால், வியாபாரம் மிகுதியாக உடையது. அக்கிராமத்தில் ஒரு சிறு கடைத்தெரு உண்டு. அக்கடைத் தெருவின் ஊடே பகலெல்லாம் பல வகை வண்டிகள் போன வண்ணமாகவே இருக்கும். அந்தக் கடைத்தெருவின் நடு வில் ஒரு பெரிய பழக்கடை இருந்தது. அக்கடைக்காரன் அறியாத ஜனங்களை ஏமாற்றி நிறையைக் குறைத்து வியா பாரம் செய்வதில் கை தேர்ந்தவனாயிருந்தான்.

ஒரு நாள் ஒரு குடியானவன் அவ்வழியிலே வந் தான். அவன் வெகுதூரம் வெயிலில் நடந்து வந்ததால், மிக்க தாகம் அடைந்து, களைப்புற்றிருந்தான். அவன் தன் தாகத்தைத் தணித்துக்கொள்ள இளநீர், மோர், தண்ணீர் ஏதாவது கிடைக்குமா என்று அங்குச் சுற்றுமுற்றும் பார்த் தான். ஒன்றும் கிடைக்கவில்லை. பழக்கடை அவன் கண்ணிற் பட்டது கடையை நோக்கி விரைவாக நடந்தான். அங்கே கொடிமுந்திரிப்பழக் குலைகள் அழகாய் அடுக்கி வைக்கப்பட் டிருக்கக் கண்டான்; கடைக்காரனைப் பார்த்து, "இந்தக் கொடிமுந்திரிப்பழம் சேர் என்ன விலை?" என்று கேட்டான்.

கடைக்காரன்: ஐயா, இந்தப் பழம் மிகவும் உயர்வா னது. இது சேர் நாலணாவுக்கு விற்கப்படுகிறது.

குடியானவன்: பக்கத்தூரில் இதே பழம் சேர் இரண்டு அணாவாக விற்கிறதே! இங்கென்ன இதற்கு இவ்வளவு விலை வந்தது?

கடைக்காரன்: அயலூர் விலையை இங்கே பேசிப் பிர யோஜனம் இல்லை. இவ்வூரில் இதுதான் விலை. இஷ்டமுண் டானால் வாங்கலாம்; உமக்கு வேண்டும் என்றால் மூன்றணா வுக்குக் கொடுக்கிறேன்.

குடியானவன் : ஒரு சேர் கொடும். நல்ல பழமாய் இருக்க வேண்டும். புளிப்பாய் இருந்தால், திருப்பிக் கொடுத்துவிடுவேன்.

கடைக்காரன் : இதோ ஒரு சேர் நிறுத்துவிட்டேன் ; எடுத்துக்கொள்ளும்.

குடியானவன் : என்ன ஐயா ! எங்கள் ஊரில் ஒரு சேர் நிறுத்தால் இதைப்போல இரண்டு பங்கு இருக்குமே ! உங்கள் ஊரில் எடையும் சிறியதோ ?

கடைக்காரன் : நான்கணுவுக்கு விற்கும் நல்ல பழத்தை உமக்கு நான் மூன்றணுவுக்குக் கொடுத்தும் நிறை குறை வென்கிறீர். அப்படியே குறைந்திருந்தாலும், உமக்குப் பாரம் குறைவுதானே !

குடியானவன் : அப்படியா ! இதோ உம்முடைய பழத் துக்கு உள்ள விலையை வாங்கிக்கொள்ளும்.

கடைக்காரன் : என்ன ஐயா, அரைச் சேருக்கு உள்ள விலையைக் கொடுக்கிறீரே !

குடியானவன் : இப்படி விற்பவர்களுக்கு இவ்விதம் விலை கொடுப்பதுதான் எங்கள் வழக்கம். அதிக சில்லறை இருந்தால் உமக்கும் எண்ணிப் பார்ப்பது சிரமந்தானே ! நான் போய் வருகிறேன். இனிமேலாவது நீர் ஒழுங்காக வியாபாரம் செய்வீர் என்று எண்ணுகிறேன்.

கடைக்காரன் தான் ஏமாற்ற எண்ணியது பயன்படா மல் தானே ஏமாறியதை அறிந்தான். நல்வழியில் நடப்பவர் களுக்கு எப்பொழுதும் தீங்கு நேரிடாது என்பதும், தீய வழியிற் செல்பவர் சில நாளைக்கு அகப்படாமல் தப்பிக் கொண்டாலும், நிச்சயமாக ஒரு சமயம் அகப்பட்டுத் தண் டிக்கப்படுவர் என்பதும் இதனால் விளங்கும்.

## கதைக் குறிப்புக்கள்

இயன்றவளவு இங்குள்ள விஷயங்களை விடாமல் உபயோகித்து, பின் வரும் சிறு குறிப்புக்களை விளக்கி, விரிவான கதைகள் எழுதுக :—

1. ஏழை ஒருவன்—காட்டுவழி—திருடர்—அவன் பணம் வைத்திருப்பதாக எண்ணுகின்றனர்—திருடரோடு நெடுநேரம் போராட்டம்—இறுதியில் தோல்வி—அவன் சட்டைப் பையில் ஒரு ரூபாய்—"இதற்காக இவ்வளவு போராட்டம்!" என்றான் திருடர் தலைவன்.

2. கூர்ஜரத்தில் ஒரு ஜில்லா—கட்டாயக் கல்விச் சட்டம்—ஒரு மனிதன் தன் பிள்ளைகளை அனுப்பவில்லையென்றும், உபாத்தியாயரை அடித்தான் என்றும் குற்றம் சாட்டப்பட்டான்—விசாரணை—"அடிக்கவில்லை—பிள்ளையை அனுப்பமாட்டேன் என்று சொல்லவும் இல்லை—எனக்குப் பிள்ளையே இல்லை," என்று மறுமொழி கூறினான்.

3. ராஜஸ்தானத்தில் ஓர் அரசர்—ஒரு குழந்தை—தாய் இறக்கிறாள்—தாதி வளர்க்கிறாள்—தாதிக்கும் ஒரு குழந்தை—பகைவர் அரசர் குழந்தையைக் கொல்ல முயலுதல்—சேவகர் இலஞ்சம் பெறுதல்—தாதி குழந்தைகளை மாற்றி வைத்துவிடுதல்—அரச குமாரன் பிழைத்தல்—அவன் தாதிக்குக் கோயில் கட்டுதல்.

4. ஓர் உலோபி நூறு ரூபாயை இழத்தல்—தேடிக்கொடுத்தவர்க்குப் பத்து ரூபாய் தருவதாகப் பறை அறைதல்—ஓர் ஏழைக் குடியானவன் கொண்டுவருதல்—உலோபி ஒன்றும் கொடாமை—பையில் நூற்றுப்பத்து ரூபாய் இருந்தது எனல்—குடியானவன் வழக்காடல்—நியாயாதிபதி உண்மை உணர்தல்—உலோபி நூற்றுப்பத்து ரூபாய் உள்ள பை கிடைத்தால் பெறலாம் என்ற தீர்ப்பு—உலோபியின் ஏமாற்றம்.

5. ஓர் ஏழைப் பிராமணர்—காட்டுவழி—கூண்டிற் புலி—புலி கெஞ்சுதல்—விடுதலை செய்தல்—தின்ன வருதல்—மிருகங்களி

டம் முறையிடுதல்—அவை புலியின் பக்கம் பேசுதல்—நரி ஒன்று வருதல்—அது கூட்டைப் பார்க்க வருதல்—புலியைக் கூண்டின் உள்ளே போகச்சொல்லிப் பார்த்துப் பிறகு பிராமணனுக்குப் புத்தி கூறுதல்.

6. ஓர் அடிமை—கொடிய யஜமானன்—அடிமை காட்டுக்கு ஓடுகிறான்—குகையில் தூங்குகிறான். சிங்க கர்ஜனை—சிங்கம் காலைத் தூக்கிக் காட்டல்—அதன் பாதத்திலே ஒரு பெரிய முள்—முள் எடுத்தல்—சிங்கம் நன்றியறிதல்—அடிமை நகர்க்குத் திரும்புதல்—பிடிபட்டுச் சிங்கத்தாற் கொல்லும்படி அடைக்கப்படல—சிங்கம் வருதல்—நாய்போலப் பழகுதல்.

## குறைக் கதைகள்

மேலேகாட்டிய வழியாலன்றிக் குறைபாக ஒரு கதையை நிறுத்தி அதனைப் பூர்த்தி செய்யுமாறு கேட்டலும் ஆம். பூர்த்தி செய்கையில் மாணவர் மனோ தர்மம் எங்ஙனம் கதையை வளர்க்கிறது என்று பரிசோதித்தல் எளிதாம்.

### மாதிரி

ஒரு சிறுவன் தனது கிராமத்துத் தெருக்களில் வேறு வேலையின்றி மெல்ல நடந்துகொண்டிருந்தான். அவன் வறியவர் குடும்பத்திற் பிறந்தவனாகையால், "எங்காவது ஒரு பை நிறையப் பணத்தைக் காணமாட்டோமா!" என்றே எண்ணிக்கொண்டிருந்தான்; தெருக்களைக் கடந்து ஊரோரத்தில் உள்ள காட்டை அடைந்தான். காட்டுச் சிறு வழியிலே நடக்கும்போது ஒரு பெரிய பணப்பையை அவன் கண்டான். அது ஒரு செல்வனுடையது. கள்வர் அவனை வழி மறித்து அடித்துக் காயப்படுத்திக் கவர்ந்துகொண்டனர். அரசசேவகர் கள்வர்களைத் தொடர்ந்தனர். செல்வன் மயங்கி அருகிலே ஒரு புல் தரையில் கிடந்தான். சிறுவன் பணப்

பையை எடுக்கக் குனிந்தான். செல்வன் மயக்கந் தெளிந்து கண் திறந்து இங்கும் அங்கும் பார்த்தான்—.

இக்கதையைப் பூர்த்தி செய்து காட்டுவோம் :—

பணப்பையைக் கையில் எடுத்துக்கொண்டு சிறுவன் ஓட எத்தனித்தான். அப்பொழுதுதான் உணர்ச்சி பெற்ற செல்வன், 'தண்ணீர், தண்ணீர்,' என்று மெல்லச் சொன்னான். இக்குரலைக் கேட்ட சிறுவன் சிறிது நேரம் ஒன்றும் தோன்றாமல் நின்றான்; பிறகு நடுக்காட்டிலே ஒரு வருந்தக் குரல் கேட்கும்போது அதனைக் கவனியாது போவது குற்றம் என்று எண்ணித் திரும்பினான்; செல்வன் இருக்கும் நிலையைக் கண்டான்; பெரிதும் மனம் இளகி அருகில் உள்ள சிறு குளத்திலிருந்து இலைப்பாத்திரத்தில் சிறிது தண்ணீர் கொணர்ந்தான்; செல்வனை மயக்கம் தெளிவித்தான். செல்வன் தான் பட்ட பாடுகளை மெல்ல ஒவ்வொரு வார்த்தையாகச் சொன்னான். அதைக் கேட்ட சிறுவன் கண்ணீர் உதிர்த்தான்; தன் கையில் இருந்த பணப்பையைச் செல்வனிடமே கொடுத்தான். அவனுக்கு அதை வாங்கிக்கொள்ளவும் சக்தி இல்லை.

இதற்குள் சேவகர் கள்வர்களைப் பிடித்துக்கொண்டு திரும்பி வந்தனர். அவர்கள் சிறுவன் உதவியாற் செல்வன் உயிரோடிருப்பது கண்டு, அவனையும் அழைத்துக்கொண்டு செல்வனை மெல்ல எடுத்துக்கொண்டு ஊர்க்குள் நுழைந்தார்கள். திருடர் தண்டிக்கப்பட்டனர்.

செல்வன் பல நாள் படுத்த படுக்கையாய் இருந்தான், சிறுவன் அவனுக்கு அருகில் உபசாரம் செய்துகொண்டிருந்தான். இரண்டு மாதங்களின் பிறகு செல்வன் ஒருவாறு திடம் பெற்றுச் சிறுவனைப் பார்த்து, அவன் அங்கு வந்த வரலாற்றை விசாரித்தான்; பிறகு உண்மையைத் தெரிந்து

கொண்டு, சிறுவனுக்கு ஒரு பணப்பை கொடுத்து, ஆசிர்வதித்து அனுப்பினுன். சிறுவனும் பிறகு நல்வாழ்வு வாழ்ந்து, பெருஞ்செல்வன் ஆனுன்.

குறிப்பு:—இங்ஙனம் முடிக்கப்பெறும் கதைகள் அவரவர் மனப்போக்குக்கு ஏற்றபடி அமையுமாதலால், இன்ன முறை பற்றித்தான் செல்லவேண்டும் என்ற நியதியில்லை. தொடக்கத்துக்கும் போக்குக்கும் முடிவுக்கும் பொருத்தம் உளதா என்பதே கவனிக்கத் தக்க விஷயமாம்.

## பயிற்சி

பின் வரும் குறைக் கதைகளை முடித்துக் காட்டுக :—

1. சுந்தரன் கோயிலுக்குப் போனுன். வாயிலில் ஒரு சிறு குழந்தை விளையாடிக்கொண்டிருந்தது அக்குழந்தையின் உடம்பில் பொன்னணிகள் நிறைந்து இருந்தன. சுந்தரன், "இது யார் குழந்தையோ! இப்படித் தனியாய் விளையாடுகிறதே! யாராவது ஆபரணங்களுக்காகக் குழந்தையை எடுத்துச்சென்று கொன்று விட்டால் என்ன செய்வது!" என்று எண்ணினுன்: பின்பு அதைக் கவனிக்காமல் கோயிலுக்குள் சென்ருன்; கோயிலிலும் அதே நினைவாய் இருந்தான்; விரைவில் வெளியே வந்தான். குழந்தையைக் காணவில்லை. அவன் நாற்புறமும் பார்த்தான். சிறிது தூரத்திலே குழந்தையின் அழுகுரல் கேட்டது. சுந்தரன் அங்கு ஓடினுன்; கரிய பெரிய மனிதன் ஒருவன் அங்கே கீழே விழுந்து கிடக்கக் கண்டான். ஒரு பெரிய கோயிற்காளை அவனைக் குத்திக் குத்திப் புரட்டிக்கொண்டிருந்தது. குழந்தை பக்கத்தில் நின்றுகொண்டிருந்தது. சுந்தரன் குழந்தையருகிற்சென்ருன் காளை பாய வந்தது. குழந்தை சிரித்துக்கொண்டு சுந்தரனிடம் ஓடி வந்தது.

2. கேசவன் பரீட்சையில் நன்ருகத் தேர்ச்சி பெற்றுப் பல பரிசுகள் பெற்ருன். அவன் தகப்பனுர் அவனைப் பார்த்துச் சந்

தோஷித்து, "உனக்கு வேண்டும் புதுப்பொருள் என்ன?" என்று கேட்டார். அவன், "அப்பா, எனக்கு ஒரு ஸைகிள் வேண்டும்," என்று கேட்டான். தகப்பனார், உடனே நல்ல வண்டியாகப் பார்த்து வாங்கிக் கொடுத்தார். கேசவன் அன்று சாப்பாட்டு வேளையை மறந்து, ஸைகிள் பழக ஆரம்பித்தான்; ஊருக்குள்ளே ஏறி விழுவது கேவலம் என்று எண்ணி, ஊருக்கு வெளியே தன் நண்பரோடு போனான். சாலையின் இரு புறத்திலும் கள்ளில் புதர்கள் இருந்தன. சிறிது நேரம் இரண்டு மூன்று பேர் பிடித்துக் கொண்டுவரக் கேசவன் ஸைகிள் பழகினான். பிறகு தனக்குத் தெரிந்துவிட்டதாக எண்ணிக்கொண்டான்.

---

# IX. கடிதம் எழுதுதல்
## (Letter - Writing)
### முன்னுரை

நாகரிகம் படைத்த மக்கள் வாழும் நாடுகளில் எல்லாம் கடிதம் எழுதுதல் ஓர் அவசிய காரியமாக ஏற்பட்டுவிட்டது. நாம் ஒருவரையொருவர் நேரிற்கண்டாற் பேச்சின் மூலம் நம் கருத்தை அறிவித்துக்கொள்கிறோம். தூரத்தில் உள்ளவர்க்கு நம் கருத்தை அறிவிக்க வேண்டின், கடிதம் எழுதுதல் இயல்பே. நேரிலே பேச விருப்பமில்லாத சில செய்திகளைக் கடித மூலம் தெரிவிப்பதுமுண்டு.

கடிதம் எழுதுவதை ஒரு கலையென்றே கருதவேண்டும். ஏனெனில், கடிதம் எழுதுவதிலும் அழகும், அமைப்பும், பிறர் மனத்தைக் கவரும் தன்மையும் உண்டன்றோ? சாமானியமாக எழுதப் படிக்கத் தெரிந்த ஒருவன் தன் கருத்துக்களை விளக்கி எழுதும் கடிதத்திற்கும், நன்கு கல்வி பயின்று நாகரிகம் படைத்த ஒருவன் எழுதும் கடிதத்திற்கும் பொருளளவில் அதிக வித்தியாசம் இராதாயினும், அமைப்பிலும் அழகிலும் வேறுபாடுகள் காணப்படும். கடிதம் எழுதும் முறையில் நன்கு பயின்றோர் சில முறைகளைக் கையாளுகின்றனர்.

கடிதத்தில் உள்ள முக்கியமான அம்சங்கள் எழுதும் இடம், காலம், முற்கூற்று, உள்ளுறை, கையொப்பம் என்பனவாகும். இவற்றுள் இடமும் காலமும் வலப்பக்கத்து மூலையில் எழுதப்படுவது பொருத்தமாம். முற்கூற்று என்பது இன்னாருக்கு இன்னார் இன்னவிதம் எழுதியது என்பதைத் தெரிவிக்கும பகுதியாம். நமஸ்காரம், ஆசீர்வாதம், உபயக்ஷேமம் முதலியனவும் இதன்கண் அடங்கும். உள்ளு

றையென்பது கடிதத்தில் உள்ள செய்தி. இதுவே கடிதத்தின் முக்கியமான அமிசம். இதன்கண் எழுதுவோரது கருத்துச் சுருக்கமாகவும், விளக்கமாகவும், அழகாகவும் அமைக்கப்பெற வேண்டும். கையொப்பம் என்ற பகுதியில் 'அன்புள்ள' 'பணிவுள்ள' முதலிய சொற்றொடர்களும் கையெழுத்தும் அமையும். எழுதும் பொருளுக்கு ஏற்றவாறு முற்கூற்றும் கையொப்பப் பகுதியும் மாறுபடும்.

கடிதங்கள், அவற்றின் உள்ளுறைக்குத் தக்கவாறு பல வகைப்படும். ஆயினும், அவற்றை முக்கியமாக, சொந்தச் செய்திகளை எழுதும் கடிதங்கள், வியாபாரக் கடிதங்கள், விண்ணப்பக் கடிதங்கள், பொது நலக் கடிதங்கள் என்று நான்கு வகையாகப் பகுத்துக் கூறலாம்.

சொந்தக் கடிதங்கள் உறவினர்க்கேனும் நண்பர்க்கேனும் வீட்டுச் செய்திகளைப்பற்றி எழுதப் பெறுவன. இவற்றுள் உள்ளக்கருத்து அன்போடு கலந்து நன்கு வெளியிடப் பெறும். இக்கடிதங்கள் பேசும் நடையிலேயே எழுதப் பெறுதல் நலம். அழைப்புக் கடிதங்களும் இவ்வகையிற் சேரும்.

வியாபாரத்தின்பொருட்டும், அதைப் போன்ற மற்ற வெளிக் காரியங்களின்பொருட்டும் எழுதப் பெறுவன வியாபார முறைக் கடிதங்கள் எனப்படும். இவற்றில் அநுசரிக்கத் தக்க விதிகள் சில உண்டு.

விண்ணப்பக் கடிதங்கள், ஓர் உத்தியோகத்தைப் பெற விரும்பும் ஒருவர், தம் தகுதிகளைத் தெரிவித்து, அவ்வுத்தியோகத்தைக் கொடுக்கும் நிலைமையில் உள்ள அதிகாரிக்கு எழுதும் கடிதங்களாம். இக்கடிதங்களில் மரியாதைக் கிரமம் நன்கு கவனிக்கப்பட வேண்டும்.

உள்ளுறையின் அமைப்பு மிகவும் முக்கியமானது. அதற்கு ஒரு தனி மாண்பு உண்டு.

பொதுநலக் கடிதங்கள் என்பன சுவாமி விவேகானந்தர், உலக கவிஞர் ரவீந்திரநாத தாகூர் முதலிய பெரியோர்களால் அந்தரங்கமாகவும் பகிரங்கமாகவும் எழுதப்பெற்ற கடிதங்கள் போல்வனவாம்.

இக்கடிதங்களில் ஒவ்வொரு வகைக்கும் சில உதாரணங்கள் காட்டுவோம்.

## 1. குடும்பக் கடிதம்

14, மேலாவணி மூல வீதி,

மதுரை, 10—5—37.

அன்பார்ந்த அண்ணு அவர்களுக்கு,

நமஸ்காரம், உபய க்ஷேமம் :

சென்ற சில வாரங்களாகத் தங்களிடமிருந்து கடிதம் ஒன்றும் வரவில்லை. வாரந்தோறும் ஒரு கடிதம் எழுதும் தங்களுக்கு இந்த மறதி எப்படி வந்ததோ, அறிகிலேன்! இங்கே சௌபாக்கியவதி மீனுக்ஷி, சிரஞ்சீவி சுந்தரேசன் இருவரும் நன்கு விளையாடிக்கொண்டு, மழலை மொழி பேசித் தங்கள் பாட்டிக்கு மகிழ்வூட்டி வருகின்றனர். அங்கும் அவ்வண்ணமே சிறு குழந்தைகள் மழலை பேசியும் மடநடை பெயர்ந்தும் மகிழ்வூட்டிவரும் என்று நம்புகிறேன். சிரஞ்சீவி நடராஜன் பள்ளிக்கூடத்திற்கு ஒழுங்காகப் போய் வருவான் என்று எண்ணுகிறேன். இப்பொழுது அவன் தன் பெயரை எழுதி வாசிக்கத் தக்க நிலைமைக்கு வந்திருப்பான் என்றும் நம்புகிறேன். இது நிற்க.

நம் தாயார் சென்ற சில வாரங்களாகக் குற்றாலத்துக்குப் போய்வர வேண்டும் என்று சொல்லி வருகிறுர்; அங்கிருந்து

கன்னியாகுமரி, அனந்த சயனம் முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசித்து வரவும் அபிப்பிராயப்படுகிறார். எனக்கு இந்தச் சந்தர்ப்பத்தில் வெளியூர்களுக்குப் போய்வர அவகாசம் இல்லையாகையால், தாங்கள் இங்கு வந்து நம் தாயாரை அழைத்துப் போய் க்ஷேத்திர தரிசனம் செய்வித்து வர வேண்டுகிறேன்.

இக்கடிதத்துக்கு எழுதும் பதிலில் தாங்கள் இங்கு எப்பொழுது வரக்கூடும் என்பதையும் தெரிவிக்க வேண்டு கிறேன்.

நமஸ்காரம்,

சுந்தரன்

---

2. பெரியோர் சிறியோர்க்கு எழுதும் கடிதம்

27, ஞானப்பழுதலி அக்கிரகாரம்,

மதுரை, 10—6—'37.

சிரஞ்சீவி நடேசனுக்கு:

அநேக ஆசீர்வாதம், உபய க்ஷேமம்:

சென்ற வாரத்திலே நீ எழுதிய கடிதம் கிடைத்தது. பரீக்ஷை விஷயத்தில் நல்ல முயற்சி செய்துகொண்டிருக் கிறாய் என்பதைக்கேட்க மிக்க சந்தோஷமே. முயற்சிக்குத் தக்க பலன் எதிலும் கிடைக்கும் என்பது நீ அறியாததன்று. உன் தமையன் வைத்தியநாதன் எல்லாப் பாடங்களிலும் இந்த இராசதானியில் முதல்வனாய், பீ. ஏ. பரீக்ஷையில் தேறினான். நீயும் அவனைப்போல ஆக வேண்டும் என்று முயற்சி செய்தல் நலம். சென்னைப்பட்டினம் போன்ற இடங் களில் பணச்செலவு அதிகம் ஆகும் என்பது வாஸ்தவமே. ஆயினும், நம் சக்திக்கு மீறிச் செலவு செய்யக்கூடாது என்

பதை நீ அறிவாய்; உன் படிப்பு விஷயத்தில் நல்ல ஊக்க முள்ளவனாயிருப்பதோடு, ஒழுக்கத்திலும் உபாத்தியாயர் களாற் பாராட்டப்படும் நிலைமையை அடையவும் வேண்டும்.

உன் தங்கை சாவித்திரிக்கு இவ்வருஷம் விவாகம் செய்து வைக்கத் தீர்மானித்திருக்கிறேன். வரன் தேடுவதற் காகச் சென்னைப்பட்டினம் வரலாம் என்று எண்ணுகிறேன். நீ கேட்ட கம்பராமாயணப் புத்தகத்தை அங்கு வரும்போது கொண்டுவருகிறேன். இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் வாசித் தாலும், நம் சுய பாஷையாகிய தமிழில விசேஷ அபிமானம் வேண்டும். ஆகையால், ஓய்வு நேரங்களில் தற்கால வீண் கதைகளை வாசிக்காமல், நம் நாட்டுப் பெரியோர்கள் எழுதி வைத்த அருமையான நூல்களைப் படித்து வருவாய் என்று நம்புகிறேன். அடிக்கடி கடிதம் எழுதும் வழக்கம் உடையவ னாய் இருப்பாய் என்று எதிர்பார்க்கின்றேன். உன் தாயார் நீ எழுதும் கடிதங்களைப்பார்த்துச் சந்தோஷிக்கின்ற சந்தர்ப்பம் ஏற்படும். ஆதலால், உன் கடிதங்களையெல்லாம் தமிழிலேயே எழுதுக.

ஆசீர்வாதம்,
உன் அன்புள்ள தகப்பனார்,
இராதா கிருஷ்ணையர்

---

### 3. அழைப்புக் கடிதம்

திருவாளர், சுப்பிரமணிய பிள்ளை அவர்கட்கு,

ஐயன்மீர்,

நாளை மாலை எங்கள் புது வீட்டில் நண்பர்களுக்கு ஒரு சிறு விருந்து நடத்திப் பாட்டுக்கச்சேரி ஒன்றும் நடத்துவிக்

கிறபடியால், குடும்ப சமேதராய்த் தங்கள் வரவை எதிர்பார்க்கின்றேன்.

நமஸ்காரம்,

சரவண முதலியார்

"தியாகராஜ விலாசம்"
தஞ்சை,
10—8—'37

---

## 4. வியாபாரக் கடிதங்கள்

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் அவர்கட்கு,
சென்னை.

ஐயன்மீர்,

அடியிற்கண்ட புத்தகங்களை ரெயில்வே பார்சலாக அனுப்பி, ரெயில் ரசீதை எனக்கு அனுப்ப வேண்டுகிறேன்; தகுந்த கமிஷன் கொடுப்பீர்கள் என்றும் எதிர்பார்க்கிறேன்:

| | |
|---|---|
| கம்பராமாயணம் - பாலகாண்டம் - குறிப்புரையுடன் (அ. குமாரசாமிப் பிள்ளை பதிப்பு) | ஒரு பிரதி. |
| பன்னிரு திருமுறைகள் (செந்தில்வேலு முதலியார் பதிப்பு) ... | ஷை |
| குமாரகுருபரர் பிரபந்தம் (உங்கள் புதுப்பதிப்பு) | ஷை |
| சிவப்பிரகாசர் பிரபந்தம் (புதுப்பதிப்பு) ... | ஷை |
| சிலப்பதிகாரம் - உரையுடன் (மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையரவர்கள் பதிப்பு) | ஷை |
| ஜீவக சிந்தாமணி (ஷை பதிப்பு) ... | ஷை |
| மணிமேகலை (ஷை பதிப்பு) ... | ஷை. |
| கலித்தொகை மூன்று தொகுதிகள் (இ. வை. அனந்தராமையர் பதிப்பு) ... | ஷை. |

தருக்க சங்கிரகம்—உரையுடன் (யாழ்ப்பாணத்துப் பதிப்பு) } ஷை

இரகுவமிசம் மூலம் (யாழ்ப்பாணத்துப் பதிப்பு) ஷை

நற்றிணை-உரையுடன் (பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் பதிப்பு) ... } ஷை

திருமெய்யம், 12—8—37 }

முருகவேள் முதலியார்,
திருமெய்யம்,
புதுக்கோட்டை (ஸ்டேட்டு)

மகா-௱-௱-ஸ்ரீ, முருகவேள் முதலியார் அவர்களுக்கு,
திருமெய்யம், புதுக்கோட்டை (ஸ்டேட்டு)

ஐயன்மீர்,

தாங்கள் 12-8-37வ இட்ட கடிதம் கிடைக்கப்பெற்றோம். வந்தனம். தாங்கள் விரும்பும் புத்தகங்களிற் கீழே குறிப்பிட்டவை இப்பொழுது எம்மிடம் இல்லை. இரண்டு வார காலத்தில் வருவித்துக் கொடுக்கக்கூடும். அவை வந்த பிறகு எல்லாவற்றையும் சேர்த்து அனுப்புவதா, அன்றி இப்பொழுது இருப்பவைகளை உடனே அனுப்பிவிடுவதா என்பதை அறிய விரும்புகிறோம்.

1. தருக்க சங்கிரகம் (யாழ்ப்பாணப் பதிப்பு)
2. இரகு வமிசம் மூலம் (ஷை)
3. நற்றிணை (பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் பதிப்பு)

சென்னை, 15—8—'37 }

கந்தசாமி முதலியார்,
'சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

## 5. வேறு வகைப் போதுக்கடிதம்

ம-ா-ா-ஸ்ரீ,

மகா வித்துவான் ரா. இராகவையங்கார் அவர்களுக்கு,

ஸமஸ்தான வித்துவான்,

இராமநாதபுரம்

ஐயன்மீர்,

எங்கள சங்கத்தின் இவ்வருஷத்திய முதற் பிரசங்கம் செய்தற்குத் தங்களை வேண்டிக்கொள்ளலாம் என்று தீர்மானித்திருக்கிறோம். எங்கள் தீர்மானத்தை நிறைவேற்றிவைக்கும் உரிமை தங்களதாய் இருப்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம். தங்கள் தமிழ்ப் பிரசங்கத்தை எமது கலாசாலை மாணவர்கள் கேட்டு இன்புறும் பாக்கியத்தை அருள்வீர்கள் என்று எதிர்பார்க்கிறோம். விஷயம் தங்கள் விருப்பம்போல மாணவர்களுக்குத் தக்கதான ஒன்றை எடுத்துக்கொள்ளலாம். தங்களைப் போன்ற பெரியோர்களைத் தக்கவாறு உபசரித்து ஆதரிக்க நாங்கள் அறியோம். எங்கள் அன்பையே பெரிதாக மதித்து எங்கள் வேண்டுகோளை அங்கீகரிக்க வேண்டுகின்றோம். இன்னும் ஒரு வார காலத்துக்குள் மறுமொழி வருமாயின், அழைப்புப் பத்திரங்கள் முதலியன அச்சிடுதற்குச் சௌகரியமாம் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

மாணவர் தமிழ்ச் சங்கம்,<br>மஹாராஜா கல்லூரி,<br>புதுக்கோட்டை,<br>10—6—'37

இங்ஙனம்,<br>திருஞான சம்பந்தன்,<br>காரியதரிசி

## 6. பத்திரிகைகளுக்கு எழுதும் கடிதம்

*பத்திராதிபர் அவர்களுக்கு :*
*ஐயன்மீர்,*

*இக்கடிதத்தைத் தங்கள் பத்திரிகையிற் பிரசுரிக்க வேண்டுகிறேன். எங்கள் ஊரில் சில உற்சவங்கள் நடைபெறுவதுண்டு. மாரியம்மன் கோயில் உற்சவம் அவற்றுள் விசேஷமானது. அந்த உற்சவத்தில் ஆண் மக்களும் பெண் மக்களும் சிறுவர்களும் சிறியதேர்கள், பெருந்தேர்கள், உரல்கள், உருளைக்கற்கள், மோட்டார்கள் முதலியவற்றை முதுகுத் தோலைக் குடைந்து கயிறுகட்டி இழுக்கிறார்கள். இன்னும் பிற வகைகளாலும் உதிரம் சிந்துகிறார்கள். அவற்றை எல்லாம் விவரிக்க என் நா எழவில்லை. புஷ்பம் வாங்குவது என்ற முறையில் சில தீவிர பக்தர்கள் செய்யும் கொடுமைகள் கண் கொண்டு காணக்கூடாதன. இவை தெய்வத்துக்குப் பிரீதியோ, மனிதர்களுக்குத்தான் வேண்டுமோ, பூத பிசாசங்களுக்கு உரியவையோ, எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. இத்தகைய கொடிய வழக்கங்கள் நம் நாட்டினின்று ஒழியும்படி தங்கள் பத்திரிகை மூலமாகப் பொது ஜனங்களுக்கு நல்லறிவு விளக்கம் பரப்புவிக்க முயற்சி செய்வீர்கள் என்று நம்புகிறேன். தெய்வங்களின் பெயரால் நடைபெறும் சிறுமைகள் ஒழிந்தாலன்றித் தெய்வத்துக்கு இந்நாட்டில் இருக்க இடமில்லாமற் போய்விடும் என்பது என் கருத்தாம். எங்கள் ஊரிலே இவ்விஷயங்களை நான் எடுத்துரைத்தால், என்னை மாரியம்மனுக்கே பலியிட்டுவிடுவார்கள். ஆகையால் இக்கடிதம் வெளி வருதல் நலமாம் என்று இதனைத் தங்களுக்கு அனுப்புகிறேன்.*

தெய்வத்துக்கு இரங்குவோன்,<br>கொங்கு நாடு

## விலாசங்கள்

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்,
பவழக்காரத் தெரு, சென்னை.

ம-ா-ா-ஸ்ரீ,
ரா. சுந்தரராமய்யரவர்கள்,
அன்னவாசல், புதுக்கோட்டை.

சிரஞ்சீவி,
நா. வேங்கடசுப்பிரமணியன்,
14, மேலாவணி மூல வீதி, மதுரை.

ஸ்ரீமதி,
அங்கயற்கண்ணம்மையார்,
மாதர் கலாசாலை, சென்னை.

[இவ்வாறு இன்னும் உள்ள விலாச வகைகளை ஆராய்ந்து அறிக.]

## 7. விண்ணப்பங்கள்

பொள்ளாச்சி முனிசிபல் சேர்மன் அவர்களுக்கு, வித்துவான் இராமசாமி நாயுடு எழுதிக்கொண்ட விண்ணப்பம் :

ஐயன்மீர்,

தங்கள் அதிகாரத்திற்குட்பட்ட முனிசிபல் உயர்தரக் கலாசாலையில் தமிழ்ப் பண்டிதர் பதவி ஒன்று காலியாய் இருப்பதாக 'ஹிந்து' பத்திரிகையிலே சென்ற வாரத்திலே வெளி வந்த ஒரு தேவை விளம்பரத்தால் அறிந்தேன்.

நான் சென்ற ஆறு வருஷங்களாக மதுரையில் உள்ள மதுரைக் காலேஜின் கிளைப் பள்ளிக்கூடங்களிலே தமிழ்ப்

பண்டிதராய் உத்தியோகம் வகித்து வருகிறேன். சென்ற ஆண்டிலே வித்துவான் பரீக்ஷையிலும் தேறியிருக்கிறேன் சிதம்பரம் முதலிய இடங்களிலுள்ள பெரிய வித்துவான்கள் பலரோடும் பழகி, அவர்களிடமிருந்து நற்சாட்சிப் பத்திரங்களும் பெற்றிருக்கிறேன்; ஆங்கில பாஷையிலும் உயர்தரக் கலாசாலை வகுப்புகளில் மொழி பெயர்ப்புப் பாடம் போதிக்க வேண்டுமளவு பயிற்சி பெற்றிருக்கிறேன். எனக்கு இப்போது இருபத்தைந்து வயது ஆகிறது.

தங்கள் கலாசாலையின் தமிழ்ப் பண்டிதர் பதவியை ஏற்றுக்கொள்ள நான் தகுதியுடையேன் என்று கருதுவீர்களாயின், அதனை எனக்கு அளித்துதவ வேண்டுகிறேன். இவ்விஷயத்தில் தாங்கள் செய்யும் உதவியை என்றும் மறவாது நன்றி பாராட்டும் கடப்பாடுடையேன் என்பதை வணக்கத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

இங்ஙனம்,
தங்கள் பணிவுள்ள,

உடுமலைப்பேட்டை,
8—4—'37

இராமசாமி நாயுடு,
உடுமலைப்பேட்டை.

குறிப்பு :—விண்ணப்பங்கள் எழுதும் முறைகளிலும் பல திறம் உண்டு. அவை அனுபவம் திறமை முதலிய காரணங்களால் வேறுபடும்.

பயிற்சி

1. உன் நண்பன் ஒருவன் இரண்டு தினங்கள் தன் கிராமத்தில் வந்திருந்து பொழுது போக்கலாம் என உன்னைக் கேட்டுக் கொள்கிறான். உன் தகப்பனார் அதற்கு அனுமதி தரவில்லை. உன் மனக் கருத்தை இந்தச் சந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறு வெளியிட்டு அந்நண்பனுக்கு ஒரு கடிதம் வரைக.

2. குற்றால நீர்வீழ்ச்சியைக் கண்டு மகிழ்ந்த ஒருவன், அதனைக் கண்டிராத தன் நண்பன் ஒருவனுக்கு எழுதுமாறு ஒரு கடிதம் எழுதுக.

3. உங்கள் பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்களும் மாணவர்களும் ஒரு கண் காட்சி காணப் புறப்படுகிறார்கள். உன் தகப்பனார் அயலூரில் இருக்கிறார். அவர் அனுமதி பெறுமாறு ஒரு கடிதம் எழுதுக.

4. உன் தங்கை மூன்றாம் பாரம் பரீக்ஷை தேறினாள் என்ற செய்தி கிடைக்கிறது. மேலே படிக்க வைக்கலாமா வேண்டாமா என்பதைப்பற்றி உன் தகப்பனாருக்குத் தக்க நியாயங்களைக் காட்டிக் கடிதம் எழுதுக.

5. எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷை தேறிய ஒருவன் உத்தியோகம் பெறும்பொருட்டு ஒரு ஜில்லாக் கலெக்டருக்கு எழுதுமாறு விண்ணப்பம் ஒன்று எழுதுக.

6. ஸம்ஸ்கிருத பாஷையில் சிறந்த கல்வி கற்க வேண்டுமென்ற ஆவலுள்ள ஒருவன் கலாசாலைத் தலைவர் ஒருவர்க்கு எழுதுவது போன்ற கடிதம் ஒன்று எழுதுக.

7. உங்கள் பள்ளிக்கூடம் காற்பந்தாட்டத்தில் அடுத்த ஊர்ப் பள்ளிக்கூடத்தை ஜயித்துவிட்டது. இந்தச் சந்தர்ப்பத்தில் புகைப் படம் பிடிக்க ஒருவரை அழைக்க வேண்டும். அவருக்கு அழைப்புக் கடிதம் எழுதுக.

8. உங்கள் ஊர் ஏழை மாணவர் இலவச போஜன சாலையில் (Free Boarding) ஓர் ஏழை மாணாக்கனைச் சேர்க்கவும், உண்டி உடை கொடுத்து அவனை ஆதரிக்கவும் வேண்டி அதன் தலைவர்க்கு ஒரு கடிதம் எழுதுக,

9. "தேவை. தமிழும் ஸம்ஸ்கிருதமும் தெரிந்த ஒரு வித்துவான். நல்ல கையெழுத்துள்ளவரா யிருக்க வேண்டும். சம்பளம் 30 முதல் 40 ரூபாய் வரை கிடைக்கும். பத்திராதிபர் "ஆரிய

மத ஸம்வர்த்தினி' சென்னை, என்ற விலாசத்துக்கு எழுதுக.'
—இந்த விளம்பரத்துக்குத் தக்க விடை தருக.

10. "உத்தியோகம் உள்ளது. சுருக்கெழுத்து இங்கிலீஷி லும் தமிழிலும் பழகித் தமிழ் உபந்நியாசங்களை விரைவிலே சுருக் கெழுத்தால் எழுதக்கூடியவர்களுக்கு 60 முதல் 200 ரூபாய் வரை சம்பளம் உண்டு. 'தமிழ் நாடு' காரியாலயம், சென்னை."
—இவ்விளம்பரத்துக்கு விடை தருக.

11. நண்பன் ஒருவனுக்கு ஒரு பேசும் படத்தை விவரித்து எழுதுக.

12. வீடு தீப்பற்றிய செய்தியை முனிசிபாலிட்டிக்குத் தெரிவிக்க.

13. உனது பள்ளிக்கூடத்தின் பெருமையை விளக்கி அயற் பள்ளிக்கூடத்தில் உள்ள உன் நண்பனுக்கு ஒருகடிதம் எழுதுக.

14. நீ ஆகாய விமானத்தில் முதன்முதலாகப் போய் வந்த அனுபவத்தை உன் தாயார்க்கு எழுதுக.

15. நெடுநாளாகக் கடிதம் எழுதாத நண்பனுக்குக் கடிதம் எழுதுக.

16. மேற்கடிதத்துக்கு விடையெழுதுக.

17. ஒரு புத்தகக்கடைக்கு அவர்கள் விலைப்பட்டியை அனுப்பும்படி எழுதுக.

18. மணி ஆர்டர் இரசீது வராமைக்காகத் தபால் ஆபீசுக்கு எழுதுக.

19. உத்தியோகம் வேண்டி ஜில்லாக் கலெக்டருக்கு எழுதுக.

20. "உதவிப் பத்திராசிரியர் தேவை. தமிழும் இங்கிலீ ஷும் தெரியவேண்டும்."—இவ்விளம்பரத்துக்கு விடை தருக.

# X. சுருக்கி எழுதுதல்

## (Summarization)

பெரிதும் நீண்டதொரு வியாசத்தைப் படித்த ஒருவன் அதன் கருத்துக்கள் அனைத்தும் தன் மனத்தில் நிலைபெற வேண்டிச் சுருக்கி எழுதுதல் நலமாம். உபந்நியாசங்களையும் கேட்ட அளவில் இங்ஙனம் சுருக்கி எழுதக்கூடும். சொந்த நடையிலேயே சுருக்கம் எழுதல் வேண்டும்; எப்பொருளைப் பற்றிச் சுருக்கம் எழுதினும், அதன் முக்கியாமிசங்களுள் ஒன்றும் குறையாதிருக்குமாறு பார்த்துக்கொள்ள வேண்டும். பெருநூல்களை ஆராய்ந்து படிப்போர், சுருக்கம் எழுதிப் படிப்பது சிறந்த முறையாம் என்று அறிஞர் கூறுவர் சுருங்கிய அளவிற் சொல்லப்பட்ட பொருள்களைப் பெருக்கி வளர்க்க அறிந்திருப்பது வியாசம் எழுதுவோர்க்கு அவசியம் ஆவது போலவே, பெருக வளர்ந்த பொருளைச் சுருக்கி எழுத அறிதலும் அவசியம். இம்முறை பற்றி இங்குச் சில உதாரணங்கள் காட்டப்படும்.

### தீய பழக்கங்கள்

தீய பழக்கங்களைப் பழகிக்கொள்வது மிகவும் எளிதாம். பழகிய பிறகு அவற்றை ஒழிப்பது மிகவும் சிரமசாத்தியமே. சிறு குழந்தைகள் ஆவல் மிகுதியால் அளவுக்கு மிஞ்சிய இனிப்புப் பண்டங்களைத் தின்று பின்பு நோயால் வருந்தக் காண்கிறோம். இளஞ்சிறுவர்கள் துஷ்டரோடு பழக்கங்களைக் கொஞ்சங் கொஞ்சமாகப் பழகிப் பிறகு அவற்றை விட்டொழிக்க முடியாமல் அல்லற்படுவதையும் காண்கிறோம். வயது வாய்ந்தவர்கள் புகையிலை, பொடி, சுருட்டு, அபின், கஞ்சா, மதுபான வகைகள் முதலியவற்றிலே மனம் செலுத்திக் கெட்டழிவதையும் காண்கிறோம்.

எத்தகைய தீய பழக்கத்தையும் பழகிக்கொண்ட பிறகு ஒழிப்பது எவர்க்கும் எளிதில் ஆவதில்லை. ஆகையால், நல்லோர் கூட்டுறவு பெற்று நற்பழக்கங்களை ஒவ்வொன்றாகக் கைக்கொள்வதால், தீய பழக்கங்களை நம்மிடம் வாராமல் ஒழிக்க முயல வேண்டும்.

## சுருக்கம்

தீய பழக்கங்கள் எளிதில் வரும். அவற்றை ஒழிப்பது அரிது. குழந்தைகள் முதல் முதியவர் வரையில் ஒவ்வொருவரும் யாதேனும் ஒரு தீய பழக்கம் உள்ளவராய் இருக்கக் காண்கிறோம், பொய், கொலை, களவு, மதுபானம் முதலிய தீய குணங்கள் தீயவர் சேர்க்கையில் வந்த தீய பழக்கங்களே. ஆகையால், நல்லவரோடு பழகித் தீய பழக்கங்களை ஒழிக்க முயலுதல் நலம்.

## காலையில் எழுதல்

சூரியன் உதிப்பதற்கு முன்னே எழுந்து, அஸ்தமித்த பின்னே அடங்குவது பறவைகள் இயற்கை. பறவைகள் நமக்குப புகட்டும் நல்வாழ்வு நெறியை நாம் பார்த்து அறிந்து கொள்ளாதிருப்பது எவ்வளவு இழிவாம்! அதிகாலையில் எழுதலால் அன்று முழுதும் செய்தற்குரிய பணிகளை ஒருவன் மிக்க சுறுசுறுப்போடு செய்ய இயலும். காலையில் எழுந்ததும் சிறிதளவு தேகப்பயிற்சி செய்து குளிர்ந்த நீரில் குளித்துவிட்டுத் தன் முயற்சியைத் தொடங்கும் ஒருவன், வெற்றியே பெறுவதில் அதிசயம் இல்லை. பிறர் ஒரு நாளில் நிறைவேற்றுவதைக் காட்டிலும் அதிகமாகவே மிக்க உற்சாகத்தோடு ஒரு நாளில் அவன் செய்து முடிப்பான். உரிய வேலைகளை எல்லாம் முடித்த பிறகு அவனுக்கு ஓய்வு நேரமும் கிடைக்கும். தூங்கி விழுந்த சோம்

பேறிக்கு உரிய பணிகளை நிறைவேற்றுவதற்கே போதிய அவகாசம் இராது.

காலை முதல் மாலை வரையில் நன்கு உழைக்கின்றுனாகையால், காலையில் எழுந்தவன் இரவில் நன்கு நிம்மதியாய்த் தூங்குவான். அவன் உடம்பில் எத்தகைய நோயும் அணுகாது. காலையில் எழுதல் என்ற பழக்கம் மாணக்கர்களுக்கு மிகவும் அவசியமானது. நாலரை மணிக்கே எழுந்திருக்கும் மாணக்கன் தனக்குரிய பாடங்களை நன்கு பயின்று, கணக்கு எழுத்து முதலியவற்றையும் செவ்வையுறச் செய்து, பள்ளிக்கூடத்துக்கும் காலம் தவறாது வரக்கூடியவனாய் இருப்பான். இரவிலே ஓய்வு பெற்ற அவன் மனமும் மூளையும் காலையில் பாடங்களை நன்கு கிரகித்துக்கொள்ளும்.

சூரியன் எழுந்து தோன்றும் வரையில் தூங்கும் பழக்கம் உடைய மாணக்கன், தன் வாழ்வில் வெற்றி பெறுவது துர்லபமே: ஆகையால், எத்தகையவர்க்கும் காலையில் எழுதல் நல்ல பழக்கமாம் என்பதை அறிகின்றும்.

## சுருக்கம்

காலையில் எழுதலால் விளையும் நன்மைகள் பலவாம்: ஊக்கமும் உழைப்பும் சுறுசுறுப்பும் காலையில் எழுவோனுக்கு இயல்பாய் அமையும். செய்வதற்குரியவற்றை எல்லாம் செய்து நிறைவேற்றி விடுவதால் அவனுக்கு ஓய்வும் உண்டு. இரவில் நன்கு உறங்கிக் காலையில் எழுதல் எளிதாம். மாணக்கர் காலையில் எழுவதால் தெளிந்த மனத்தோடு கற்றற்குரியவற்றைக் கற்றல் எளிதாகும். உடம்பு நோயற்றிருக்கவும், மனம் நன்கு உழைக்கவும் காலையில் எழுதலே சிறந்த உதவியாம்.

## பயிற்சி

சுருக்கி எழுதுக :—

### புத்தக மிகுதி

இக்காலப் புதுமைகளில் அச்சுத் தொழிலும் ஒன்றும். அச்சுத் தொழில் நன்கு வளர்ச்சி பெற்றிருக்கும் இந்நாளிலே நாகரிகம் பெற்ற மொழிகளிலெல்லாம் நாள்தோறும் பல்லாயிரக் கணக்கான புத்தகங்கள் அச்சாகி வெளி வருகின்றன. ஒவ்வொரு துறையிலும் பல நூற்றுக்கணக்கான புத்தகங்கள் மாதந்தோறும் தோன்றுகின்றன. புத்தகங்களின் கணக்கெடுத்து இன்னின்ன துறையில் இன்னின்ன பாஷையில் இத்துணை புத்தகங்கள் உள்ளன என்று அறுதியிட்டுரைப்பது இக்காலத்தில் அருமையாம். எண்ணிறந்த ஆசிரியர்கள் தோன்றி, அவர்களது அறிவின் நுட்பத்தால் உலகினர்க்கு உதவும் அரும்பொருள்கள் அளவிடற்கரியனவாம். நாம் அறியாப் பொருள் ஒன்றை நமக்கு நேர்படப் பயிற்றும் போதகாசிரியரை நாம் தெய்வத்திற்கு ஒப்ப மதிப்பது போலவே, பல புதுமைகளை நம் அறிவுக்கண்ணுக்குப் புலப்படக் காட்டும் நூலாசிரியர்களையும் நாம் போற்றிப் புகழ்ந்து பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். அறிவுச் செல்வத்தை உதவும் புத்தகங்களோடு நமது மனக் கவலையை மாற்றவும், பொழுதைப் போக்கவும் உதவுகிற புத்தகங்களும் தோன்றியுள்ளன. அவற்றை உதவிய ஆசிரியர்களும் நம் அன்புக்குரியவர்களே. ஆயினும், புதுமை புதுமையாகப் புத்தகங்களைப் படைக்கும் ஆசிரியர்கள் அனைவரும் பேருபகாரிகள் என்று நாம் கருதற்கில்லை. ஏனெனிற் சிலர் இரண்டு புத்தகங்களிலே இங்கும் அங்குமாகச் சில பொருள்களைத் திரட்டி மூன்றாவது புத்தகம் எழுதிவிடுகின்றனர் அங்ஙனம் வெளி வந்த புத்தகஙகளே இந்நாளிலே விளம்பரத்தின் உதவியால் மிக்க பெருமை அடைகின்றன. ஆகையால், நம்முன்னே நிறைந்துள்ள கோடிக்கணக்கான அச்சுப் புத்தகங்களில் எவை நம் அறிவு வளர்ச்சிக்கு உதவும் என்று அறிவதே சிரமமாய் விடுகிறது. நம் நாட்டிலே ஒரு புத்தகம் பெறப் பல காதம் அலைந்த காலம் உண்டு. இப்பொழுதோ, எண்

ணிறைந்த நல்ல புத்தகங்கள் தோன்றிப் படிப்பார் இல்லாமல் புத்தக சாலைகளில் தூங்குகின்றன. நாடெங்கும் புத்தக சாலைகள் பெருக வேண்டும் என்று எங்கும் பேச்சாயிருக்கும் இக்காலத்திலே, முன்னமே அமைந்துள்ள புஸ்தகசாலைகளில் எத்தனை புத்தகங்கள் படிக்கப்படாமல் செல்லுக்கு இரையாகின்றன என்பதைக் கவனிப்பவர் சிலரேனும் இல்லை. பல கோடிக்கணக்கான புத்தகங்களை வைத்துக் கொண்டு நன்கு பயன்படுத்த அறியாமல் இருக்கும் இக்காலத்தவர் சில புத்தகங்களையே மிகவும் முயன்று தேடிப் படித்த தம் முன்னோர்க்கு நற்புகழை விளைவிக்கின்றனர். பயனற்ற புத்தகங்கள் வெளிவராதிருக்கச் சட்டமும் ராஜாங்கமும் உதவி செய்ய வேண்டும் என்று எதிர் பார்க்க இயலாது. இன்னார்தான் எழுதுவது, இன்ன பொருளைப் பற்றித்தான் எழுதுவது என்ற நிர்ணயமின்றி எல்லாரும் எல்லாம் எழுதி வெளியிடலாம் என்று அமைந்திருக்கும் இக்காலத்தின் கோலத்தை என்னென்போம்!

## வறுமையின் பெருமை

'கொடிது கொடிது வறுமை கொடிது!' என்று கூறுவதே உலகினர் இயல்பாய் இருக்கிறது. 'எல்லாம் பொருளிற் பிறந்து விடும்' என்பதே ஆண்டி முதல் அரசர் வரை உறுதியாய்க்கொள்ளும் கொள்கையாய் உள்ளது. இவ்விரு பழமொழிகளும் உலக மக்கள் மனப்பான்மையை நன்கு விளக்குகின்றன. சிலர் சேர்ந்து ஒரு கருத்தை வெளியிட்டு உலகிற் பரப்பிவிட்டால், அது வேத வாக்காகி விடுகிறது. வறுமை வாழ்க்கை உண்மையில் இன்பமே நிறைந்ததுதானோ என்று சிந்தித்துப் பார்ப்பவர் மிகச்சிலரே. அன்று அன்று; உழைத்துப் பெறும் பொருளைக்கொண்டு, உண்டு உடுத்து 'நாளைக்கு என்ன செய்வோம்!' என்ற கவலையின்றி வாழும் அமைதியான எளிய வாழ்வில் உண்மையான பெருமையில்லையா? முடியும் குடையும் கொண்ட அரசர்கள் செல்வத்திலேயே புரண்டு வாழ்ந்தும், அகப்பகைக்கும் புறப்பகைக்கும் அஞ்சி, இரவு பகல் ஓய்வு ஒழிவு இன்றி விழித்த வண்ணம் இருந்து அல்லற்படுவது உண்டன்றோ? எளிய குடிசைகளிலும், வறிய வாழ்க்கையிலும் பெரிய

மாளிகைகளிலே செல்வ வாழ்விலே காணாத மனத்திருப்தி என்ற பெரும்பேற்றைக் காண்பது உண்மையே. செல்வர் வீட்டுச் சிறுவர் கள் பல விதச் சௌகரியங்களோடு கலாசாலைகளுக்கு வந்து, வறிதே பொழுது போக்கி, செல்வச் செருக்கால் அழிந்து, தமக்கும் உலகுக்கும் பயனற்றவராவதைக் காண்கின்றோமன்றோ? உண்ண உணவும் உடுக்க உடையும் இல்லாத ஏழைச் சிறுவர்கள், தங்கள் முயற்சியாலேயே அழியாத செல்வமாகிய கல்விச்செல்வம் பெற்றுப் புகழ் வாய்ப்பதும் காண்கின்றோம் அல்லவா?

வறிய குடிகளில் உள்ளார் அனைவரும் உறவின் முறை முதலிய தொடர்புகளைக் கருதாமலே ஒருவர்க்கொருவர் உதவிசெய்து மகிழும் காட்சியையும் நாம் காண்கின்றோம். இப்புனித வாழ்க்கையானது செல்வர் குடிகளில் மருந்துக்கும் அகப்படாதல்லவா?

உலகில் உள்ள பல நாடுகளிலும் மொழிகள் வளம் பெற்றுக் காவியச் செல்வம் பெற்று விளங்குவது, தம்மை மறந்து உலகிற்கு உழைத்த புலவர்கள் முயற்சியாலாகும். அப்புலவர் முயற்சியெல்லாம் அவரை வாட்டிய வறுமையால் எழுந்தனவே என்பது சரித்திரவுண்மை. செல்வப்பெருக்கில் மயங்கி வாழ்ந்த எவரும் உலகிற்குப் பொதுவில் உதவும் அரிய நூல்களை இயற்றி உதவவில்லை. உலகப் பொது அறநூலாகிய திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர் வறுமையே பெருமையாகக்கொண்டவர். புலவர்கள், அரசர் ஆதரவுகளைச் சில காலம் பெற்றிருப்பினும், பெரும்பாலும் வறுமையில் வாழ்ந்தவர்களே. இறவாப் புகழ் உடம்பு படைத்த நம் முன்னோராகிய புலவர் பெருமக்களுக்குப் பெருமையை விளைத்த வறுமை வாழ்விற் சிறப்பில்லை என்று எவரே கூறத் துணிவார்?

புடம் இட்ட பொன்னே ஒளி பெறும். வறுமை வாழ்க்கை, மனிதர் குணத்தைப் புடமிட்டு விளக்கும். ஆகையால், வறுமையை இகழாதிருக்க முயலுதல் நன்றாம்.

---

# XI. செய்யுட்பொருள் எழுதுதல்

## (Paraphrase)

தொடர்ச்சியான ஒரு செய்தியை விளக்கும் சில செய்யுட்களை ஒரு முறைக்கிருமுறை ஆராய்ந்து, அவற்றுள் அமைந்த பொருளை உரை நடையில் எழுதப் பயில்வது ஒரு வகைக் கட்டுரைப் பயிற்சியாம். இஃது ஆங்கிலம் பயிலும் மாணவர்கள் அடிக்கடி பயில்வதொரு பயிற்சியே. ஆங்கிலச் செய்யுட்கள் பெரும்பாலும் எளிய நடையில் இயன்றிருப்பதால், அவற்றைப் பார்த்து உரை நடை அமைப்பது மாணவர்க்கு எளிதாகின்றது. தமிழ்ச் செய்யுட்களில் எளிய நடையில் சிறிய வரலாறுகளைத் தெரிவிக்கும் தொடர்ச்சியானசெய்யுட்கள் மிகவும் குறைவாய் இருப்பதால், செய்யுட்பொருள் எழுதுதல் என்னும் இப்பயிற்சி தமிழில் அமையவில்லை. இந்நாளிலே எளிய இனிய நடையில் உள்ள சில செய்யுட்கள் தோன்றியிருப்பதால், அவற்றை இவ்வகைக் கட்டுரைக்குப் பயன்படுத்துதல் நன்றாகும்.

### உதாரணம்

### 1. சிங்கத்தை முயல் கொன்ற கதை

குறுமுயல் சிங்கந் தன்னைக் கொன்றதொன் றுண்டே தென்னிற்<br>
செறியுமோர் காட்டி லேயோர் சிங்கமுண்(டு) ; அந்தக் காட்டில்<br>
உறவிலா கனைத்தும் வேட்டை யாடியூன் மிகவும் தின்று,<br>
வெறிகொடு திரியு நாளில் விலங்கெலா மொருங்கு கூடி, 1

“ ஆணிளஞ் சிங்க மே ! உன் னடவியில் விலங்கை யெல்லாம<br>
வீணிலே கொல்ல வேண்டா ; விதத்தினிற் றினமொன் றாக<br>
வூணுனக் களிப்போம்,” என்ன வுண்மையாக் கொண்டு சிங்கம்<br>
ஆணையு மிட்டொவ் வொன்று வருந்தியங் கிருக்கு நாளில், 2

தனிமுய லொன்றுக் கோர்நாள் தன்முறை வருத லோடும்,
'இனியது விடாது நம்மை யெனினுமோர் எடுப்பெ டுத்து
வினையைப் போதுசெய்து வென்றுநாம் உய்ந்தோ மாகில்
கனிவிலங் கனைத்து முய்யும் நமக்குநற் புகழுண்(டு)" என்றே 3

கருதிய சிங்கத் தின்றன் கடும்பசி வேளை தப்பி,
வருதலு முயலை நோக்கி மன்னன்," நம் பசிவே ளைக்குப்
பெருமத வேழ மேனும் பிந்துவ தில்லை; பிந்தி
வருவதென்? உரைநீ," என்று மனந்தனிற் சினந்து கூற, 4

'ஐய! நின் பசித்த வேளைக் கடியனேன் வந்தேன்; அங்கோர்
வெய்யசிங் கத்தைக் கண்டு வெருவியங் கொளித்தி ருந்தேன்;
பையவே சிங்க மங்கோர் பருமுழை புகுந்த பின்னர்த்
துய்யஉன் பக்கல் வந்தேன், சுவாமி,"என் றிறைஞ்சி நிற்க, 5

'சிங்கம்," நா மல்லால் வேறோர் சிங்கநீ கண்டா யாகில்
அங்கதைக் காட்டு வா,"என் றழைத்தலும், அழைத்துப் போயோர்
பங்கமும் புனலுஞ் சேர்ந்த பாழ்ந்துர வதனைக் காட்ட,
அங்கத்தை யெட்டிப் பார்த்தே அதனிழ லுருவந் தோன்ற, 6

தன்னுரு நிழலைத் தானே சத்துரு வென்று பாய்ந்து,
துன்னுபங் கத்த முழ்கித் துளங்கியே யுயிரிழந்த(து);
என்னலால், உபாயத் தாலே யாவையும் வெல்ல லாமென்(று)
இன்னமோர் நண்டு கொக்கை யீர்ந்ததோர் கதையும் சொல்லும்: 7

## செய்யுட்பொருள்

சிறிய முயல் ஒன்று பெரியதொரு சிங்கத்தைக் கொன்ற கதை ஒன்று உண்டு. அதனைக் கூறுகின்றேன். மரங்கள் அடர்ந்த ஒரு காட்டில் ஒரு சிங்கம் வாழ்ந்தது. அஃது அக்காட்டில் உள்ள விலங்கு களையெல்லாம் தன் மனம் போனபடி வேட்டையாடித் தின்று வந்தது. விலங்குகளெல்லாம் இக்கொடுமையைப் பொறுமல், ஒரு நாள் ஒன்று சேர்ந்து, அச்சிங்கத்தினிடம் சென்று, "அரச சிங்கமே, இக்காட்டில் உள்ள விலங்குகளையெல்லாம் நீ வீணுகக் கொன்று

குவிக்கவேண்டா. உனக்கு வேண்டுமளவு உணவுக்கு உதவும் மிருகத்தை நாங்களே அனுப்புகிறோம்," என்று கூறின.

அதைக் கேட்ட சிங்கம், "அங்ஙனமே ஆகுக," என்று ஆணையிட்டுரைத்தது. மிருகங்கள் நாளைக்கொன்றாக அச்சிங்கத்துக்கு இரையாகி வந்தன.

ஒரு நாள் ஒரு சிறு முயலுக்கு முறை வந்தது. அது, "இனி நம்மைச் சிங்கம் கொன்று தின்னாமல் விடாது. இருந்தாலும், ஒரு தந்திரம் செய்து பார்ப்போம்! நம் தந்திரம் பலித்தால், நாமும் பிழைப்போம்; மற்ற விலங்குகளும் பிழைக்கும்; அதனால், நமக்குக் கீர்த்தியும் விளையும்," என்று எண்ணிக்கொண்டு, அன்று உரிய வேளை தப்பித் தாமதமாகச் சிங்கத்தினிடம் போயிற்று.

சிங்கம் முயலைப் பார்த்து, "அற்ப முயலே, மிருகங்களுள் உருவத்தாற் பெரியதாகிய யானையும் நம் உணவு வேளை தாமதித்து வருவதில்லை. நீ இப்படி வந்ததற்கு என்ன காரணம்?" என்று கோபத்துடன் கேட்டது.

முயல் பயந்து நடுங்கி, வணக்கமாக முன் நின்று, 'சுவாமி நான் உமது பசி வேளைக்கு வரவேண்டும் என்று வெகு நேர முன்னே புறப்பட்டேன். வரும் வழியில் ஒரு பெரிய சிங்கத்தைக் கண்டேன். அதற்கு அஞ்சி இந்நேரம் வரையில் ஒளிந்திருந்தேன். அது ஒரு பெரிய குகையிற் புகுந்ததும் உம்மிடம் ஓடி வந்தேன்,', என்று கூறி வணங்கியது.

சிங்கம், "நம்மைத் தவிர இக்காட்டில் நீ வேறு ஒரு சிங்கத்தைக் கண்டாயாகில், அதனைக் காட்டு. என்னுடன் வா," என்று கூறி முன் சென்றது. முயல் பின் சென்று ஒரு பாழுங்கிணற்றைக் காட்டியது. அக்கிணற்றில் தனது நிழலைப் பார்த்த சிங்கம், அதுவே தனது பகைச் சிங்கம் என்று துணிந்து, வேகமாய்ப் பாய்ந்தது. அக்கிணறு சேறும் நீரும் நிறைந்ததாகையால், சிங்கம் சேற்றில் அழுந்திச்செத்தது. இதனால், 'உபாயத்தால் யாவையும் வெல்லலாம்,' என்பது விளங்குகின்றது.

---

## 2. நண்டு கொக்கைக் கொன்ற கதை

மீனொன்றைப் பு மேதின்றுடல் மிகவேவளர் கொக்குத்
தானங்கொரு பால்நண்டுதனைக்கண்டிரை கொள்ள
ஞானந்தரு மோனங்கொடு நண்ணும்படி கண்டப்
பால்நண்டதை, "நீயிங்குறை பண்பேதுரை," என்ன, 1

"என்னென்றுரை செய்வேன்! இனி யாவெனமன முய்வேன்!
கொன்னுந்திய வலைகாரர்கள் கூடிக்குளம் ஏரி
மன்னுந்தட மெல்லாம்மிக வளைந்தேவலை வீசிச்
சின்னஞ்சிறு பொடிமீன்முதற் சேரப்பிடித் தாரே! 2

"இந்தக்குள நாளைக்கென எண்ணிக்கொடு போனார்;
அந்தப்படி வந்தேபிடித் தவர்காவினி லெடுத்தே
சந்தைக்கடை தொறுமீன்கடை தானேயென விற்பார்;
எந்தப்படி யிவர்தப்புவ தெனவெண்ணியி ருந்தேன். 3

"அந்தப்பழி காரர்வரு முனமேயொரு பாயம்
சிந்தித்தனன் நான்; அப்படிச் செய்தாலவை யுய்யும்;
எந்தப்படி யானும் அழைத் திங்கேவரு வாயேல்,
இந்தக்குளம் விட்டோர்குளம் எய்தும்படி செய்வேன்." 4

என்றேபக ராசன்சொல இயல்நண்டதை நம்பிச்
சென்றேபல மீனோடுரை செயவேயவை கூடி,
'நன்றே!' என வரவொவ்வொரு நடைக்கொன்றுகொண் டேகிக்
கொன்றேசில, தின்றேசில கொடும்பாறையி லுலர்த்தி, 5

அலவன்றனை தனையுண்டிட அதையுங்கொடு செலவந்
நிலமெங்கணு மீனென்புகள் நிறைகொண்டது கண்டே,
"நலதிங்கிது பலமீனையும் நனிதின்றது; நமையும்
கொலவந்தது; நாமும்மிது கொலுமுன்கொலு வோமே. 6

"நம்மால்வரு பிழையேயிது நாமும்மந்த மீன்போல்
சும்மாவிருந் தனமேற்கொலும்; அதிலேயொரு சூழ்ச்சி

எம்மால்வகை வருமாறினிச் சேய்வேம்,"என வெண்ணி,
அம்மாபகன் கழுத்தைக்கவை யடியால்நெருக் கியதே. 7

நெருக்குண்டற வீழ்ந்தேபகம் நீங்கிற்றுயிர்; அலவன்
இருக்குந்தல மேகித்தன தினத்தோடிருந் ததுவே.
செருக்கும்பகை பெரிதாகிலும் சிலதந்திர வகையால்
முருக்கும்படி நினைந்தாலதின் முடியாததும் உளதோ? 8

## செய்யுட் பொருள்

மீன்களையே தின்று உடல் வளர்ந்த கொக்கு ஒன்று, வெண்மை நிறமான நண்டு ஒன்றைக் கண்டு, அதைத் தின்னக் கருதித் தவம் புரிபவர்போல மௌனம் சாதித்து இருந்தது. அதைக் கண்ட நண்டு, "நீ இங்கு இப்படி இருப்பதற்கு என்ன காரணம்?" என்று கேட்டது. கொக்கு, "நான் என்னென்று சொல்வேன்! இனி நான் எப்படி உய்வேன்! மகா பாவிகளாகிய வலைகாரர்கள் ஒன்றாய்த் திரண்டு, குளம் ஏரி தடாகம் முதலிய இடங்களையெல்லாம் வளைந்து, வலை வீசிச் சின்னஞ்சிறு பொடி மீன்களைக்கூட விடாமல் எல்லாவற்றையும் பிடித்தார்கள்; 'இந்தக் குளத்துக்கு நாளை வரலாம்,' என்று கூறிப் போனார்கள். அந்தப்படி வந்து அவர்கள் மீன்களையெல்லாம் பிடித்துக் கடைகளில் விற்பார்கள். "எந்த விதத்தால் இந்த மீன்களைத் தப்புவிக்கலாம்!" என்றே யோசிக்கிறேன். அப்பழிகாரர் வரு முன்னே அம்மீன்கள் எல்லாம் வேறோர் குளம்போய்ச் சேர்ந்தாற் பிழைக்கும். அவற்றையெல்லாம் நீ இங்கே அழைத்து வந்தால், நான் அவற்றை வேறொரு குளத்திற் கொண்டுபோய்ச் சேர்க்கிறேன்," என்று கூறியது.

நண்டு இதனை மெய்யென்று நம்பி, மீன்களிடம் சொல்லி அவற்றை வரச் செய்தது. கொக்கு நடைக்கு ஒரு மீனாக எடுத்துச் சென்று, சிலவற்றைக் கொன்று தின்றது; சிலவற்றைப் பாறையின்மேல் உலர்த்தியது; பின்பு நண்டைத் தின்னத் துணிந்து அதனையும் தூக்கிக்கொண்டு சென்றது.

வழியெங்கும் மீன் எலும்புகள் கிடப்பதைக் கண்ட நண்டு, உண்மையை உணர்ந்துகொண்டு, "நல்லது! இது பல மீன்களையும் தின்றது! இப்பொழுது நம்மையும் கொல்ல வந்தது! நாம் இது நம்மைக் கொல்லுமுன் இதனைக் கொன்றுவிடுவோம்! இது நம்மால் வந்த பிழையே. நாமும் அம்மீன்களைப்போலச் சும்மா இருந்தால், இது நம்மையும் கொன்றுவிடும். இனி நம்மால் மற்ற மீன்களுக்கும் நலம் ஏற்படும்படி ஒரு தந்திரம் செய்வோம்," என்று துணிந்து, கொக்கின் கழுத்தைத் தன் கால்களால் இடுக்கி நெருக்கி அதனைக் கொன்றது. கொக்கு இப்படி நெருக்குண்டு இறக்கவும் நண்டு தன் இடத்துக்குப் போய்த் தன் இனத்தோடு இன்புற்று வாழ்ந்தது.

பகை பெரிதாய் இருப்பினும், தந்திர உபாயங்களால் ஒழிக்க நினைத்தால், அதனால் இயலாத காரியமும் உண்டோ ?

## பயிற்சி

பின் வரும் செய்யுட்களின் பொருளை எழுதுக :—

### 1. புலியால் பிராமணன் இறந்த கதை

மூப்புடைப் புலிதா னொன்று மூழ்கியோர் ஏரி யின்கீழ்க்
காப்புடன் தருப்பை தன்னைக் கையில்வைத் திருக்கும் போது,
காப்புடை மறைவ லாளன் கண்ணியவ் வழியிற் செல்லக்
கூப்பிடல் செய்தன் னோனைக் குறித்தந்தப் புலிதான் கூறும் : 1

" அந்தணா ! இந்தக் காப்பை அளிப்பன்; நீ வா," என் றோதச்
சிந்தையில் வேட்கை கூர்ந்து செப்புவான்: ' புலியா ரே!நீர்
வெந்துயர்க் கொலைமாந் தர்க்கு விளைப்பது விட்டுத் தானம்
எந்தநல் வழியிற் செய்வீர் ? எனக்கதைக் கூறு(க)," என்றான். 2

புலியது கேட்டு, "நானோ, பூசுரா! நகமும் பல்லும்
இலன்; கிழ மானேன்; பாவம் இழைப்பது விடுத்து, நானும்
பொலிதரு தானஞ் செய்கை பொருளெனக் கொண்டேன்;அஞ்சேல்
சலமதில் மூழ்கி வந்து தருமிதைக் கொடுபோ," என்ன, 3

'நன்றெ' றனை மறையோன் மூழ்க நண்ணினன் ஏரி தன்னில்;
அன்றவன் கால்கள் சேற்றில் அழுந்திடத் திகைத்து நின்றான்;
சென்றது புலி,"நான் உன்னைச் சேற்றினின் றெடுப்பேன்" என்னக்
கொன்றது; குருதி தன்னைக் குடித்தது; முடித்த தன்றே. 4

## 2. வேடன் கதை

வனமொன்றி லொருவேடன் வளர்குருவிக் கூட்டினொடும்,
இனமொன்று வேட்டைக்கரு விகளுமெடுத் தேதிரிய,
கனமிருண்டு மழைபெய்யக் காற்றெழும்ப அவன்கண்டு
மனமருண்டோர் மரத்தின்கீழ் வந்திருந்தான்; அப்போது, 1

தங்குமதன் மேலிருந்த புறவொன்று தன்பேட்டை,
"எங்ககன்ற தோ!வனத்தில் யாரேனும் பிடித்தாரோ!
மங்கியதோ!" எனப்புகல, அதுகேட்டு வனசரன்றன்
அங்கையுறு கூட்டினுற்ற பெண்புறு அழுதுசொலும்: 2

"முன்வினையா லிதுபெற்றேன்; ஆயினு நின் முனமடைந்த
இன்னவனுக் குபசாரம் புரி"எனலும், எரிகொணர்வி,
அன்னவனை யனழத்துடலின் குளிர்போக்கி, "ஆகாரம்
என்னைநீ யருந்(து)"என்று வீழ்ந்திறக்க, இவன் நோக்கி, 3

"அன்பினால் நம்பொருட்டு வீழ்ந்தவிதை அருந்தியிடில்
துன்பம்வரும்," எனப்பேட்டை விடுத்திடலுஞ் சூழ்ந்ததுவும்
தன்புருடன் பிரிவதனால் வீழ்ந்திறக்கத் தகுமிரண்டும்
இன்பமுறத் தெய்வவுரு வெய்திவா னுலகடைந்த. 4

---

# XII. சம்பாஷணைகள்

## (Conversations)

இருவர் பேசும் முறையைப் பின்பற்றி எழுதப்படும் கட்டுரைகள் சம்பாஷணைகள் எனப் பெயர் பெறும். நம் நாட்டுப் பழைய காவியங்களில் இடையிடையே சம்பாஷணைகள் பல வருகின்றன. அவைகள் செய்யுள் நடையில் இருக்கின்றன. சமீப காலத்தில் வசன நடை எழுதப் புகுந்த அறிஞர்களில் விநோத ரச மஞ்சரியின் ஆசிரியர் ஒருவராவர். அவர் தம் புத்தகத்திலே ஆஸ்திக நாஸ்திக ஸம்வாதம் என்றும், சுபட்ச விபட்ச சம்வாதம் என்றும் சம்பாஷணைகளை அமைத்திருக்கிறார். கொழும்பிலிருந்து சென்னைக்கு வந்த தி. ம. பொன்னுசாமிப் பிள்ளை என்பவர் எழுதிய நவீன புத்தகங்களெல்லாம் பெரும்பாலும் சம்பாஷணை ரூபமாகவே அமைந்திருக்கின்றன. இவற்றிலிருந்து சம்பாஷணை முறையிற் கட்டுரை அமைக்கும் நெறியை எளிதில் அறியலாம்.

சம்பாஷணையென்பது காட்சிகள், திரைகள், அலங்காரங்கள் முதலிய அங்கங்கள் இல்லாத சிறியதொரு நாடகமே. நாடகம் என்பது இருவர் தம் உள்ளக்கருத்தை வெளியிட்டுரைப்பதாகும். சம்பாஷணை முறையில் எழுதுவதால், சாமானியமாக ஒருவரோடொருவர் பேசிக்கொள்ளும் நடையில் நம் கருத்தை வெளியிடச் செளகரியம் உண்டாம்.

சம்பாஷணையென்பது இயற்கைக்கு மாறுபட்டு இருத்தலாகாது. முன்னே ஒன்றை நினைத்து, உள்ளத்தில் அமைத்துச் சொற்களை அடுக்கிக் கொடுப்பது சம்பாஷணை ஆகாது. இயல்பாக எழும் சொற்களும், அவற்றால் விளங்

கும் கருத்துக்களுமே சம்பாஷணையில் இருக்க இடம் பெறும். கடின பதப் பிரயோகங்களும், செந்தமிழ் நடையும் சம்பாஷணையின் இயற்கை அழகுக்கு உதவுவனவாகா. பேசுவோர் அறிவின் நிலைமைக்குத் தக்க நடையில் அவை அமைந்திருத்தல் அத்தியாவசியமாகும். எதிர் மொழிகள் நன்கு பொருந்தல் வேண்டும். பழமொழிகள் பேச்சுக்களிலே கலப்பதுபோலக் கலக்கலாம் பெரிய மேற்கோள் ஒன்றும் விரவலாகாது. நீண்ட வாக்கியங்கள் அமைப்பது சம்பா ஷணையின் அழகைக் கெடுக்கும். சாமானியமாக ஜனங் கள் ஒருவரோடொருவர் பேசும்போது நீண்ட வாக்கியங்கள் உபயோகமாவதில்லை. ஒருவர் பேசும்போது இடையிலே புகுந்து, அவர் வாக்கியம் முடியா முன்னரே பேசுவது சம் பாஷணையில் இயல்பே. கேள்விக்கு விடை கூறாமல் வினு வெதிர் வினுதலும் இயற்கை வழக்காம். விநோதக் கூற்றுக் கள் இடையிடையே வருதல் நலம். ஒன்றும் அளவுக்கு மிஞ்சிப் போதலாகாது. பேசுவோர் இயற்கைக்கேற்ப அமை வது எல்லாவற்றிலும் மிகவும் முக்கியமாம்.

## மாதிரிப் பயிற்சி

1. கல்வியில் ஊக்கமுள்ள மாணவனுக்கும் விளையாட்டில் விருப்பமுடைய மாணவனுக்கும் நிகழ்ந்த சம்பாஷணை

சுந்தரன் :—கணபதி, நீ வருகிற மாதிரியைப் பார்த்தால் இப்பொழுதுதான் கஸரத்துச் செய்து முடித்துவிட்டு வரு வது போலத் தெரிகிறது. நாளைய தினம் பரீக்ஷை ஆரம்ப மாகிறதே! ஏதாவது படித்தாயா?

கணபதி :—உன்னைப்போலப் புஸ்தகப் பூச்சியாய் இருக்க என்னால் இயலாது. நாளைப் பரீக்ஷைக்கு வேண்டிய பாடம் ஒன்றும் நான் படிக்கவில்லையென்பது வாஸ்தவமே.

சுந்தரன் :—இப்படியே விளையாடிக்கொண்டிருந்தால், பரீக்ஷை தேறுதற்கு என்ன செய்வாய் ?

கணபதி :—நம் பள்ளிக்கூடத்தில் புதிதாக ஆரம்பித்த சில விளையாட்டுக்களில் நான் சேர்ந்திருக்கிறேன். அடுத்த ஊரிலிருந்து சிலர் நம்மோடு அடுத்த வாரம் விளையாட வரப் போகின்றனர். அப்பொழுது நம் பள்ளிக்கூடம் ஜயித்துப் புகழ் பெற வேண்டும். அதற்காக நான் முயற்சி செய்து கொண்டிருக்கிறேன்.

சுந்தரன் :—நம் பள்ளிக்கூடம் பெயர் வாங்குவது உன் கையிலேதான் இருக்கிறதோ ? இந்த விளையாட்டுக்களில் இன்னொரு சிறு பள்ளிக்கூடத்தை ஜயிப்பதால் வரும் பெயர் பெரிது என்று நீ எண்ணுகிறாய். இந்த இராசதானியில் உள்ள எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் படிக்கிற பிள்ளைகள் இன்னும் இரண்டு மாதங்களிற் பெரிய பரீக்ஷை எழுதப் போகிறார்களே ! அப்பொழுது நாமும் எழுதப் போக வேண்டுமே ! நீயும் அதில் வரவேண்டியவன்தானே ! இந்த இராசதானி முழுவதிலுமுள்ள எல்லாப் பிள்ளைகளும் ஒன்றாய்ப் பரீக்ஷிக்கப்படும் ஒரு விஷயத்தில் நம் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளில் ஒருவன் முதலில் நிற்பது விசேஷம் அல்லவா?

கணபதி :—விசேஷந்தான். யார் இல்லை என்று சொன்னார்கள் ? ஆனால், அந்த வேலை என்னால் ஆகாதது. உன்னால் இயலுமானாற் பார்க்கலாம். நான் போகும் துறையில் இப்பொழுது பெறும் வெற்றிகள் சிறியனவாயிருக்கலாம். ஆனாலும், நாளாகவாக, விசேஷக் கீர்த்திகள் உண்டாகும். இப்பொழுது நம் ஊரில் பெருமை; இன்னும் சில நாட்களில் நம் ஜில்லாவிற் பெருமை; சில மாதங்களில் நம் இராசதானியில் முதன்மை; இன்னும் கொஞ்சம் முயன்றால் இந்தியா முழுவதிலும் போய் விளையாடி வெற்றி பெறலாம்.

சுந்தரன் :—இப்படிச் சொல்லிக்கொண்டே போனால் இன்னும் மேலே போவாய் போலிருக்கிறதே!

கணபதி :—மேலே போகாமலென்ன? நம் நாட்டிலிருந்து சில 'கிரிக்கெட்டு' விளையாட்டுக் கூட்டத்தார் உலகமெங்கும் சென்று சமீபத்தில் வெற்றியடைந்து புகழ்பெற்று வந்ததை நீ அறியாயா? மல் யுத்தத்திற் சிறந்த இந்தியன் ஒருவன் அயல் நாட்டவரையெல்லாம் வென்று வந்த செய்தியை நீ கேட்கவில்லையா? இவை நீ சொல்லும் கீர்த்தியைக் காட்டிலும் பெருமையுடையவை ஆகுமா? ஆகாவா?

சுந்தரன் :—நீ என்ன சொன்னாலும் ஒருவன் தன் அறிவை வளர்த்து அடையும் பெருமை, வெறுந்தேக பலத்தால் அடைவதைக்காட்டிலும் சிறப்பானது என்பதே எனது அபிப்பிராயம்.

கணபதி :—என்ன! வெறுந்தேக பலம் நன்கு அமையாவிட்டால் உன் அறிவு எப்படி வளரும்? நம்முடைய முன்னோர்கள் அறிவிற் சிறந்தவர்களே. அவர்கள் காலையிற் குளித்துச் சூரிய நமஸ்காரம் முதலியவற்றைச் செய்து வந்தது, அறிவு வளர்ச்சிக்காகவா தேக பலத்துக்காகவா? இன்றும் நம் நாட்டிற் சிலர் தேக சௌக்கியத்திற்காகச் சூரிய நமஸ்காரம் செய்கின்றனரல்லவா?

சுந்தரன் :—பழைய முறையில் தேகப்பயிற்சி, அறிவு வளர்ச்சிக்கு உதவியாகக் கருதப்பட்டது என்றே எண்ணுகிறேன். இந்நாளில் அறிவு வளர்ச்சியைச் சிறிதும் கவனியாமற் சிலர் தேகப் பயிற்சியையே பெரிதாய் எண்ணுகின்றனர்.

கணபதி :—அதை மாத்திரம் கூறுகிறாயே! உன்னைப் போல உள்ள சிலர் அறிவை வளர்ப்பதே பெரிதாக எண்ணி உடம்பை எலும்பும் தோலும் ஆக்கிவிடுகின்றனரே! அதற்கென்ன செய்வது?

சுந்தரன் :—உலகப் பிரசித்தி பெற்றவர்களிற் பெரும்பான்மையானவர்கள் அறிவாற் சிறந்தவர்களே. நம் நாட்டவர் ஆகிய இரவீந்திரநாத தாகூரும், இராதாகிருஷ்ணனும், சி. வி. ராமனும், ஜகதீச சந்திர போஸும் இவ்வழியில் தலைநின்றவராவர்.

கணபதி:—நல்ல கீர்த்தியை அடைந்தும் முழுதும் அனுபவிக்கப் பாக்கியம் இல்லாமல் மிகவும் இளவயதில் இறந்துபோன கும்பகோணம் ராமானுஜனை நீ மறந்துவிட்டாயே !

சுந்தரன் :—தேகப்பயிற்சியும் வேண்டுவதே.

## 2. சரித்திரமும் சாஸ்திரமும்

கேசவன் :—சங்கரா, நீ சதா காலமும் இந்திய சரித்திரத்தை மிகவும் ஆர்வத்தோடு படித்துக்கொண்டிருக்கிறாயே ! புதுப்புது விஷயம் ஏதாவது காண்கிறாயா ?

சங்கரன் :—கேசவா, நீ சாஸ்திர ஆராய்ச்சிச் சாலையிற் சென்று கண்ணாடிப் பாத்திரங்களில் காற்றும் நீரும் பொடியுமாகவுள்ள பல பொருள்களைப் போட்டு நிறுத்துப் பார்க்கிறாயே ! என்ன காண்கிறாய் ?

கேசவன் :—நல்ல கேள்வி கேட்டாய் ! நான் கேட்ட கேள்விக்கு மறுமொழி சொல்லாமலே என்னை மடக்குவதாக எண்ணினாய்போலும் ! தற்காலத்திலே நவீனமாக ஏற்பட்டிருக்கும் பல விதச் சௌகரியங்களும் எதனால் விளைந்தன என்பதை நீ அறியவில்லை.

சங்கரன் :—என்ன சௌகரியங்கள் ? எல்லாம் சாமானியமாகக் காணும் விஷயங்கள்தாமே !

கேசவன் :—இங்கே உங்கள் தாத்தா இறந்துபோன செய்தியைக் காசியிலிருக்கும் உங்கள் மாமா சில நாழிகை

நேரத்தில் அறிந்தது எப்படி? காசியிலிருந்து வாயு வேகமனோ வேகமாக மறு நாளே அவர் இங்கே வந்து சேர்ந்தது எப்படி?

சங்கரன்:—நாங்கள் தந்தி அடித்தோம். அவர் உடனே ஆகாய விமானம் ஒன்றில் ஏறி இங்கே வந்து சேர்ந்தார்.

கேசவன்:—அந்த இரண்டு காரியங்களும் எதனால் நடந்தன? தங்கள் வாழ் நாள் முழுவதையும் சாஸ்திர ஆராய்ச்சியிலே செலவிட்ட அறிஞர்கள் கண்டுணர்ந்த உண்மைகளால் அல்லவா? மின்சார சக்தியினால் விளக்கெரிக்கிறோம்; விசிறி வைத்துக்கொள்கிறோம். இந்தச் சக்தி சாஸ்திர ஆராய்ச்சியால் வெளிவந்ததல்லவா?

சங்கரன் :—இவையெல்லாம் பல வருஷங்களாக உள்ள விஷயங்கள்தாமே? இவற்றில் என்ன புதுமை?

கேசவன் :—புதுமையொன்றும் இல்லையா? நம் பாட்டனார் நாளில் இவையெல்லாம் இருந்தனவா? இவை உனக்குப் புதுமையாகத் தோன்றாவிட்டால், வேறு சில சொல்கிறேன். தினமும் கிராமபோன் பாட்டுக் கேட்கிறாயே! அஃது உனக்குப் புதுமையாய்த் தோன்றவில்லையா? பல நூறு காதங்களுக்கு அப்பால் உள்ள ஒரு நாட்டில் ஒருவர் பேசும் பேச்சையும் பாடும் பாட்டையும் இங்கிருந்தபடியே இப்பொழுது கேட்கிறோமே! இது புதுமை அல்லவா? கம்பி இல்லாமலே சமுத்திர நடுவில் உள்ள கப்பலிலிருக்கும் ஒருவர் நம் நாட்டில் உள்ள ஜனங்களோடு பேசுகின்றாரே! அஃது எப்படி? இவை யாவும் சாஸ்திரத்தின் ஆராய்ச்சியால் வந்த பயன் என்று நாம் அறியவேண்டும் அன்றோ? இந்த அருஞ்செயல்களைப்போலச் சரித்திரத்திலே என்ன உண்டு? 'ஒரு ராஜா வந்தான்; இன்னொரு ராஜாவை ஜயித்தான்;

ஜனங்களைக் கஷ்டப்படுத்தினன்; வாழ்ந்தான்; செத்தான்,' என்னும் விஷயங்களைத் தவிர, வேறு ஏதாவது உண்டா?

சங்கரன்:—சரித்திரத்தைப்பற்றி இதுவரையில் நான் ஒன்றும் சொல்லவில்லை. சாஸ்திரங்களின் பெருமையைப் பற்றி நீயே பேசிக்கொண்டிருந்தாய்; உடனே குறை கூற வந்துவிட்டாய். சரித்திரத்தைப்பற்றி நீ கொண்டிருக்கும் அபிப்பிராயம் தகுதியானதன்று.

கேசவன்:—நீதான் உனக்குத் தெரிந்த உண்மையைச் சொல்லேன்; கேட்போம்!

சங்கரன்:—சரித்திரம் என்பது ஒரு நாட்டின் பூர்வீக நிலைமைக்கும் தற்கால நிலைமைக்கும் உள்ள வேறுபாட்டைத் தெரிவிப்பது. 'நாம் பதினாயிர வருஷங்களுக்கு முன்பு எப்படி இருந்தோம்? நாலாயிர வருஷங்களுக்கு முன்பு எப்படி இருந்தோம்? ஆயிர வருஷங்களுக்கு முன்பு எப்படி இருந்தோம்? இன்று எப்படி இருக்கிறோம்?' இன்னும் ஆயிர வருஷங்களுக்குப் பிறகு எப்படி இருப்போம்?' என்னும் கேள்விகள் எழுந்தால், அவற்றிற்குப் பதில் அளிப்பது சரித்திரமே. 'உலகம் நிமிஷத்துக்கு நிமிஷம் மாறுபட்டுக்கொண்டிருக்கும்,' என்னும் உண்மையையும் அதிலிருந்து நாம் அறியக்கூடும். எகிப்துத் தேசத்திலுள்ள கோபுரங்களின் அடியில் அந்நாட்டின் பழைய சரித்திரம் புதைந்து கிடந்தது. அதைப் பார்த்த பிறகு அந்நாளில் அவர்கள் இருந்த நிலைமை நன்கு விளங்குகிறது. நம் நாட்டிலே சமீப காலத்திலே செய்த சில ஆராய்ச்சிகளால் பல்லாயிர வருஷங்களின் முன் நம் முன்னோர் எவ்வெவ்வழியில் முன்னேறியிருந்தனர் என்பதை அறிந்தோம். அவர்கள் நமக்கென வைத்துச் சென்ற அரிய செல்வங்களை நாம் அனுபவிக்கிறோம். எந்த நாட்டுக்குப் பூர்வீகச் சரித்திர

6

ஞாபகம் இல்லையோ, அந்த நாடு எவ்வளவு முன் சென்றாலும் நிலையான பெருமை பெறாது.

கேசவன் :—என்ன ! பெரிய உபந்நியாசம் செய்ய ஆரம்பித்துவிட்டாயே ! சரி ! இருக்கட்டும்: சரித்திரம் ஒரு நாட்டின் பெருமையை விளக்கும் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். சாஸ்திரம் என்றும் ஒரு நாடு முன்னேற வழி காட்டும் என்பதை நீ ஒப்புக்கொள்.

## 3. கிராம வாசியும் நகர வாசியும்

கி-வா :—வாருங்கள் சாமி, நீங்கள் எந்த ஊரிலிருந்து வருகிறீர்கள் ? அதிக தூரம் நடந்து வந்திருக்கிறீர்கள் போலத் தெரிகிறதே !

ந-வா :—ஐயா, கிழவனாரே, உமக்குச் சொந்தவூர் இந்த ஊர்தானோ ? நான் பத்து மைலுக்கு அப்பால் உள்ள பட்டணத்தில் இருக்கிறேன். இந்தக் கிராமத்தைப் பார்த்துப் போகலாம் என்று வந்தேன்.

கி-வா :—பட்டணங்களிலே சௌகரியமாய் வாழும் உங்களைப்போன்ற பிரபுக்கள் இப்படிக் கிராமங்களைப் பார்க்க வருவது அபூர்வமே !

ந-வா :—ஏன் ? நான் கிராமங்களைப் பார்க்கக்கூடாதா ? முன்னே ஒரு நாளும் நான் இந்தப் பக்கம் வந்ததில்லை என்பது வாஸ்தவமே. இன்று எனக்கு உண்மையாகக் கிராமத்தின் நிலைமையை அறிய வேண்டும் என்று தோன்றியது.

கி-வா :—வாருங்கள்; நாம் மெல்ல நடந்துகொண்டே போவோம். உங்களுக்குக் கிராமத்தின் குடியிருப்பைப்பார்க்க வேண்டுமா, வயல் வெளிகளைப் பார்க்க வேண்டுமா ?

ந-வா :—எல்லாவற்றையுந்தான் பார்க்க வேண்டும்.

கி-வா :—சாமி, அதோ தெரிகிறதே! அதுதான் கிராமத் தலைவர் வீடு. இவ்வூரிலே அதுதான் பெரிய வீடு.

ந-வா :—அது சிறிய வீடாயிருந்தாலும் நன்றாய் இருக்கிறது! இதோ தெரிகிற குடிசைகளில் யார் இருக்கின்றனர்?

கி-வா :—இந்தக் குடிசைகள் எல்லாம் என்னைப் போலுள்ள ஜனங்கள் குடியிருக்கும் வீடுகள்.

ந-வா :—இங்கே ஒரு தெருவாவது நன்றாக நேராய் அமையவில்லையே! குறுக்கும் நெடுக்குமாக ஓர் ஒழுங்கின்றி வீடுகளைக் கட்டியிருக்கிறார்களே! எல்லாம் சந்தும் பொந்தும் இடுக்கும் முடுக்குமாயிருக்கின்றனவே! வண்டிகள் ஊருக்குள்ளே வருவது சிரமமாகுமே!

கி-வா :—இல்லை; இங்கு அடிக்கடி வருகிற வண்டிகள் சாதாரணமாய் வரும்.

ந-வா :—வண்டி ஒன்று நமக்கெதிரில் வந்தால், நாம் எங்கே ஒதுங்குவது? ஒரு வீட்டு வாயிற்படியில் ஏறவேண்டுவதுதான். இதென்ன, நடக்கும் வழியெல்லாம் சாணம் சேற்று நீர் எல்லாம் கலந்து மிக நாற்றமாயிருக்கிறதே! அதோ அந்தச் சேற்றுக்கருகில் குழந்தைகள் சந்தோஷமாய் விளையாடுகின்றனவே!

கி-வா :—இங்கு உள்ள நிலைமை இது. நாங்கள் ஆனவரைக்கும் இதைச் செம்மைப்படுத்தப் பார்த்துக்கொண்டிருக்கிறோம்.

ந-வா :—கொஞ்சம் ஊர்க்கு வெளியிற் போவோம்; வயல் வெளிகளையும், தோட்டம் துரவுகளையும் பார்ப்போம்.

கி-வா :—நாலு எட்டு நடந்தால் ஆயிற்று. இதோ ஒரு தென்னந்தோப்பு இருக்கிறது. இரண்டு இளநீர் சாப்பிடலாம்; கொஞ்சம் இங்கே தாமதிப்போம்.

ந-வா :—என்ன காற்று வீசுகிறது! இந்தப் புல் தரை இரத்தினக் கம்பளம் விரித்தாற்போல இருக்கிறதே! மனத்தைக் கவருகிறதே! இங்கேயே கவலையற்றுப் படுத்துக் கொண்டு பொழுது போக்கலாம் என்று தோன்றுகிறது. இந்தக் கிணற்றுத் தண்ணீர் குடிக்கத் தக்கதாயிருக்குமா? எப்படித் தண்ணீர் எடுப்பது?

கி-வா :—இதோ இளநீர் வந்துவிட்டது; குடிப்போம், வாருங்கள்.

ந-வா :—கொஞ்சந் தண்ணீர் வேண்டும். முதலிலே கை கால்களை அலம்பிக்கொள்வோம்; பிறகு இளநீர் குடிப்போம்.

கி-வா :—இந்தக் கிணற்றில் இறங்கலாம் வாருங்கள்.

ந-வா :—அப்படியே செய்வோம். ஆஹா! இந்தத் தண்ணீர் நிர்மலமாயிருக்கிறதே! குடிப்பதற்கும் ருசியாய் இருக்கிறது. கைகால் அலம்பிவிட்டேன். இனி இளநீர் பருகுவோம்.

கி-வா :—வெயில் வருமுன்பு இன்னும் கொஞ்சதூரம் போகவேண்டும். வாருங்கள், புறப்படுவோம்.

ந-வா :—அதோ அந்த வயல்களில் கதிர் சாய்ந்திருக்கும் காட்சி எவ்வளவு அழகாய் இருக்கிறது!

கி-வா :—இங்கே கண்ணுக்கு அழகாய் இருக்கும் காட்சிகள் என்று நீங்கள் சொல்பவையெல்லாம், என் போன்றவர்கள் பெரும்பாடு பட்டுச் செய்த வேலையின் பயனால் வந்தவையாகும். கிராமத்தில் இருப்பவர்களுக்கு ஒரு நிமிஷ நேரமேனும் வீண் பொழுது போக்க நேரம் கிடையாது. காலை முதல் மாலை வரையில் உழைக்கிறோம்; இரவிலே வீடுகளுக்குப் போகிறோம்; கவலையற்று எங்களை மறந்து தூங்குகிறோம். இங்ஙனம் வாழ்வதற்குரிய சௌகரியங்கள் நகரங்

களில் உண்டா? நகரவாசிகள் பெரும்பாலும் வீண்பொழுது போக்குவதையே காண்கிறோம்.

ந-வா:—அப்படி எண்ணக்கூடாது. நகரத்திலும் வியாபாரம், கைத்தொழில் முதலிய வழிகளில் ஓயாமல் உழைப்பவர்கள் உண்டு. சட்டையும் தலைப்பாகையும் அணிந்து வண்டியிற் போகிறவர்களெல்லாம் பகல் வேளைகளில் மிகவும் சிரமப்பட்டு உழைப்பவர்களே. இங்கே கிடைக்கக்கூடிய இவ்வளவு நல்ல காற்று நகரங்களிற் கிடைப்பது அருமை. வீடுகள் சௌகரியமாய் அமைந்திருந்தாலும், பலர் சேர்ந்து வாழ்வதால், அசௌகரியம் அதிகமாய் உண்டு. தேகப்பயிற்சிக்கு வேண்டிய சௌகரியங்களும், அறிவு வளர்ச்சிக்கு வேண்டிய வசதிகளும் நகரங்களில் உண்டு.

கி-வா:—வீட்டை விட்டுத் திரும்பியவன் வெளியேறி வரும் வரையில் அவன் உயிரோடு இருப்பது நிச்சயமில்லை. அவ்வளவு வேகமாக வண்டிகள் ஓடுகின்றன. சாலையில் நடக்கும்போது புழுதி மூக்கையெல்லாம் அடைக்கிறது. ஓரமாக நடந்தாலோ, சாக்கடை நாற்றம் சகிக்க முடியவில்லை. என்ன பட்டண வாசம்! எனக்கு அது நல்லது என்று தோன்றவில்லை.

ந-வா:—பட்டண வாசத்தில் அசௌகரியம் இல்லை என்று நான் சொல்லவில்லையே! நீர் சொல்லிய குற்றங்கள் எல்லாம் கொஞ்சம்கொஞ்சமாக விலகிக்கொண்டு வருகின்றன.

கி-வா:—ஒரு வியாதி வந்தால் மக்கள் நூற்றுக்கணக்காக மடிவது கிராமங்களில் இல்லை. வீடுகள் அப்படி நெருக்கமாயிருந்தால், என்னதான் வராது!

ந-வா:—இரண்டிலும் நன்மையும் உண்டு, தீமையும் உண்டு. நன்மையை அநுபவிப்போம்; தீமையை ஒழிக்க முயல்வோம். இனி நான் போய் வருகிறேன்.

## 4. ஆகாயப் பிரயாணம்

முருகன் :—வேலா, நேற்று மாலைக் காலத்தில் நம் ஊர்க்கு வந்த ஆகாய விமானத்தைப் பார்த்தேன். எனக்கு அதில் ஏறி நம் ஊரைச் சுற்றிப் பார்க்க ஆசையாய் இருக்கிறது. என் தகப்பனார் அனுமதிப்பாரோ, மாட்டாரோ, தெரியவில்லை.

வேலன் :—ஐந்து நிமிஷம் ஆகாயத்திலே பறப்பதற்காக ஐந்து ரூபாய் கொடுப்பது நியாயமாகத் தோன்றவில்லை.

முருகன் :—புதிய பொருள் ஒன்றைக் கண்டால், அதன் தன்மைகளை அறிந்துகொள்ள முயல்வது நமக்கு வழக்கந்தானே? கிராமபோன், மோட்டார்கார் முதலியவை புதியவை தாமே? பேசும் படக்காட்சிக்குப் போகலாம் என்று நேற்று நீயே அழைத்தாய். இன்று நான் ஆகாய விமானத்தைப் பற்றிச் சொல்வது உனக்கு நியாயமாய்த் தோன்றவில்லை.

வேலன் :—ஐந்து நிமிஷ சந்தோஷத்துக்காக ஐந்து ரூபாய் செலவழிப்பது நன்று என்று எனக்குத் தோன்றவில்லை. அன்றியும், ஆகாயத்திலே பிரயாணம் செய்வதில் உயிர்ச்சேதம் மிகுதியாய் விளைகிறது.

முருகன் :—உயிர்ச்சேதம் ஆகாயத்திலே மட்டுந்தான் உண்டோ? புத்தம்புதிய கட்டிடம் இடிந்து விழுந்து ஜனங்கள் சாவதில்லையா? அதனாற் புதிய கட்டிடங்களிற்குடியேறாமல் இருந்து வருகிறார்களா? மெல்லப் போவதே இயல்பாயுள்ள மாட்டு வண்டிகளில் குடங் கவிழ்ந்து மேடு பள்ளங்களிற் சாய்ந்து சரிந்து விழுந்து சாகின்றவர்கள் இல்லையா? இந்த ஆபத்துக்கள் பெரியவையாய்த் தோன்றாமை ஏன்?

வேலன் :—நெடுநாளாகப் பழக்கப்பட்டிருக்கும் பிரயாண வகைகளில் அபூர்வமாக விபத்து விளைந்தாலும் நாம்

கவனிப்பதில்லை. இது புதுமையாகையாலும், ஆகாய நடுவில் தீப்பற்றிக்கொண்டால் குதிக்கவோ வேறு வழியாகத் தப்பித்துக்கொள்ளவோ முடியாமையாலும், இதைப்பற்றி எல்லோரும் பயப்படுகின்றனர்.

முருகன் :—சமீப காலத்திலே துணையின்றித் தனிமையில் ஆகாயப் பிரயாணம் செய்து அட்லாண்டிக்குச் சமுத்திரத்தைத் தாண்டிய பெண் விமானியைப்பற்றி நீ கேள்விப்படவில்லையா? ஆயிரக்கணக்கான மைல் தூரம் பெண்கள் தைரியமாகச் செலுத்திச் சென்று வெற்றி பெறக்கூடிய விமானத்திலே சிறுவர்களாகிய நாம் ஏறிப் பார்ப்பதற்கு என்ன பயம்?

வேலன் :—வெற்றி பெற்றவர்களைப் பற்றி நீ பேசுகின்றாய். இந்த நான்கைந்து ஆண்டுகளில் ஆகாயப் பிரயாணத்தினால் தங்கள் உயிரை இழந்து அற்பாயுளாய் மடிந்தவர்கள் தொகையை நீ அறியமாட்டாய். தென்னாட்டிலே சிறந்த மின்சார நிபுணராய் இருந்த சேஷசாயி விமானம் செலுத்துவதில் சிறந்த பயிற்சி பெற்றவராய் இருந்தும், பெருவிபத்தில் அகப்பட்டு உயிரிழந்ததை நீ அறியாய்.

முருகன் :—ஆபத்து எவ்வகைப் பிரயாணத்திலும் உண்டென்று நான் முன்னமே கூறியுள்ளேன். இந்தியா முழுவதும் பல நாடுகளுக்கு ஆகாயவிமானத்திலேயே பிரயாணம் செய்து உபசாரங்கள் பெற்ற ராஜப்பிரதிநிதி, மேன்மை தங்கிய வில்லிங்டன் பிரபுவைப்பற்றி நீ கேள்விப்படவில்லையோ? அவர் வயதில் முதியவராய் இருந்தும், இந்நாட்டுக்கே தலைவராய் இருந்தும், இந்தியா முழுவதும் ஆகாயப் பிரயாணம் செய்ததைக் கேட்கிறோம். இன்னும் நமக்குப் பயம் நீங்கவில்லை.

வேலன்:—நிலத்திலே பிரயாணம் செய்வதில் உள்ள ஆபத்துக்களைக்காட்டிலும் ஆகாயப் பிரயாணத்தில் அதிகமே விளைகின்றது என்பது வெளிப்படை.

முருகன்:—உனக்குக் கணக்குத் தெரிந்திருந்தால் நீ இப்படிப் பேசமாட்டாய். நிலத்திலே எத்தனை வகை வண்டிகள் ஓடுகின்றன? அவற்றின் மொத்தத் தொகையென்ன? அவற்றில் எத்தனை விபத்துக்கள் விளைகின்றன? அவற்றால் இறப்போர் எத்துணையர்? வேறுவகையான இயற்கை விபத்துக்களால் இறப்போர் எத்துணை பேர்? கற்கோட்டைகளாகிய தங்கள் மாளிகைகளிலே பூகம்பங்களால் அழிந்தவர்கள எத்தனை ஜனங்கள்? இவற்றையெல்லாம் மொத்தமாகக் கணக்கிட வேண்டும். ஆகாய வீதியிற் செல்லும் விமானங்கள் எத்தனை? இறப்போர் எத்துணையர்? இவற்றையும் கணக்கிட வேண்டும். நிலத்திலே இருக்கும் சஞ்சார வகைகளில் உண்டாகும் மரண விகிதம் ஆகாயப் பிரயாணத்தால் விளையும் மரண விகிதத்துக்கு அளவாற் குறைந்ததாகுமா என்பதை அதன் பிறகு நிச்சயிக்கலாம்

வேலன் :—நான் ஒன்று சொன்னால் நீ ஏதோ பெரிய கணக்குப்போட வந்துவிட்டாய்! நீ சொல்கிறபடி பார்த்தால், ஆகாயத்திலே நிலத்தில் நடப்பதுபோன்ற பிரயாண வகை பலவும் நடந்து கோடிக்கணக்கான மனிதர்கள் பறந்துசெல்லும் காலம் ஒன்று ஏற்பட வேண்டும். அந்தக் காலத்தில் எவ்வளவு பேர் ஆபத்துக்கு ஆளாகிறார்கள் என்று கணக்கெடுத்துப பார்க்கலாம் என்கிறாய். அந்தக் கதி நமக்கு நேர வேண்டாம் என்பதே என் எண்ணம்.

முருகன்:—என்னுடைய எண்ணம் ஒரு புறம் இருக்கலாம். முன்னாளில் அவரவர் நாட்டில் அடங்கியிருந்ததுபோல இப்பொழுது நாம் இருக்க இயலாது. தந்தி வகையிலே

புதுமை புதுமையாய்த் தோன்றியுள்ள விசேஷங்களால் எல்லாத் தேசங்களும் ஒன்றுக்கொன்று நெருக்கமாகின்றன. முன்பு மாதக் கணக்காகப் பிரயாணம் செய்த இடங்களுக்கு இப்பொழுது நாட் கணக்கிலே போய்ச் சேரக்கூடிய காலம் வந்துவிட்டது.

வேலன் :—நம்முடைய தேசம் பல வகையிலும் முன்னேற்றம் அடைய வேண்டும் என்பதே என் எண்ணம். அதற்கு ஆகாயப் பிரயாணம் எவ்வகையிலும் அவசியமாம்!

முருகன் :—காலத்தின் கோலம் இது. காலத்துக்கேற்றபடி நாமும் நடக்கவேண்டும். ஆகையால், நாளைக் காலையில் நான் என் தந்தையார் அனுமதி பெற்று விமானம் ஏறுவேன்.

வேலன் :—நானும் அக்காட்சியைக் காண வருகிறேன்.

பயிற்சி

பின் வரும் விஷயங்களைப்பற்றி இரண்டு பக்க அளவில் சம்பாஷணை எழுதுக :—

1. தகப்பனும் மகனும் கிரகணங்களைப்பற்றிப் பேசுவது

2. வித்துவான் பரீக்ஷையில் தேர்ந்த இருவர் உத்தியோக முயற்சிப் பேச்சு

3. வைத்தியர் ஒருவரும் நியாயவாதி ஒருவரும் தத்தம் தொழில்களின் ஏற்றத் தாழ்வுகளைப்பற்றிப் பேசுவது

4. செய்யுள் நடை அவசியம் என்று பண்டிதர் ஒருவரும், உரை நடையே பாஷை வளர்ச்சிக்குப் போதும் என்று உபாத்தியாயர் ஒருவரும் பேசுவது

5. கழுதையும் நாயும் ஒரு வண்ணான் வீட்டில் தம் உழைப்பின் பெருமையைப் பற்றிப் பேசிக்கொள்வது

6. மாட்டு வண்டியும் மோட்டார் வண்டியும் தத்தம் பெருமையைப்பற்றிப் பேசிக்கொள்வது

7. யஜமான் சேவகர் சம்பாஷணை - சம்பள மிகுதி விஷயம்.

8. அயல் நாடுகளிற் பிரயாணம் செய்த ஒருவனும், தன்னுட்டையே நன்கு அறியாத ஒருவனும் பிரயாணத்தைப் பற்றிப் பேசுவது

9. பழைய முறையில் உழவு செய்யும் விவசாயி ஒருவனும், விவசாய இலாக்கா உத்தியோகஸ்தர் ஒருவரும் புதிய விவசாய முறைகளைப்பற்றித் தத்தம் கருத்துகளை வெளியிட்டுப் பேசுவது

10. மூன்றும் வகுப்புப் பிரயாணத்தில் உள்ள சௌகரிய அசௌகரியங்களைப்பற்றி இரயில் பிரயாணிகள் பேசுவது

11. எறும்பும் ஈயும் தத்தம் பெருமையைப்பற்றிப் பேசுவது

12. ஆகாய விமானமும் புகைவண்டித் தொடரும் பேசுவது

13. விளக்கெண்ணெய் விளக்கும், மின்சார விளக்கும் பேசுவது

14. போர் வீரனும் வித்துவானும் நாட்டின் நலத்துக்குத் தம் அவசிய நிலையை வெளியிட்டுப் பேசுவது

15. பேசும் படம் பார்த்த நண்பர் இருவர் பேசுவது

16. நாடுகள் போர் புரிதல் அவசியமா அல்லவா என்பதைப் பற்றி அறிஞர் இருவர் தம் கருத்தை வெளியிட்டுப் பேசுவது

---

## XIII. விளக்கி எழுதுதல்
## (Expansion of passages)

சுருங்கிய அளவில் உள்ள பெரியார் வாய்மொழிகளைத் தலையங்கமாகக்கொண்டு அவற்றில் அடங்கிய கருத்துக்களை விளக்கியெழுத முயல்வது ஒரு வகை வியாசமாம். பெரிய வியாசங்களைச் சுருக்கி எழுதும் முறை முன்னர்க் காட்டப் பட்டது. இஃது அதற்கு நேர் மாறானது. ஒரு சிறு வாக்கி யத்தில் அல்லது இரண்டடிச் செய்யுளில் அமைந்த கருத் துக்களை நன்கு விளக்கிப் பிறர் அறியுமாறு எழுதுதல் இவ் வழியைச் சேர்ந்ததாம். விளக்கியெழுதும் முறையில் அளவு குறிக்கவியலாது. எழுதுவோர் மனப்பான்மைக்கேற்ப அது வளரும்; மிகவும் சுருக்கமாய் அமையாது இருப்பது நலம். ஒரு பக்க அளவுக்குக் குறையாமல் எழுத முயல்வதே சிறப் பாம். விளக்கும்போது தலைப்பு வாக்கியத்தில் அமைந்த கருத்துக்களுக்குப் பொருத்தமான பொருள்களே வருதல் வேண்டும். ஒரு கருத்தை விளக்க முயல்கையில், அக்கருத்து எங்ஙனம் அவ்வுருப்பெற்றது என்பதை மனத்தில் வைத் துக்கொண்டே படிப்படியாய் எழுத வேண்டும். விளக்கி எழுதிய கட்டுரை இயல்பாய் அமைந்த வியாசம்போல இருக்க வேண்டும்.

### 1. பொருள்

"எப்பொருள் யார்யார்வாயக் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு." —திருக்குறள்

விளக்கம்

எப்பொருளைப் பற்றி எவர் பேசினும் செவி சாய்த்துக் கேட்க வேண்டும். கேட்ட பிறகு அப்பொருளில் உள்ள குண குற்றங்களை நன்கு ஆராய்ந்து தெளிந்து, குணமா

யிற் கொள்ள வேண்டும்; குற்றமாயின் விட்டுவிட வேண்டும். பேசுவோர் வயதிற் சிறியவர், குலத்தில் இழிந்தவர், பதவியில் இழிந்தவர் என்ற காரணங்களால் அவர் பேச்சைக்கேளாதிருக்கலாகாது. 'சிறுவர் சொல்லிலே என்ன சிறப்பிருக்கும்?' என்று அவர் சொல்வதைக் கேளாமுன் துணிவது அறிவுடைமையாகாது.

நாம் ஒரு தனி வழியே செல்கின்றோம். எதிர் முகமாக வரும் ஒருவன், "இப்பொழுது இருண்டுவிட்டது. இவ்வழியில் திருடர் வருவது உண்டு; இனி நீர் மேற்செல்வது உசிதமன்று," என்று கூறுகிறான். அவன் நம்மைக்காட்டிலும் வயதிலும் அறிவிலும் சிறியவனாய் இருப்பினும், இச்சொல்லைக் கேட்டுநடப்பதால் நமக்கு நன்மையே விளையும். சிறுவன் என்று அவமதித்து முன் சென்றால், தீங்கு விளையும்.

நம்மைக்காட்டிலும் வயதில் மூத்த ஒருவன் மதுபானம் செய்து புத்தி கெட்டுத் திரிகின்றான். அவன் தன்னைப்போலவே பிறரையும் கெடுக்க எண்ணுகிறான். நம்மைக் காணும் போது, "தன்னை மறந்து ஆனந்தப்படும்படி உதவி புரியும் மதுபானத்தின் நன்மையை நீ அறியாய்; இன்று என்னுடன் வந்து கொஞ்சம் குடித்துப் பார்! பிறகு அதன் உண்மையை அறிவாய்," என்று கூறுகிறான். "இவன் நம்மினும் உலக அனுபவம் மிக்கவன்; வயது சென்றவன்; நமக்குத் தீங்கு நினையான்," என்று எண்ணி, இம்மொழியைக் கேட்டுப் பின்பற்றி நடக்கத் துணிந்தால், என்ன விளையும்? நிச்சயமாய் நாம் கெட்டொழிவோமன்றோ?

ஆகையால், எப்பொருளைப் பற்றி யார் கூறினாலும், அப்பொருளின் நன்மை தீமைகளை நம் அறிவின் திறத்தால் நன்கு ஆராய்ந்த பிறகே கடைப்பிடிக்க முயலவேண்டும். எவரையும் சிறுவர் என்று இகழ்தலும், தக்க காரணமின்றி ஒரு

வரைப் புகழ்ந்து பாராட்டுதலும் அறிவுடைமையாகாது. பொருளில் உள்ள நலத்தைப் பார்க்கலாமேயொழிய, அதனைச் சொல்வோர் யார், எத்தகையர் என்பவற்றை நாம் கவனிக்க வேண்டா. மாணிக்கத்தை நஞ்சுடைய பாம்பினிடமிருந்து பெற்றுக்கொண்டு போற்றுகிறோம். நம் வாழ்வுக்கு உதவும் தென்னை மரத்திலிருந்தே தோன்றியதாயினும், கள் நாம் ஏற்றுக்கொள்ளத் தக்கதாகாது. நெல்லினிடம் உள்ளதே என்று பதரை நாம் கொள்வதில்லை. சேற்றில் தோன்றியதே என்று தாமரையை இகழ்வதுமில்லை.

## 2. சக்கர நெறி நில்

### விளக்கம்

ஔவை வாக்காகிய 'சக்கர நெறி நில்' என்ற வாக்கியம் அரிய கருத்துக்கள் பலவற்றை அடக்கிக்கொண்டிருக்கிறது. அஃது உருவத்தாற் சிறிது; உள்ளுறையாற் பெரிது. அதன் கருத்தை ஒருவாறு இங்கு அறிய முயல்வோம்.

சக்கரம் என்பது அரசாது ஆணைக்கு அறிகுறியாம். நம் நாட்டில் ஆஞ்ஞா சக்கரம் என்றதொரு வழக்கு உண்டு. அரசர் ஆணையால் ஒரு சக்கரம் அவர் ஆட்சிக்குட்பட்ட நாடெங்கும் சுழன்று வரும் என்று புராணங்கள் கூறுகின்றன. அச்சக்கரம் எளியவரை வாட்டும் வலியோரையும், அரசர் ஆணைக்கு மாறாக நடக்கும் தீயவரையும், அவர்கள் செயலைப்பற்றிய வழக்குக்கள் அரசர் செவிப்படா முன்னரே தானாக நேரிற் சென்று தண்டித்து அறம் நிறுத்தும் என்று கேள்வியுறுகிறோம். எவரும் உறங்கும் இராக்காலத்திலும் அரசர் ஆணைச் சக்கரம் உறங்காது என்பது நம்பிக்கை.

சூரிய வமிசத்து அரசர் புகழைக் கூறும் இராமாயணத்தில், "புலியும் மானும் ஓர் இடத்தில் நீர் பருகுமாறு அம்

மன்னர் ஆணை நடந்தது." என்று கூறப்பட்டுளது. மன்னர் ஆணை நாடெங்கும் விரைந்து சென்று, எளியார், வலியார், வறியார், செல்வர், உறவினர், அயலவர் என்னும் பேதம் பாராது எவரையும் முறைமையாகிய நெறியில் நடக்குமாறு கட்டுப்படுத்துவதாலும், நெறி தவறியவர்களை அரசர் சினத்துக்கு ஆளாக்கி அழியச் செய்தலாலும் சக்கரம் என்று உருவகம் செய்யப்பட்டது.

அரசர் ஆணையின் நெறியில் நிற்பது குடிகள் எனப்படுவோர்க்கு முக்கியமான கடமையாம் என்பதை இச்சிறு வாக்கியம் அறிவுறுத்துகின்றது. அரசர் என்போர் முன்னாளிலே சிறு சிறு நாடுகளின் தலைவராய் இருந்தனர். அபூர்வமாகச் சிலரே பெருநாடுகளை ஆண்டனர். அத்தகைய வேந்தர் தம் ஆணையைக் குடிகளுக்கு நன்கு தெரிவிக்கவும் குடிகளை அவ்வாணை நெறியில் நிறுத்தவும் எளிதில் இயன்றது. இராக் காலங்களில நகரி சோதனை செய்து குடிகளின் குறைகளை நேரில் அறிந்துகொண்டார்கள் என்பது, அத்தகைய அரசர்களைப்பற்றியே ஆகும்.

இந்நாளில் நமது அரசர் உலகிற் பெரும்பகுதியை ஆள்கின்றனர். அவர் ஆணைகள் எனப் பிறப்பிக்கப்படுவன எல்லாம் அறிஞர் பலர் கூடி நன்கு ஆலோசனை செய்து பொது நலத்துக்குத் தக்கவை என்று பாராளும் மன்றத்தில் சட்டமாக்கப் பெற்றனவாம். முன்னாளில் அமைச்சர்களுக்கு இருந்த அதிகாரத்தைக் காட்டிலும் இந்நாளைய அமைச்சர்களுக்கு அதிக உரிமைகளும் அதிகாரங்களும் உண்டு. பிரபுக்கள் மாத்திரமேயன்றிப் பொது மக்களும் தங்கள் பிரதிநிதிகள் மூலம் அரசர் முறையை அருகில் இருந்து அறிந்து கொள்ளும் அதிகாரம் உண்டு. இவ்வளவு சௌகரியங்கள் வாய்ந்திருக்கும் இக்காலத்திலே அரசர் ஆணை என்று பிறப்

பிக்கப்பெறும் சட்டங்களுட் சில நம் மனத்துக்குப் பொருந் தாதவையாய் இருப்பினும், நாம் அவற்றைக் கடைப்பிடித்து நடப்பதே நமது கடமையாம். சிறுவரது மணப் பருவத் தைச் சிறிது உயர்த்தியமைக்கச் சமீப காலத்தில் நம் நாட்டில் அமைந்த சட்டம் நம் அரசரது ஆணையே. அச்சட்டம் ஹிந் துக்களில் ஒரு பெருங்கூட்டத்தார்க்கும் மகமதியருட் பலர்க் கும் சம்மதம் இல்லாததாயிருப்பினும், எல்லோரும் அதன் நெறி பிறழாமல் நடக்க வேண்டும் என்பதே விதியாகும். பொது ஜனங்களின் நலத்துக்குத் தக்கதாம் என்று அறிஞர் பலர் தெரிவித்த கருத்துக்கிணங்க வெளி வந்த அரசர் ஆணை எதுவேயாயினும், குடிகள் தங்கள் வெறுப்பை வெளியிடாது பின் பற்றுதலே தகுதியாம். அரசர் நாடு முழுமைக்கும் நலம் தரும் என்று கருதும் ஒரு விதி, ஒரு சிலர்க்கு விரோத மாகத் தோன்றும்; அவர்களுக்கு அதனை எதிர்க்கும் உரிமை இல்லை. அரசரைத் திருமாலுக்கு நிகர் என்று கருதும் இந் நாட்டில் அரசர் ஆணை வேத வாக்காகும்.

### பயிற்சி

பின் வருவனவற்றை விளக்கிக் கட்டுரை எழுதுக:—

1. தேசத்தோடொத்துவாழ்.
2. நைபவர் எனினும் நொய்ய உரையேல்.
3. ஊருடன் பகைக்கின், வேருடன் கெடும்.
4. சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை.
5. ஊக்கமது கைவிடேல்.
6. எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்.
7. சோம்பர் என்பவர் தேம்பித்திரிவர்.
8. நெஞ்சை ஒளித்தொரு வஞ்சகமில்லை.

9. உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லார் அறிவிலா தார்.

10. பெற்ற தாயும் பிறந்தநன் னாடும்
நற்றவ வானினும் நனிசிறந் தனவே.

11. தெய்வம் உளதென்பார் தீய செயப்புகின்
தெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும்—தெய்வம்
இலதென்பார்க் கில்லைத்தம் இன்புதல்வர்க் கன்றே
பலகாலும் சொல்வார் பயன்?

---

# XIV. வியாசம் எழுதும் முறை
# (The Method of Essay-Writing)

(முதற்பகுதி)

## 1. பொது விதிகள்
## (General Rules)

இப்புத்தகத்தின் தொடக்கத்திலே வியாசம் எழுதுவதில் கவனிக்க வேண்டிய பொது விதிகளைப்பற்றிக் கூறியவை பொதுக் குறிப்புக்களாகும். இங்குச் சிறப்பாகச் சில அவசிய அம்சங்களைக் கூறுவோம்.

கட்டுரை, வியாசம் என்ற பெயர்களைச் சிறிதும் கருத்து வேறுபாடின்றி நாம் பிரயோகிக்கிறோம். ஆயினும், சிறிய அளவில் எழுதியுள்ளவற்றைக் கட்டுரை எனலாம்; பெரிய அளவில் எழுதியுள்ளவற்றை வியாசம் என்பது பொருந்தும்.

கட்டுரையாய் இருப்பினும், வியாசமாயிருப்பினும் அஃது ஒரு விஷயத்தைக் குறித்தே பேசுவதாயிருக்க வேண்டும். கடிதமும் ஒரு வகைக் கட்டுரை என்றே முன்னர்க் கூறினோம். கடிதம் சிறிய உருவம் உடையதாய் இருப்பினும், பல பொருள்களை அடக்கிக்கொண்டிருக்கும். அஃது ஏறக்குறையச் சம்பாஷணையைப் போன்றது. சம்பாஷணை இருவர் எதிரெதிர் நின்று பேசுவதாக எழுதப்படும். கடிதத்திலோ, ஒருவரை முன்னிலைப்படுத்தி, அவர் முன்னே கூறிய விஷயங்களை நினைவூட்டியோ, இனிமேற் கூற வேண்டுவனவற்றை எதிர் பார்த்தோ, எழுதுவோர் தம் கருத்தைக் கூறுகின்றனர்.

கடிதத்துக்கும் கட்டுரைக்கும் மற்றும் சில முக்கியமான வேறுபாடுகள் உள: கடிதத்தில் இரு திறத்தார் செய்தி

யும் முன் பின்னுகப் பலவாறு கலக்கப்பட்டிருக்கும்; இலக்கண இலக்கிய முறையை அனுசரித்து நல்ல நடையில் எழுத வேண்டும் என்னும் நியதி இல்லை. பேச்சு நடையில் மரூஉ மொழிகளைப் பிரயோகித்தும் எழுதலாம். கட்டுரையிலோ, நாம் எழுதும் ஒவ்வொரு வாக்கியமும் தலையங்கத்துக்குப் பொருத்தமாய் அமைய வேண்டும். கப்பற்பிரயாணத்தைப் பற்றிக் கட்டுரை எழுதும் ஒருவர், இருப்புப்பாதையில் உண்டாகும் இலாப நஷ்டங்களைப்பற்றி எழுதலாகாது. கடிதத்திலோ, எழுதுவோர் முதலிலே தம் சொந்தச் செய்தியையும் இரண்டாவதாக எழுதப்படுவோர் செய்தியையும் பிறகு ஊர்ச் செய்தியையும் நாட்டுச் செய்தியையும் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத பிற விஷயங்களையும் எழுதலாம். கட்டுரையில் சாமானியமாகப் பேச்சு வழக்கில் உள்ள சொற்பிரயோகங்கள் அமைத்தல் விழுமிதன்று. இலக்கண இலக்கிய அமைதி நன்கு கவனிக்கப்பட வேண்டும்.

ஆகவே, கட்டுரைக்குரிய முக்கியாமிசங்கள் பின் வருவனவாம் :—

1. ஒரு பொருளைப் பற்றியே எழுதப்படுதல்,
2. பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருத்தல்,
3. இலக்கண அமைதிகள் பொருந்துதல்,
4. பேச்சு வழக்குச் சொற்பிரயோகங்கள் கலவாமை,
5. இடையிடையே அவசியமும் பொருத்தமுமான உதாரணங்கள் கலக்கப்படுதல்.

---

## 2. கட்டுரை வேறுபாடுகள்
## (Classification of Essays)

கட்டுரைகள் அவையவை கூறும் பொருளுக்கேற்ப ஐந்து திறப்படும்; ஐந்துக்கு மேலும் பிரிக்கலாம். ஆயினும், இங்கு முக்கியமான வகைகளே கொள்ளப்பட்டன.

1. வருணனைக் கட்டுரை (Descriptive Essay): கண்டதும் கேட்டதுமான யாதேனும் ஒரு பொருளையோ இடத்தையோ விஷயமாகக் கொண்டு வருணித்து எழுதுவது வருணனைக் கட்டுரையாம். இத்தகைய கட்டுரையில் ஒரு பொருளின் இயற்கைத் தோற்றம், உருவம், பரிமாணம், வரலாறுகள் முதலியன நன்கு வருணிக்கப்படும். இவ்வருணனைகளை, எழுதுங்கால் படிப்போர் இவற்றை நேரில் கண்டால் எவ்வுணர்ச்சிகளை அடைவரோ, அவ்வுணர்ச்சிகளையே படிப்பதாலும் அடையுமாறு கூடியவரையில் நன்றாக எழுத வேண்டும்.

(உ-ம்.) எரிமலை, ஆகாய விமானம், மாலைக்காலம், சூரியோதயம், உலோகங்கள், விண் வீழ் கொள்ளிகள்.

2. விருத்தாந்தக் கட்டுரை (Narrative Essay): சிறப்பாக யாதேனும் ஒரு நிகழ்ச்சியைப்பற்றி அறிந்ததை உரைப்பது விருத்தாந்தக் கட்டுரையாம். முன்னே கூறிய சிறு கதைகள் வேறு; இக்கட்டுரைகள் வேறு என்பதை நன்கு அறியவேண்டும்.

உதாரணம்

(1) ஒரு நிகழ்ச்சி—சர்வ கலாசாலைப் பெருங்கூட்டம், தமிழ்ச்சங்க வருஷோத்ஸவம், ஒரு பரிசளிப்பு விழா.

(2) ஓர் அபாயம்—கப்பல் கவிழ்தல், கிராமம் தீப்பற்றல், புயற்சேதம்.

(3) வாழ்வின் வரலாறு—அக்பர் சக்கரவர்த்தி, கம்பர், காளி தாசர், மில்டன், கோபால கிருஷ்ண கோகலே.

(4) கட்டுரைக்கதை—முன் சொன்ன வகைகள்.

(5) ஒரு பிரயாணம்—இரயில்வே பிரயாணம், கப்பற் பிரயாணம்.

இவை விருத்தாந்த வியாசங்களின் வகைகளாம். இத் தகைய வியாசங்களை எழுதும்போது மாணவர் தாம் கூறும் செய்தியில் உள்ள ஒவ்வொரு நிகழ்ச்சியையும் தொடர்ச்சி தோன்றப் படிப்படியாகக் கூற வேண்டும். அவசியமான விஷயங்களையே கூறி, அநாவசியமான விஷயங்களை விலக்கவேண்டும். எடுத்துக்கொண்ட விஷயத்தின் போக்குக்கு நேரில் தொடர்பு இல்லாத செய்திகளைக் கலத்தலாகாது. கலக்க நேரிடினும், தொட்டும் தொடாமலும் விட்டுச் செல்ல வேண்டும்.

3. சிந்தனைக் கட்டுரை (Original Essay): நீதி நெறிகளைக் குறிப்பனவும், பல வகைக் குணங்களைக் குறிப்பனவுமாகிய விஷயங்களைப் போன்று சிந்திக்கத் தக்கவைகளைப் பற்றி எழுதப்பெறுவது சிந்தனைக் கட்டுரையாம்.

(உ-ம்.) ஊக்கமுடைமை, இன்சொற் கூறல், தன்னல மறுத்தல்.

இத்தன்மையான கட்டுரைகளை எழுதும்போது மாணவர் தாம் குறித்த பொருளை நன்கு விளக்கி ஒரு குணத்தை மேற்கொள்வதால் விளையும் நன்மை, மேற்கொள்ளாததால் ஏற்படும் தீமை, அதனை மேற்கொள்ளுங்கால் ஏற்படும்சிரமம், அச்சிரமத்தைப் பாராட்டாதிருக்கும் வழிகள், அநுசரித்த தால் நன்மையடைந்த சிலர் வரலாறுகள் முதலியவற்றை நன்கு எடுத்து எழுத வேண்டும். இக்கருத்துக்களை விளக்கத்

தக்க மேற்கோள்களை அறிந்தவளவு எழுதலாம். ஒரு குறிப்பிட்ட நீதி நெறியை விளக்கிக் கூறும்போது அதைப் படிப்போர் மனத்தில் நன்கு பதிய வைக்கும் கருத்தால், அவ்வழி நின்றோர் நலம் பெற்றார் எனக் காட்டுதற்குப் புராண இதிகாசங்களிலும், சரித்திரங்களிலும், தற்கால வரலாறுகளிலுமிருந்து நிதரிசனங்கள் எடுத்துக் காட்டுவது மிகவும் பொருத்தமாம்.

4. விளக்கக் கட்டுரை (Expository Essay): இஃது யாதேனும் ஒரு புதுமையை, அதை அறியாதவர்க்கு விளங்குமாறு உரைப்பதாம். அறிந்த செய்திகளிலும், பலர் அறியாத சிலவற்றை விளக்குவதும் இக்கட்டுரை வகையிற் சேரும்.

(உ-ம்.) பாராளும் மன்றம், பத்திரிகைத் தொழில், நூல் நூற்றல், தந்தத் தொழில், பூமியின் ஆகர்ஷண சக்தி, உயிர்த்தோற்ற ஆராய்ச்சி, வான நூல் ஆராய்ச்சி, நீர் வீழ்ச்சி, செய்யுள் நயம் அறிதல், உரை நடை வேறுபாடுகள், கம்பர் கவித்திறம்.

5. மனோதர்மக் கட்டுரை (Imaginative Essay): ஒருவர் தாமாக ஒன்றை நினைத்து, அது முன் எங்கும் இல்லாத ஒரு செயலாய் இருப்பினும், அதனைப் படிப்போர் ஓர் உண்மையை உணர்ந்து மனமகிழுமாறு எழுதுவது மனோதர்மக் கட்டுரையாகும். இயல்பாக ஒருவன் இருக்கும் நிலைமையை மறந்து மற்றொரு நிலையில் இருப்பதாகப் பாவித்துக் கொண்டு அந்த நிலைமைக்கேற்பப் புதுமைகள் பல தோன்ற எழுதும் கட்டுரை இவ்வகையின்பாற்படும். உதாரணமாகப் பின் வருவனவற்றைக் கொள்ளலாம்.

(1) ஒரு சிறு நாட்டின் தலைமை உன்னிடம் வருவதாயின், நீ என்ன செய்வாய்?

(2) ஹிந்து மதத்தைச் சீர்திருத்தும் பூரண அதிகாரம் உனக்குக் கிடைத்தால், அதனை எவ்வழியிற் சீர்திருத்துவாய்?

(3) ஒரு சர்வ கலாசாலையின் அதிகாரத்தை உன் கையில் அளித்தால், அதன் மூலம் நாட்டுக்கு என்ன நன்மை விளைவிப்பாய்?

(4) நம் நாட்டில் நூற்றுக்கு அறுவர் கல்வி கற்றவர். இவருள்ளும் மிகச் சிலரே நல்ல கல்வி பெற்றவர். இக் குறையை நீக்கப் பத்துக் கோடி ரூபாய் உன்னிடம் இருந்தால், எவ்வாறு உபயோகிப்பாய்?

(5) ஒருவர் உலகில் உள்ள மக்களனைவரும் கேட்டுப் பின் பற்றத் தக்க சொல்வன்மையைப் படைப்பாராயின், அதனை எவ்வாறு பயன்படுத்தலாம்?

---

## 3. எழுதத் தொடங்கும் முறை
## (How to begin an Essay)

1. விஷய நிர்ணயம்: *கட்டுரை அல்லது வியாசம் என்று எழுதப் பெறுவது, யாதேனும் ஒரு விஷயத்தைப் பற்றி ஒரு குறிப்பிட்ட நோக்கத்தோடு அமைக்கப்பெற வேண்டுமாகையால், முதலிலேயே எழுதப்புகும் விஷயத் தைப்பற்றிய தெளிவான உணர்ச்சி வேண்டும்.* எழுதுவோர் உள்ளத்தின்கண் பொருளின் தெளிவு ஏற்படாதாயின், எழுதும்போது குன்றக் கூறல், மாறுகொளக் கூறல், கூறியது கூறல், மற்றொன்று விரித்தல் முதலிய குற்றங்கள் உண்டாகும். தொடக்கமும், முடிவும் இவ்வண்ணம் அமைதல் வேண்டுமென்று முதலில் உறுதி செய்யப் பெறுமல் எழுதப்பெற்ற கட்டுரைகள் வெறுஞ்சொற் கூட்டங்களாக அமைதல் இயல்பே. *பலர் கூடிய சபையிலே பிரசங்கம் செய்யப் புகுந்த சிலர்,*

ஊரில் உள்ளவற்றை எல்லாம் பேசி, தாம் பேசத் தொடங்கி யதை நன்கு கூற அறியாது முடிப்பதுபோல, எழுதும்முறை யிலும் சிலர்க்கு இடர்ப்பாடு நேரிடுவதுண்டு. முன்பே சிந் தித்து வைத்துக்கொண்டாலன்றிப் பிழையற எழுதுதல் எவர்க்கும் இயலாது. கால வரையறை ஒன்றுக்குட்பட்டு எழுத நேரிடும் கட்டுரைகளிலே நம் திறமையைப் பிறர் பரீ க்ஷித்தறிய இடமுண்டாதலால், முன்பே சிந்தனை செய்து நன்கு அமைத்தல் அத்தியாவசியமாம்.

2. பொருள் தேடல்: *உள்ளத்தின்கண் ஒரு விஷயத் தைப்பற்றிய நிர்ணயம் ஏற்பட்ட பிறகு, அதனை நன்கு அமைத்து எழுத வேண்டும் என்ற கருத்தோடு சிறிது நேரம் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும்.* நமது மனம் முழு தும் அப்பொருளிற் பற்றியிருக்குமாயின், அதற்குரிய கருத்துக் களும், உண்மைகளும், உதாரணங்களும், மேற்கோள்களும், வாதப் ;பிரதிவாதங்களும் தாமாகவே முன் வந்து நிற்கும். அவ்வாறு தோன்றுவனவற்றை அவ்வப்பொழுதே குறித்துக் கோள்ளல் நலம். குறிப்பவற்றின் முன் பின் ஒழுங்கு முறை யைப்பற்றி யோசிக்க வேண்டா. அவ்வாறு குறித்துக்கொள்ளா விடின், அவை வேண்டுங் காலத்தே உள்ளத்தில் எழாமல், மறப்பு என்னும் பகைவன் கையிற்படும்.

3. முறைப்படி அமைத்தல்: *இதில் சட்டகம் அமைத் தல், சட்டகத்தை நிரப்புதல் என்னும் இரு பிரிவினைகளைக் கொள்ளலாம்.*

(a) சட்டகம் அமைத்தல்: *எழுதக் கருதிய விஷ யத்தை உள்ளத்தில் நன்கு அமைத்துக்கொண்டு, எழுதும் நோக்கத்தையும் உறுதி செய்துகொண்டு, இன்ன முறை யைப் பின்பற்றி இன்னின்ன கருத்துக்கள் அமைய எழுத வேண்டும் என்ற நிச்சய புத்தி ஏற்படுமாறு, சுருக்கமான*

முகவுரையும் அழகிய முடிவுரையும் அடங்க, எல்லா, விஷயங்களுக்கும் ஒரு சட்டகம் முதற்கண் அமைத்துக்கொள்ளல் அவசியம். இச்சட்டகம் முன்னர் அமைக்கப் பெறாவிடில் கட்டுரையில் நேரிடலாம் என்று முன்னே கூறிய பல வகைக் குற்றங்களும் தோன்ற இடமுண்டாகும். [சட்டகம்-Skeleton or Outline.]

(b) சட்டகத்தை நிரப்புதல்: அவசியமான விஷயங்களை இவ்வாறு அமைத்துக்கொண்ட பிறகு, அவற்றை ஒழுங்குபடுத்தி ஒவ்வொன்றும் அததற்கேற்ற இடத்தில் பொருந்துமாறு செய்தல் வேண்டும். கூறியது கூறல், மாறுகொளக்கூறல், மற்றொன்று விரித்தல் முதலிய குற்றங்கள் வாராதிருக்கத் தக்கவாறு வேண்டுவன செய்தல் அவசியம்.

---

## 4. எழுதும் முறை
## (How to Write an Essay)

மேற்கூறியவாறு அமைக்கப்பெற்ற கட்டுரையின் எலும்புக்கூடாகிய சட்டகத்திற்குச் சதைப்பற்றும், உயிரும், உணர்ச்சியும் புகுமாறு செய்வதே இனி நம் பொறுப்பாகும். உடம்பின் எலும்புச் சட்டம் எவ்வளவு அழகாய் அமையினும், சதைப்பற்றும் உயிரும் இன்றிப் பயன்படாதது போல, வியாசம் எழுதும் முறையிலும் முன்னமைப்புக்களை எவ்வளவு திறம்பட அமைத்துக்கொள்ளினும், வியாசத்தை நன்கு எழுதி, நம் கருத்தை வெளியிட்டாலன்றிப் பயன் விளையாது. ஒவ்வொரு வியாசத்திலும் மூன்று அங்கங்கள் உண்டு. அவை முகவுரை, உடல், முடிவுரை என்பனவாம்.

1. முகவுரை: இது முன்னுரை, முற்கூற்று, தோற்றுவாய், தொடக்கம் எனப் பல்வேறு பெயர்கள்

பெறும். முகவுரை வியாசத்தின் முக்கியக் கருத்துக்களைத் தெரிவிப்பதாய் இருக்க வேண்டும். அதை வாசிக்கும்போதே வியாசத்தை முழுவதும் படிக்கவேண்டுமென்ற மனவெழுச்சி உண்டாகும்படி அமையவேண்டும். கட்டுரையின் அளவுக்கு ஏற்றபடி முகவுரை இருத்தல் வேண்டும். இரண்டு பக்கங்களில் முடியக்கூடிய ஒரு சிறு கட்டுரைக்கு ஒரு பக்கம் முகவுரை எழுதுவது வீட்டிற் பாதிப்பங்குக்கு முன்றில் அமைப்பது போலாகும். பொது வகையில் முகவுரையின் அமைதி இங்கே கூறப்பட்டதாயினும், எழுதப்பெறும் வியாசங்களுக்குத் தக்கவாறு அது பல வகைப்படும். முகவுரை நன்கு அமையாவிடில், முதற்கோணல் முற்றுங் கோணலாய் முடியும் என்பதை மனத்தில் நிறுத்தி முகவுரை எழுதல் வேண்டும்.

**2. உடல்:** இறைவன் படைப்பிலே, உடம்பில் ஒவ்வோர் அவயவமும், அதற்கேற்ற அளவும், சக்தியும், சிறப்பும் கொண்டு தக்க இடத்தில் அமைந்திருக்கக் காண்கிறோம். அவ்வொழுங்கை நினைவிற்கொண்டு வியாசத்தின் உடற்பகுதியை அமைக்க வேண்டும். உடற்பகுதியென்று இங்குக் கூறப் பெறுவதே உண்மையில் வியாசமாகும். அளவுக்கு மிஞ்சிச் சில அம்சங்களைப் பெருக்கியும், மற்றவைகளை மிகவும் சுருக்கியும் எழுதுவது நன்கு அமைந்த வியாசமாகாது. 'நாட்டு வாழ்க்கையில் உள்ள நன்மையும் தீமையும்' என்ற விஷயத்தை எழுதத் தொடங்கி நன்மையைப் பற்றி நான்கு பக்கங்கள் எழுதிவிட்டுத் தீமையைப்பற்றி நான்கு வரிகள் எழுதி முடிப்பது நல்ல அளவில் விஷயங்களை அமைத்ததாகாது. பெருவயிற்றன், கூனன், முடவன் முதலியவர்களை அந்த வியாசங்களுக்கு ஒப்பிடலாம்.

மேலும், எழுதும் விஷயங்களைப் பிரிவினைக்குத் தக்கவாறு பத்தி பத்தியாகப் பிரித்து எழுத வேண்டும். வியா

சம் ஒன்றேயாயினும், அதனையொட்டிய கருத்துக்கள் பலவா வதுண்டு. இன்னும் அக்கருத்துக்களிற் சில ஒரு தொகுதி யிலும், மற்றுஞ் சில வேறொரு தொகுதியிலும், பின்னும் சில இன்னொரு தொகுதியிலும் கூறப்பெறுதல் பொருத்த மாயிருக்கும். இந்த முறையறியாது ஒரே நீளமாக எழுது வது, படிப்போர் உற்சாகத்தைக் குறைப்பதோடு, நம் அறி வின் குறையையும் காட்டும். பத்தி பத்தியாகப் பிரித்தெழு தும்போது ஒவ்வோர் அமிசமும் தக்க அளவில் அமைக்கப் பெறவேண்டும். எளிய நடையில் எழுதுவதே எப்பொழுதும் நல்லது.

3. முடிவுரை : முடிவுரையாவது வியாசத்தின் முடிவில் உரைக்கப்படும் பகுதி. வியாசமாக அமைத்தெழுதிய கருத் துக்களைக் கற்போர் மனத்தில் ஊன்றச்செய்யுமாறு முடி வில் சுருக்கியுரைத்தல் ஒரு வகையான முடிவுரையாம். முன்னே தான் வெளியிட்ட வாதப்பிரதிவாதங்களின் மூலம் அடைதலாகும் முடிவை விளக்கிக் காட்டலும் மற்றொரு வகை முடிவுரையாம். ஒரு சிறு வாக்கியத்தாலேனும், பழமொழி யாலேனும், மேற்கோட் செய்யுளாலேனும், நம் உள்ளக் கருத் தைத் தெளிவுறுத்துவது வேறொரு வகை முடிவுரையாகும். இவ்வாறு முடிவுரை பல திறப்படும். எழுதத்தொடங்கும் வியாசத்தைச் 'சென்று தேய்ந்திறுதல்' என்ற குற்றம் உண்டாகும்படி, முடிக்கும் வழியறியாமல் திடீரென்று முடித்துவிடக் கூடாது. படிப்படியாக வந்து நன்கு அமைந்த முடிவுபெறுவதே வியாசத்துக்கு அழகாகும். உபந்நியாஸம் செய்யப் புகுந்த சிலர் பெருமூச்சு வாங்கிக்கொண்டு எடுத் ததை முடிக்க அறியாமல், மயங்கிக் கீழிறங்குவதுண்டு. அஃது எவ்வண்ணம் பெருங்குறையாகக் கருதப்படுமோ, அவ்வண்ணமே முடிவுரை அமையாததும் வியாசத்துக்குப் பெருங்குறையாகும். படித்த ஒருவர் முடிவுரையைப்பார்த்து,

இது வியாசத்திற்கு ஏற்றபடியே முடிந்திருக்கிறது என்று கருதும் வண்ணம் எழுதுதல் வேண்டும்.

---

## 5. பொதுக் குறிப்புக்கள்
## (General Notes)

சிறு வாக்கியங்களாக எழுதுதல் நலம். நீண்ட வாக்கியங்களாக எழுதத் தொடங்கி இடர்ப்படலாகாது. இடையிடையே அவசியமானவளவு அலங்காரங்களை உபயோகிக்கலாம். அவை இயல்பாக அமைந்திருக்க வேண்டும். முயன்று முனைந்து அமைக்க வேண்டா. எழுதியதை அவசியம் திரும்பவும் நன்கு படித்துப் பார்க்க வேண்டும். சித்திரம் அமைப்போர் தம் சித்திரத்தைப் பல முறை பார்த்துப் பார்த்துத் திருத்துவது போல, கட்டுரை எழுதுவோர் பல முறை பார்த்து நடையை நயம்பெறச் செய்தல் நலம்.

நடையின் அமைப்பு நன்கு கவனிக்கத் தக்கதொரு விஷயமாம். மாணவர் பெரும்பாலும் தோல்வியுறுவது நல்ல நடையொன்று தமக்கென அமைத்துக்கொள்ள அறியாத குற்றத்தினாலேயேயாகும். இயல்பாக அமைகின்ற இயற்சொற்களைக்கொண்டே எப்போதும் எழுதுதல் வேண்டும். செய்யுட்பிரயோகங்களை மேற்கோள் காட்டுதற்கன்றி வேறு எவ்வழியினும் எடுத்தாளலாகாது. சாதாரணமாக நண்பரோடும் ஆசிரியர்களோடும் பேசும் நடையில் கிராமிய வாசகங்களை விலக்கி எழுதுதல் சாலும்.

மாணவர் ஒரு கட்டுரை எழுதுகையில் தாம் தம் அறிவினாலும், அனுபவத்தாலும், கேள்வியாலும் அறிந்த விஷயங்களையே எழுதுதல் வேண்டும். பிறர் கருத்துக்களை அவர் நடையிலேயே தமவென எழுதுதல் பெருங்குற்றமாகும். தம்

கருத்துப் பலர் கருத்தோடு ஒவ்வாததாயிருப்பினும் எடுத்து உரைக்கலாம். ஆகாய விமானப் பிரயாணம் பலவித நன்மைகளை உலகினர்க்கு விளைத்திருப்பதாகப் பலரும் கருதுகின்றனர். அதனால் தீங்கு விளைவதாக ஒரு மாணவன் கூறக் கருதின், தன் உள்ளக் கருத்தைத் தக்க நியாயங்களை எடுத்துக் காட்டி வெளியிடலாம். தத்தம் கருத்தை நன்கு வெளியிடவே பேச்சும் எழுத்தும் அமைந்தன என்பதை மாணவர் அறிய வேண்டும். தெளிவாக எந்தக் கருத்தையும் கூறுதல் நலம். இரு பொருள் படுமாறும், நாம் ஒன்று நினைக்கப் பிறர் ஒன்று அறியுமாறும் எழுதலாகாது.

---

# XV. வியாசம் எழுதும் முறை

## (இரண்டாம் பகுதி)

## 1. வருணனைக் கட்டுரை

## (Descriptive Essay)

### 1. யானை

*1. யானையின் தோற்றமும், விநோதமான அவயவங்களும், அவைகளின் உபயோகங்களும். 2. யானையின் உணவும் வாழ்க்கையும், 3. யானையால் மனிதர்க்குள்ள உதவி. 4. யானைப் படையும், அதன் பண்டைக்காலப் பெருமையும், 5. யானையின் குணங்கள், 6. முடிவு.*

உலகிலே இந்நாளிற் காணப்படுகின்ற மிருகங்கள் எல்லாவற்றிலும் உருவத்தாற் பெரியது யானை. சிங்கத்தை மிருகேந்திரன் என்று கூறுவது அதன் பராக்கிரமத்தாலாம். யானையோ, தேகத்தின் அமைப்பாலும் பலத்தாலும் சிறந்ததாம். யானை பன்னிரண்டு அடிக்கு மேலும் வளரும். 'யானை படுத்தால் ஆள் உயரம்,' என்று வழங்கும் ஒரு வாக்கியத்தால், யானையின் உயரத்தை அறியலாம். யானையின் மத்தகம் மிகவும் பெரியது. கழுத்து மிகவும் குறுகியிருப்பதால், யானை தன் இஷ்டப்படி நாலு பக்கங்களிலும் கழுத்தைத் திருப்பிப் பார்க்க முடியாது. யாதேனும் ஒரு திக்கை நோக்க விரும்பினால், அது தன் உடம்பு முழுவதையும் திருப்ப வேண்டும்.

உயிர்ப் பிராணிகளில் வேறொன்றுக்கும் இல்லாமல் யானைக்கு அபூர்வமாய் அமைந்திருக்கும் அவயவம் தும்பிக்கை என்பதாம். தும்பிக்கை என்ற தொடர் மொழிக்கு யானையின் கை என்பது பொருள். அந்த அவயவம் யானைக்குக் கையைக்காட்டிலும் மிகவும் உபயோகமாயுள்ளது. அந்தத் தும்பிக்கையே முகர்வதற்கும் சுவாசிப்பதற்கும் உரிய

அவயவமாகிய மூக்காகவும் யானைக்கு உதவுகிறது. அத் தும்பிக்கையின் நுனியில் நீண்டு தட்டையாய் விரல்போல வளையக்கூடியதான ஒரு சிறு அவயவம் இருக்கிறது. அதன் உதவியால் யானை மிகச் சிறு பொருள்களையும் நிலத்தி லிருந்து எடுக்கும். யானையின் காதுகள் முறம் போல அகல மாயிருக்கும். வெளிக்காதுகளைச் சதா காலமும் யானை அசைத்துக்கொண்டே இருக்கும். ஈ, எறும்பு முதலியன உட்புகாதிருப்பதற்காகவே அஃது இவ்வாறு செய்கின்றது. யானைக்குக் கண்கள் மிகச் சிறியவையாய், அதன் பெரிய உருவத்துக்குப் பொருத்தமில்லாமல் அமைந்திருக்கின்றன.

ஆண் யானைக்கு வாயிலிருந்து இரண்டு கொம்புகள் முளைத்திருக்கும். அவை தந்தம் எனப்படும். அவைகளின் உதவியால் யானை மரப்பட்டைகளை வெகு விரைவாகக் குத் திக் கிழித்து உண்ணும்; மரக்கிளைகளைத் தும்பிக்கைக்கும் கொம்புக்கும் இடையிற் கொடுத்து முறித்துத் தள்ளும்; பெரிய மரங்களை வேரோடு பிடுங்கியெறிய அந்தக் கொம் பையே உபயோகப்படுத்தும். மனிதர் கைவசப்பட்டு வாழும் போது அவர் ஏவும் வேலைகளுக்கெல்லாம் அது கொம்பை உபயோகப்படுத்துவதுண்டு. அக்கொம்புகளுக்குக் கிம்புரி என்றதோர் ஆபரணம் செய்து போட்டு அழகு படுத்துவ துண்டு. தந்தத்தால் அநேக விதமான அழகிய பொருள்கள் செய்யப்படுகின்றன.

யானை சாகபக்ஷணிகளில் ஒன்று. அதற்கு மிகவும் விருப்பான உணவுப்பொருள்கள், கரும்பு, வெல்லம், அரிசி முதலியனவாம். சாமானியமாக நாம் காண்கின்ற மற்றப் பிராணிகளைக் காட்டிலும், யானை மிகவும் அதிகமான உண வுப்பொருள்களை உட்கொள்வதாகையால், அதிகமாகச் சாப் பிடும் ஒருவனை வைத்துச் சோறு போடுவதற்கு 'யானை

யைக் கட்டித் தீனி போடுவதுபோல,' என்னுமொரு பழமொழி வழங்குகிறது

யானைகள் காட்டிற் சுயேச்சையாய் வாழும்போது கூட்டம் கூட்டமாய்ப் பிரயாணம் செய்யும். யானையை யாராவது எதிர்த்தால், எதிர்த்தவர் மீள்வது துர்லபமாம். அது மரங்களை வேரோடு பிடுங்கிக் கீழே வீழ்த்தியும், தோட்டங்களையும் மூங்கிற் காடுகளையும் அழித்தும் இன்புறும். அநேகமாய், மூங்கிற் காடுகளிலேதான் யானைகள் திரியும். நமது இராசதானியில் மைசூர்க் காடுகளிலும், திருவாங்கூர்க் காடுகளிலும் யானைகள் அதிகமாய் உள்ளன.

யானைகளுக்குத் தண்ணீர் நிரப்பிய தடாகங்களிலும் கான்யாற்றுப் பள்ளங்களிலும் இறங்கி நீர் விளையாட மிகவும் பிரியம் உண்டு. நீரைத் தும்பிக்கையால் உள்ளிழுத்து மிக்க வேகத்தோடு பல பக்கங்களிலும் சிதறும்படி வீசுவதில் யானைக்கு ஆசை அதிகம். மரங்களின் இலை, பட்டை, காய், கனி முதலியன யானையின் முக்கிய ஆகாரப்பொருள்களாம்.

யானைகளைப் பிடித்துப் பழக்குவதில் தேர்ச்சி பெற்ற அநேகர் ஒன்று கூடிக் காட்டுக்குப் போவதுண்டு. அங்கு யானைகள் கூட்டமாகச் செல்லும் வழியில், அநேக பெரிய பள்ளங்களை வெட்டி அவற்றைத் தழைகளாலும் மூங்கில்களாலும் மூடி வைப்பார்கள். யானைகள் அவ்வழியில் வந்ததும் பள்ளங்களில் விழுந்துவிடும். அங்ஙனம் விழுந்த யானைகளை வேறு பழகிய யானைகளைக் கொண்டு வெளியே இழுத்துப் பழக்குவார்கள்.

இவ்வாறு பிடித்துப் பழக்கப்பட்ட யானைகளால் மனிதர்க்குப் பல வகையான பிரயோஜனங்கள் உண்டு. யானை அதிக தேக வலிமை பெற்றிருத்தலால், சாதாரணமாக மனிதர்களாற் செய்ய இயலாத பெரிய வேலைகளையெல்லாம் செய்ய

உபயோகப்படுகிறது. காடுகளிற் பெரிய மரங்களை வாள் கொண்டு அறுத்து வீழ்த்திய பின்பு, அம்மரத்துண்டுகளை ஒரு குறிப்பிட்ட இடத்திலே கொண்டுபோய் அடுக்கி வைக்கும் வேலைக்கு யானைகளைப் பழக்குகிறார்கள். என்ன விதமாக மரங்கள் அடுக்கப்பட வேண்டுமென்று எஜமானன் குறிப்பிடுகின்றானோ, அவ்விதமே மிகவும் பொறுமையாக வேலை செய்து அடுக்கி வைக்கும் திறமை யானைக்கு உண்டு.

சில இடங்களிலே புலி வேட்டைக்கு யானைகள் பழக்கப்படுகின்றன. வேட்டையாடுவோர் யானைகளின் முதுகின் மேல் அம்பாரி அமைத்து, அதில் அமர்ந்து அவைகளை ஓட்டிப்போவார்கள். புலிகளை வேட்டையாடும்போது அவை திரும்பி மனிதர்மேலும் யானைகள் மேலும் பாய வரும். அச்சமயத்தில் நன்கு பழக்கப்பட்ட யானைகள் அச்சமின்றி நின்று வேட்டைக்கு உதவிபுரியும். வேடர் நீண்ட ஈட்டிகளைக் கொண்டு குத்திப் புலிகளைக் கொல்வர்.

நகரங்கள்தோறும் சென்று பல வித மிருகங்களைக் கொண்டு அபூர்வமான வித்தைகள் செய்து பொருள் தேடும் 'சர்க்கஸ்' கூட்டத்தார், யானைகளைப் பழக்கிப் பல அபூர்வமான வேலைகளைச் செய்விப்பதுண்டு. முற்காலத்தில் அரசர்களுடைய படைகளில் யானைப்படை முதன்மை பெற்றிருந்தது. யுத்த காலங்களில் தேசக் கொடிகளையும் அரசர்களையும் முன்னின்று அஞ்சாது காப்பாற்றிய யானைகளைப்பற்றிப் பல கதைகள் உண்டு.

யானைக்கு ஒருவர் செய்த நன்றியை அறிந்து அன்பு கொள்ளும் குணமும், தீங்கை மறவாது பழிக்குப் பழி வாங்கும் குணமும் உண்டு. இந்தக் குணங்களைக் காட்டும் கதைகள் பலவுண்டு. தையற்காரன் ஒருவன் யானையின் தும்பிக் கையில் ஊசியாற் குத்த, அது சேற்றை வாரி [illegible]

லைப்பற்றிய கதையையும், பாகன் ஒருவன் தேங்காயை யானை யின் தலையில் உடைத்து அவ்யானையால் கொல்லப்பட்டு இறந்த கதையையும் இங்கு உதாரணமாகக் கொள்ளலாம். இதனாற்றான் யானை பன்னிரண்டு வருஷ ஞாபக சக்தி உடையது என்று சொல்லுகிறார்கள்.

யானைகள் நானா விதத்திலும் மனிதனுக்கு உபயோக முள்ள மிருகம். இக்கருத்தை விளக்கவே, 'யானை இருந்தா லும் ஆயிரம் பொன்; இறந்தாலும் ஆயிரம் பொன்,' என்னு மொரு பழமொழி வழங்குகின்றது.

## 2. மதுரை நகரம்

மதுரை நகரம் என்பது தமிழகத்தின் தென்பகுதியில் உள்ளதொரு புராதன நகரமாம். இதன் தற்கால அமைப்பும் சிறப்பும் நன்கு கவனிக்கத் தக்கன. முன்னாளிலே பாண்டி யர்களும் நாயக்க மன்னர்களும் இந்நகரில் இருந்து பாண்டி நாட்டை ஆண்டார்கள் என்பது சரித்திரப் பிரசித்தமாம். நகர அமைப்பின் இயல்புகளை ஆராயும் இக்காலத்தவர் புரா தனமாய் அமைந்த இந்நகரின் இயற்கையழகைக்கண்டு அதி சயிக்காமல் இரார்.

பாண்டிய மன்னர் வணங்கிய தெய்வமாகிய மீனாக்ஷி சுந்தரேசர் கோயில் இந்நகரின் நடு நாயகமாய் விளங்குகின் றது. விலை மிக்க பல மணிகளை வரிசை வரிசையாய் அழுத் தியதொரு பொற்பதக்கத்தின் நடுவிலமைந்த பச்சை மணி போல நகரின் நடுவில் விளங்கும் அத்திருக்கோயிற்காட்சி எவரும் அதிசயிக்க அமைந்தது. மேல் நாட்டிலிருந்து இந் நாட்டைக் காண வருவோர், தென்னாட்டுக்கு வருவாராயின், மதுரை நகரத்தையும் அதன் நடு நிலைக் கோயிலையும் அங் குள்ள சிற்ப சித்திரக் காட்சிகளையும் காணாது செல்வதில்லை.

உயர்ந்த தூண்களையுடைய பெரிய மண்டபங்களும், ஏழு நிலைக்கு மேற்பட்ட பல நிலைக் கோபுரங்களும் பொற்றாமரைக் குளமும், திருமலை நாயக்கர் அமைத்த புது மண்டபமும், ராயகோபுரமும், பிறவும் அத்திருக்கோயிலின் அங்கங்களாம்.

அக்கோயிலினுள் ஒருபால் முன்னாளில் மதுரையில் இருந்து தமிழ் வளர்த்த புலவர்களுக்கு ஓர் இருக்கை அமைந்துளது. அஃது இக்காலத்திற் சங்கத்தார் கோயில் என்று வழங்குகின்றது. கோயிலினுள் அமைந்த அகக்காட்சிகளை அவரவர் பார்த்து மகிழலாமேயன்றிப் பிறர் கூறியவளவில் அறிதல் எளிதன்று.

கோயிலைச் சுற்றியமைந்த புறத்திருமதிலின் அகத்தே முழுவதும் கல் பாவிய ஒரு வீதி உண்டு. இஃது ஆடி வீதி எனப்படுகின்றது. இவ்வாடி வீதியைக் கடந்து கோபுர வாயில்களின் வழியே வெளி வந்தோமாயின், அங்கு அடுத்துள்ள சித்திரை வீதி தோன்றும். தெற்குச் சித்திரை வீதியில் மங்கம்மாள் அரண்மனை இருக்கிறது. சித்திரை வீதியை நாற்புறமும் சுற்றிப் பார்த்து, அதிலிருந்து வெளிப்படும் ஒரு சந்தின் வழியே எத்திசையிற் சென்றாலும் ஆவணி மூல வீதியைக் காணலாம். இவ்வீதியும் நாற்பாலும் நன்கு அமைந்து அழகிய பல மாளிகைகளையுடையது. தெற்கு ஆவணி மூல வீதியில் திருஞான சம்பந்தர் மடாலயம் ஒன்று அமைந்துளது. அது புராதன சிற்ப முறையில் அமைந்த அழகியதொரு கட்டடமாம். ஆவணி மூல வீதியைக் கடந்து எத்திசையில் வெளிச் செல்லினும் மாசி வீதி தோன்றும். இதுவே இந்நகரத்தில் உள்ள பெரிய வீதியாம். இதன்கண் உள்ள கட்டடங்களின் அழகு பார்க்கத் தக்கது. தெற்கு மாசி வீதியில் சௌராஷ்டிர வியாபாரிகள் மிகுதியாய் இருக்

கின்றார்கள். கீழை மாசி வீதியே பெரிய கடை வீதியாய் அமைந்துளது. மாசி வீதிக்கும் வெளியே சென்றால், முன்னாளில் 'வையாளி வீதி' என்று வழங்கிய வெளி வீதி காணப்படுகின்றது. தெற்கு வெளி வீதியும் கீழை வெளி வீதியும் சேரும் இடத்தில் திருமலை நாயக்கர் காலத்துக் கட்டடங்கள் பல உண்டு. அவற்றுள் திருமலை நாயக்கர் மகால் என்பது மதுரைக்கே பெருமை விளைக்கும் சிறந்ததொரு கட்டடமாம். இதன்கண் மர வேலை சிறிதும் இன்றிப் பெருந்தூண்களை நிறுத்திக் கட்டடம் அமைத்த காட்சி, காண்போர் மனத்தைக் கவரும். வடக்கு வெளி வீதியிலே தமிழ்ச் சங்கம் இருக்கின்றது.

கிழக்கே மூன்று மைல் சென்றால், திருமலை நாயக்கர் வெட்டுவித்த பெரிய தெப்பக்குளத்தைக் காண்போம். அதன் நடுநிலையில் அமைந்த மையமண்டபம் சோலைகளின் இடையில் இயற்கையழகு பொலிய விளங்குகிறது. நடுக்கோபுரம் மிக உயர்ந்ததாய் இருப்பினும், அதன் நிழல் நிலத்திலே வீழ்வதில்லை. நகரின் வடக்கே வையையாறு ஓடுகிறது. வையையாற்றைக் கடந்து சிறிது தூரம் சென்றால், தல்லாக் குளம் என்ற சிற்றூரைக் காண்போம். அங்குச் சமீப காலத்தில் அமைக்கப்பட்ட கலெக்டர் கச்சேரி, தந்தி ஆபீஸ், அமெரிக்கன் கல்லூரி முதலிய அழகிய கட்டடங்கள் இருக்கின்றன. நாயக்க அரசர் அமைத்த தமுக்கம் என்ற அழகிய கட்டடமும் அங்கு இருக்கிறது.

இத்தகைய சிறப்புக்கள் அமைந்த மதுரைப் பெருநகர் புராதன சரித்திரத்தில் சிறப்புப்பெற்று இருந்ததேயன்றி, இந்நாளிலும் சென்னை மாகாணத்தில் சிறந்ததொரு நகரமாய் விளங்குகிறது.

ஆங்கிலக் கல்வியைக் கற்பிக்க இரண்டு பெரிய கல்லூரிகள் இந்நகரில் உள்ளன. உயர்தரக் கலாசாலைகள் ஏழு உண்டு. பெண்களுக்கென்றே அமைந்த உயர்தரக் கலாசாலையும் போதனா முறைப் பாடசாலையும் இருக்கின்றன. புராதன முறையிலே வேத சாஸ்திரங்களைக் கற்பிக்கும் பாடசாலைகள் சில உண்டு. வித்துவான் சிரோமணி முதலிய பரீக்ஷைகளுக்கு மாணாக்கர் பயில்கின்ற இராமேசுவரம் தேவஸ்தானம் ஸம்ஸ்கிருத வித்தியாசாலையும் இருக்கிறது. தனித்தமிழ் கற்பிக்கும் தமிழ்ச் சங்கக் கலாசாலையும் இருக்கிறது. ஊமையர்க்கென்றே அமைந்த சிறியதொரு பள்ளிக்கூடமும் இருக்கிறது. ஆரம்பப் பாடசாலைகள் எண்ணிறந்த மாணவர்களுடன் நகரின் பல பக்கங்களிலும் இருக்கின்றன.

முனிஸிபாலிட்டியார் நகரின் பல பக்கங்களிலும் சிறு சிறு தோட்டங்களை அமைத்து அழகுபடுத்தியிருக்கின்றனர். இத்தகைய நகரின் அழகை நேரிற் பார்த்தே அறிய வேண்டும்.

பயிற்சி : (முதல் வகை)

பின்வரும் விஷயங்களைப்பற்றிய தலைப்புக்களையும் குறிப்புக்களையும் உதவியாகக்கொண்டு வியாசங்கள் வரைக :—

1. கங்காரு

1. வாழும் இடமும் வகைகளும் :—ஆஸ்திரேலியாக் கண்டம் - நிலக் கங்காரு-மரக் கங்காரு என இரு வகை.

2. தோற்றம் :—தலை முதல் வால் வரை ஐந்தடி உயரம் தலைப்பக்கம் சிறுத்திருப்பது. இடைப் பக்கம் பெருத்திருப்பது. வால் கனம் அதிகம். முன்னங்கால் இரண்டும் குட்டையாயும், பின்னங்கால் நீண்டும் இருக்கும். பின்னங்காலில் மூன்று விரல்களும் முன்னங்காலில் ஐந்து விரல்களும் உண்டு.

3. இயல்பு :—ஒரே பாய்ச்சலில் முப்பது அடித்தூரம் பாய்வது. பத்தடி உயரம் எழும்புவது. வயிற்றின் மேற்புறம் இருக்கும் பையில் குட்டிகளை வைத்துக்கொள்ளுவது. புல்லும் தழையும் மேய்வது.

4. வாழ்க்கை :—வருடத்துக்கு ஒரு குட்டி போடுவது பால் கொடுத்து வளர்ப்பது சாதுவான தன்மை. குட்டியைக் காப்பதற்காக மிக்க வீராவேசத்தோடு போர் புரியும் இயல்பு.

2. எரி மலைகள்

1. இயற்கைத் தோற்றம் :—பெரியதொரு மலை. பூமியின் பாதலத்திலிருந்து உருகிக் கற்குழம்பு முதலியவற்றைக் கக்குதல்.

2. வகைகள் :—சதாகாலமும் எரிதல். விட்டுவிட்டு எரிதல்.

3. நன்மை தீமைகள் :—அடங்கிக் கிடக்கும் காலத்தே ஆராய்ந்தோர் பல வகை அபூர்வக் காட்சிகளையும் சாஸ்திர நுட்பங்களையும் காண்பது. எழும்போது நகரங்கள் அழிதல்.

4. விளையும் பயன் :—நாடுகளின் நிலை மாற்றம். உருகிய கற்கள் ஓடிப் பல வருடங்களின் பிறகு அபூர்வ உலோகங்கள் அகப்படுதல்.

பயிற்சி : (இரண்டாம் வகை)

பின் வரும் பொருள்களைப்பற்றி வியாசங்கள் எழுதுக:—

1. மீன்கள் 2. திமிங்கிலம் 3. காண்டா மிருகம்
4. மான்கள் 5. புலி 6. தேனீ
7. கழுகு 8. கிளிகள் 9. மயில்
10. குயில் 11. கோழி 12. குதிரை
13. இரும்பு 14. தங்கம் 15. ஈயம்
16. கப்பல் 17. கிராமபோன் 18. புகை வண்டி
19. கலங்கரை விளக்கம் 20. மண்ணெண்ணெய்
21. தென்னை மரம் 22. தேக்க மரம்
23. சென்னைமா நகரம் 24. கங்கா நதி
25 புதிய டில்லி 26. அமிருதஸரஸ் நகரம்
27. மலை வாழ் மக்கள் 28. ஆல மரம்
29. ஒலி பரப்பும் இயந்திரம் 30. பலா மரம்

## 2. விருத்தாந்தக் கட்டுரை

## (Narrative Essay)

### I. ஒரு நிகழ்ச்சி

விருத்தாந்த வியாசம் ஐந்து வகைப்படும் என முன்னர்க் கூறப்பட்டது. ஒவ்வொரு வகைக்கும் உதாரணம் கொடுத்து, அவற்றை அமைக்கும் முறையைப்பற்றி இங்கு விவரிப்போம்:

#### 1. சர்வ கலாசாலைப் பட்டமளிப்பு மகா சபை

சென்னைச் சர்வ கலாசாலையில் அதிகாரிகள் நிகழ்த்துகின்ற பரீக்ஷைகளில் ஆண்டுதோறும் தேர்ச்சி பெறுவோர் பல்லாயிரவர் ஆவர். முன்னாளில் ஆண்டுக்கு ஒரு முறையாக நிகழ்ந்த இப்பரீக்ஷைகள், சென்ற சில ஆண்டுகளாக ஆண்டுக்கு இரு முறை நிகழ்கின்றன. பரீக்ஷையில் தேர்ச்சி பெற்றுப் பட்டம் பெற உரியோர் ஆபவர் பல்லாயிரவர் ஆகையால், பட்டமளிப்பு விழாவும் ஆண்டில் இரு முறை நிகழ்கின்றது. அபூர்வமாகச் சில காலங்களில் மிகவும் பெரியோர்களுக்குச் சிறப்பாகச் சில பட்டங்கள் அளிக்கும்பொருட்டு விசேஷ விழாக்கள் நிகழ்வதும் உண்டு. ஒரு முறை இப்பெருவிழா நிகழ்ச்சியைக் காண்போர் மறு முறை காண விரும்பாதிரார். இந்நாட்டில் சென்ற சில நூற்றாண்டுகளாக வளர்ச்சி பெற்று வரும் மேல் நாட்டுக் கலைப்பயிற்சியிலும், புராதனக் கலைப்பயிற்சியிலும் பாண்டித்தியம் பெற்ற பலர், தத்தமக்குரிய எம். ஏ; பி. ஏ; பி. எஸ், ஸி; எம். எஸ். ஸி; எம். எல்; பி. எல்; பி. ஸி. இ; எல். எம். எஸ்; எம். பி. பி. எஸ்; சிரோமணி, வித்துவான், அப்ஸல் உலேமா முதலிய பட்டங்களைப் பெறுதற்காகக் குழுமியிருக்கச் சென்னை அரசாங்கத்

தலைவராகிய கவர்னர் பிரபு, சர்வ கலாசாலை அத்தியக்ஷர் என்னும் உரிமையால் தலைமை வகிக்க, நிகழ்கின்ற அம்மகா சபையின் நிகழ்ச்சிகளைக் காண்பது, கண் படைத்தார் பெறும் பெரும்பேறேயாகும். ஒருகால் இவ்வுற்சவம் நிகழ்ந்த முறை நேரிலே இருந்து கண்டவாறு இங்கு விவரிக்கப்படுகிறது. அறிவிற் சிறந்த பெரியோர் பலர் கூடும் இம்மகா சபையை வருணிப்பது அரிதே.

சர்வ கலாசாலை மண்டபம் நீண்டகன்ற உன்னதமான அழகியதொரு பெருங்கட்டடமாகும். இக்கட்டடம் பண்டை நாளில் நம் நாட்டில் அரசு பூண்டிருந்த ஆறுகாட்டு நவாபுகளால் அமைக்கப்பட்டது. இப்பெரிய மண்டபத்தைச் சுற்றிலும் புல் வளர்ந்து காட்சிக்கு இனிதாய் விளங்கும் வெளி நிலம் உளது. இவ்வெளியில் ஒரு புறத்தே இந்திய சேவக சங்க ஸ்தாபகரும் சிறந்த தேச பக்தரும் ஆகிய ஸ்ரீமான் கோபால கிருஷ்ண கோகலேயின் உருவச்சிலை இருக்கிறது. புற்றரை முழுதும் பட்டம் பெற வந்த வித்தியார்த்திகள் பல நிலைகளில் நிற்கும் காட்சி தோன்றுகிறது.

பட்டம் அளித்தற்கு அமைந்த மகா சபை கூடுதற்குரிய காலம் குறுகியது. ஆண் மக்களும் பெண் மக்களும் ஆகிய பலதிறக் கலை வல்லாளரும் தத்தம் கலைப்பட்டத்துக்குரிய நீண்ட அங்கிகளையும் பிறவற்றையும் அணிந்துகொண்டு மண்டபத்தினுட் புகுந்து, தத்தமக்கென நியமிக்கப்பெற்ற இடங்களில் அமர்ந்தனர். இக்காட்சியைக் காண அழைப்புப் பெற்று வரும் பெருஞ்செல்வராகிய அனைவரும் மண்டபத்தின் அகத்தே இருபாலும் உள்ள மேடைகளில் இட்ட இருக்கைகளில் அமர்ந்திருந்தனர். வாயிலுக்கருகில் உள்ள மேனிலையில் அத்தியக்ஷரும் பிற அதிகாரிகளும் சிறிது பொழுது இருந்தார்கள். சபாநாயகரும் உபந்நியாசகரும் உப

அத்தியக்ஷரும் பிற உயர்ந்த அதிகாரிகளும் அமர்தற்குரிய மேடையிலே பல வகை அலங்காரங்கள் அமைக்கப்பட்டிருந் தன. அம்மேடைக்குமேல் உள்ளதொரு மறைவிடத்தி லிருந்து மேல் நாட்டு வாத்தியங்களின் முழக்கம் எழுந்தது. அவ்வமயத்தில் சென்னைக் கவர்னரும், சர்வ கலாசாலை அத்தி யக்ஷரும் ஆகிய சபாநாயகர், தமக்குரிய அலங்காரங்களோடு அங்கத்தினர் தொடர மெல்ல இறங்கி நடந்து மேடையை அடைந்தனர்.

தலைவர் அங்ஙனம் வருகையில் அவைக்களத்திருந் தோர் அனைவரும் எழுந்து நின்றனர். பட்டதாரிகள் கண் கள் படும்படி உன்னதமாய் அமைந்த மேடையிற் சித்திர விதானத்தின்கீழ் இட்ட சிற்பத்திறம் அமைந்த பீடங்களில் அத்தியக்ஷரும் பிற அதிகாரிகளும் அமர்ந்தார்கள். இவர்கள் இங்ஙனம் வந்து இருக்கைகளில் அமருமுன்பே பல திற வித் தியார்த்திகளுக்கும் உரிய யோக்கியதா பத்திரங்களும் அன் றைய பிரசங்கத்தின் அச்சுப்பிரதிகளும் கொடுபட்டுவிட்டன. பிறகு எங்கும் நிச்சப்தமே குடிகொண்டிருந்தது.

முதலிலே மேல்நாட்டார் முறையிற் கடவுள் வாழ்த் துக் கூறப்பட்டது. பின்பு அத்தியக்ஷர் ஆணை பெற்று ஒவ் வொரு கலைத்துறையிலும் தலைமை பெற்ற பெரியோர்கள் அவ்வத்துறையிலே பட்டம் பெற வந்திருப்போரைச் சபா நாயகர் முன் நிறுத்தி அறிமுகப்படுத்தினர். அத்தியக்ஷர் அவர்களைப் பார்த்து, சர்வ கலாசாலைக் கலைச் செல்வம் பெற்ற வித்தியா விநோதர் சூழலிலே அவர்களை ஏற்றுக் கொள்வதாகக் கூறி, அதற்குத் தக்க நன்னெறியில் நடந்து கொள்ளுமாறு உபதேசித்து அனுப்பினர். பொற்பதக்கம் முதலிய அரிய பரிசுகளும் அப்பொழுது பெற உரியோர்க்கு வழங்கப்பட்டன. பிறகு ஒவ்வொருவராக மெல்லத் தலை

வணங்கி வந்தனங் கூறித் தத்தம் இடத்திற்குச் சென்றனர். இவ்வாறுபட்டம் பெறுவதற்கு ஆயிரக்கணக்கானவித்தியார்த்திகள் வந்திருந்ததால், இவ்வைபவம் இரண்டு மூன்று மணி நேரம் நடைபெற்றது. பெண் மக்களுள் பட்டம் பெற உரியோர் அனைவரும், ஒரு பக்கமாய் இருந்து உரிய காலத்திலே பட்டம் பெற்று அத்தியக்ஷர் ஆசி பெற்றுத் தம் இருக்கை அடைந்தனர். இங்ஙனம் பல திறத்தார் மெல்ல நடந்து சென்று திரும்பி வருகையிற் சில விசேஷங்கள் நிகழ்ந்தன. வித்துவான் சிரோமணி முதலியவர்கள் சென்று வரும்போது மற்றப் பட்டதாரிகள் குதூகலத்தால் நகைத்தார்கள்.

பின்பு அன்றைய உபந்யாஸம் ஆரம்பமாயிற்று. பிரசங்கம் செய்யப்பட்ட விஷயம் அச்சிடப்பெற்று, பிரசங்கம் ஆரம்பமாகுமுன் அனைவர்க்கும் வழங்கப் பெற்றது. அச்சிட்ட பிரதியைப் பார்த்து வாசித்தே அத்தியக்ஷர் தமது பிரசங்கத்தைச் செய்து முடித்தார். அதன் பிறகு அத்தியக்ஷரும் பின்பு அதிகாரிகளும் மேனிலைக்கு முன்போலச் சென்றார்கள். கூட்டம் மெல்லக் கலைந்தது.

## 2. ஒரு பரிசளிப்பு

பூர்வ காலத்திலிருந்து அமிழ்தினும் இனிய தமிழ் மொழி தழைத்து வளர்வதற்கிடமாயிருந்துவரும் மதுரைமாநகரிலே 1-10-32 சனிக்கிழமை மாலை ஆறு மணிக்கு ஒரு விசேஷக் கொண்டாட்டம் நிகழ்ந்தது. அதன் வைபவம், தமிழின் வளர்ச்சியை மேன்மேலும் முயன்று செய்வோர்க்கு ஊக்கம் வளர்ப்பதாயிருக்கும் என்று கருதி இங்கு எடுத்தெழுதப்பெறுகிறது.

சென்னைச் சர்வ கலாசாலையார் நடத்தும் தனித் தமிழ் வித்துவான் பரீக்ஷையில் முதல் தரமாகத் தேறிய தமிழறி

ஞர் ஒருவர்க்குச் சிறப்புச் செய்வதற்காக இக்கொண்டாட்டம் நடைபெற்றது. தமிழ் நாட்டிலே உள்ள சைவ மடங்களில் ஒன்றாகிய திருப்பனந்தாள் மடத்தின் தலைவராகிய காசிவாசி ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாதத் தம்பிரான் அவர்கள் ஒவ்வொரு வருஷமும் முதல் தரத்தில் தேறிய தமிழ் வித்துவானுக்கு ஆயிரம் ரூபாய் பரிசளிப்பதாக வாக்களித்து, சென்ற நான்கு ஆண்டுகளாக அவ்வாறே அளித்து வருகின்றார்கள். முதன்முறையாக இப்பரிசு ஸ்ரீ மீனாக்ஷி தமிழ்க் கல்லூரியிற் கலை பயின்ற சுப்பிரமணிய ஐயர் என்பவர்க்குக் கிடைத்தது. இவ்வருஷம் திரிசிரபுரம் தேசீயக் கல்லூரியில் தமிழாசிரியராயிருக்கும் தி. போ. பழனியப்பப் பிள்ளை என்னும் தமிழ் வல்லார் அதனைப் பெற்றார்.

தமிழறிஞர்க்கு இத்தகைய பரிசு ஒன்று ஏற்படவேண்டுமென்று மிகவும் முயன்று நிறைவேற்றி வைத்த பிரம்மஸ்ரீ மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் இப்பரிசளிப்புக் கொண்டாட்டத்திற் கலந்துகொள்ளுமாறு தமிழறிஞர் பலர்க்கும் அழைப்புப் பத்திரம் அனுப்பியிருந்தனர். மதுரை நகரிலும் இதற்குச் சமீபத்தில் உள்ள ஊர்களிலும் உள்ள பல பண்டிதர்களும் பிரபுக்களும் இவ்வைபவத்தின்பொருட்டு மதுரைக்கு வந்திருந்தனர்.

பரம்பரையாகத் தமிழ்ப் புலவர்களை ஆதரிக்கும் சேதுபதிகள் வழியில் வந்த பெருமை சிறந்த ஷண்முக ராஜேஸ்வர நாகநாத ஸேதுபதியரசர் இக்கொண்டாட்டத்திலே தலைமை வகித்துப் பரிசை அளிக்கும்படி வேண்டிக்கொள்ளப்பட்டிருந்தார்.

செல்வரும், அறிஞரும், புலவரும், பொது மக்களும் ஆகிய பலர் கூடிய அப்பேரவை அன்று மிகவும் சிறப்பாக

நடைபெற்றது. உரிய காலத்திலே சேதுபதி அரசர் அங்கு வந்து சேர்ந்தனர். கடவுள் வாழ்த்தின் பிறகு பிரம்மஸ்ரீ மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் சேது வேந்தரைத் தலைமை வகிக்க வேண்டினர். பிறகு அவ் வரசர்க்கு மங்கள வாழ்த்தாக இயற்றப்பெற்ற சில செய்யுட் களை மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலைத் தமிழாசிரியர் பிரம்மஸ்ரீ சு. ஹரிஹர ஐயர் அவர்கள் இசை இன்பம் தோன் றப் பாடினர். பின்பு தலைவர்க்கும் பிறர்க்கும் அப்பரிசின் வரலாறு நன்கு விளங்குமாறு பிரம்மஸ்ரீ மகாமகோபாத்தி யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களால் அப்பரி சின் சரித்திரம் உரைக்கப்பட்டது.

பிறகு சேது வேந்தர் தமிழ் வளர்ச்சியைப்பற்றிச் சைவ மடத்தார் செய்து வரும் முயற்சிகளைப் பாராட்டி, 'இன்று பரிசு பெறும்பேறு பெற்ற ஸ்ரீ தி. பொ. பழனியப்பப்பிள்ளை என்பாரது தமிழ்ப்புலமை மேன்மேலும் நன்கு தழைத் தோங்குக!' என வாழ்த்தி, ஒரு பையிற் கட்டிவைத்திருந்த ஆயிர ரூபாய்ப் பரிசை அவர்க்கு அளித்தனர். அவரும் அதனை வணக்கத்தோடு ஏற்றுக்கொண்டு, சில செய்யுட்க ளால் தமக்கு இச்சிறப்புச் செய்த மடத்தவர்க்கும் சேது வேந்தர்க்கும் புலவர்களுக்கும் பிறர்க்கும் வந்தனம் கூறினர். பின்பு மங்கள வாழ்த்தும், வந்தன உபசாரமும் கூறப்பெற்று அச்சபை நிறைவேறியது.

இப்பரிசு ஆண்டு தோறும் நிலையாக நடைபெற்று வரு மாறு காசிவாசி ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாதத் தம்பிரான் அவர் கள் மூலதனம் ஒன்று ஏற்படுத்தி வைத்திருக்கின்றார் கள். சென்னைச் சர்வ கலாசாலையாரால் வித்துவான் முதலிய பரீக்ஷைகள் ஏற்படுத்தப்பட்டுச் சில ஆண்டுகளே ஆகின்றன.

அப்பரீக்ஷைகளில் வேறு எதற்கும் இல்லாத இச்சிறப்புத் தனித்தமிழ் வித்துவான் பட்டம்பெறும் பரீக்ஷைக்கே அமைந் திருப்பது, தமிழ் கற்கத் துணிவோரின் பெரும்பாக்கியம் என்றே கூற வேண்டும். புதுமையாய் வந்திருக்கும் இச் சிறப்பை அடையவேண்டுமென்ற ஆசையோடாவது பலர் முயன்று தமிழ்க் கல்வியின் பெருமையை வளர்ப்பர் என்று எதிர் பார்க்கலாம்.

### 3. வெள்ளச் சேதம்

சில ஆண்டுகளுக்கு முன்னர்த் தென்னாடெங்கும் ஏழைக் குடிகளைத் திரவிய நஷ்டம், பிணி, உயிர்ச்சேதம் முதலியவற்றிற்கு ஆளாக்கிய வெள்ளப் பெருக்கைப்பற்றி யாவரும் அறிவர். இன்று அதைப்பற்றி நினைத்தாலும் நெஞ்சு நடுங்கும். நாட்டு மக்களுக்கு அதனால் விளைந்த நஷ்டத்தைக் கணக்கிட்டுரைக்க இயலாது.

தண்ணீர், வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள் களில் ஒன்றாகும் என்பதை எல்லோரும் அறிவோம். உலகில் முக்காற்பகுதி நீர்மயமாய் இருப்பதும், தண்ணீரின் அவசி யத்தை நன்கு விளக்கும். தண்ணீர் மிகவும் அவசியமான பொருளாயிருந்தாலும், அளவு கடந்துவிடுமாயின், அதனால் தீங்கே விளையும் என்பது யாவரும் அறிந்ததே.

இவ்வெள்ளப் பெருக்கிற்குக் காரணமான காவிரி நதி, சோழநாட்டையும் மைசூர் ராஜ்யத்தையும் தனது நீர்ப்பெருக் கால் வளம்படுத்துகின்றது. காவிரி பாயும் நாடுகள் மிக்க வளம் படைத்தனவாய் இருக்கின்றன. எதிர்பாரா வண்ணம் பெரு மழை பொழிந்த காரணத்தால், காவிரியில் அளவுக்கு மிஞ்சி வெள்ளம் வந்துவிட்டது. மைசூர் ராஜ்யத்தில் இயன்றவளவு

அடக்கி வைத்துக்கொண்டு மிஞ்சியதை வெளியில் விட்டார்கள். தந்திச் செய்திகள் எங்கும் பறந்தன. காவிரிக் கரையோரத்தில் உள்ள கிராமங்களில் வாழ்வோர் எல்லோரும் இரவும் பகலும் ஓயாமல் விழித்திருந்தனர். அரசாங்கத்தாரும் தம்மால் இயன்றளவு முயன்று தண்ணீரைக் கிளையாறுகளில் போக்க வேண்டுவன செய்தனர். என்ன செய்தும் பயன் என்ன! மேன்மேலும் மழை பொழிந்ததால் அதற்கு முன் ஒரு காலத்திலும் வந்திராத வெள்ளம் வந்தது.

காவிரி, கொள்ளிடம், பவானி என்னும் மூன்று நதிகளிலும் பிரவாகம் பூரணமாய் ஓடிற்று. வெள்ளப் பெருக்குச் செல்லுமிடங்களிலே உள்ள வாய்க்கால்கள் எல்லாம் நீர் நிறைந்து சிற்றாறுகளைப்போல மிக்க வேகத்தோடு ஓடின. வலிமை குறைந்த அணைகளும் பாலங்களும் உடைந்தன. கிராமங்களின் ஓரங்களில் பல இடங்களிலே கரைகளை உடைத்துக்கொண்டு சென்று, வெள்ள நீர் ஊர்களில் புகுந்து பாழாக்கிற்று. சிறு குடிசைகள் பல இருந்த இடந்தெரியாமல் மறைந்தன. ஆடு மாடுகள் வெள்ளத்தால் அடித்துக்கொண்டு போகப்பட்டன. ஏழைக்குடிகளில் பலர் உண்ண உணவும், உடுக்கஉடையும் இன்றிக் குளிரால் நடுங்கிக்கொண்டு நள்ளிரவில் அல்லற்பட்டு ஓட நேர்ந்தது. பெரிய கட்டடங்கள் பல இடிந்து விழுந்தன. பவானி என்னும் கிராமத்திலே நதியின் கரையோரத்திலுள்ள கோயில் முழுவதும் நீரில் மூழ்கியது, பூசை நிகழ்வது சில தினங்களுக்கு நின்று போயிற்று. காவிரிக் கரையோரத்திலுள்ள கிராமங்களில் உள்ள வயல்களில் எல்லாம் மணல் ஏறியது. பெருஞ்செல்வராய்ப் பல வேலி நன்செய் நிலமுடையவராய் இருந்தோரெல்லாம், தம் நிலமெங்கும் அறுக்கும் பருவத்திலிருந்த நெல், நீரிலும் மணலிலும் மூழ்கியதைக் கண்டு, செய்வதறியாது கலங்கினர்.

காவிரிக் கரையிலுள்ள சில கிராமங்களிற் பெரிய மாளிகைகள் அமைத்து வாழ்ந்த பல பிரபுக்கள், தங்கள் உறைவிடங்களிலே ஆறடி எட்டடித் தண்ணீர் நின்றதால், இருக்க இடமில்லாமல் தவித்தார்கள். வெளியில் நடப்பதும் இயலாததாயிற்று. சாலைகளும் வீதிகளும் நீந்துதற்கு உரிய இடங்கள் ஆயின. பெரும்பணக்காரர் பலர் நிற்க நிழலும் இருக்க இடமும் இல்லாமல் அல்லற்பட நேர்ந்தது.

சில தினங்களில் வெள்ளம் வடிந்தது. அநேக இடங்களிலே இருப்புப் பாதைகள் இடமாறிக் கிடந்தன. புகை வண்டித் தொடர்கள் போக வழியில்லாமையால், அநேக நாட்கள் வரையில் போக்கு வரவு குறைந்தன. ரஸ்தாக்கள் பலவற்றில் வெள்ளத்தால் உடைப்பு ஏற்பட்டிருந்ததால், சாதாரண வண்டிகளும் மோட்டார் வண்டிகளும் போவது அசாத்தியமாயிற்று. வண்டித் தொடர்களும் வண்டி நிலைகளும் பல இடங்களில் அடைந்த சேதத்தை அளவிட்டுரைக்க இயலாது. வெள்ளம் வற்றிய பிறகு குடியானவர்கள் தங்கள் நிலங்களைப் பார்க்கப் புறப்பட்டார்கள். நிலங்கள் இருந்த இடமே தெரியவில்லை. தண்ணீர் எல்லாம் வடிந்த பிறகு நிலங்களைப் பார்த்தபோது, முப்போகம் விளையும் நன்செய்ப் பூமியாய் இருந்தவை ஒரு பனையுயரத்துக்குமேல் மணல் மேடிட்டுக் கிடந்தன. இன்னது செய்வது என்று எவர்க்கும் விளங்கவில்லை. ராஜாங்கத்தாரும் இவ்விஷயத்தில் ஒன்றும் செய்ய அறியாது திகைத்தனர். இவ்வளவு நஷ்டக் காட்சிகளுக்கிடையில் சில விநோத சம்பவங்களும் நிகழ்ந்தன :

வெள்ளத்திலே மிதந்த பானைகள் சில, கரையோரங்களில் ஒதுங்கின. ஒருவன் அங்ஙனம் ஒதுங்கிய ஒரு பெரிய பானையை எடுத்துப் பார்த்தான். அதனுள் பெரியதொரு நாகப் பாம்பு மண்டலமிட்டிருந்தது. மற்றொருவன் ஒரு சிறு

பானையை எடுத்தான். அதன் வாய் மூடி நன்றாய்ப் பதிந்திருந் தது. அதை உடைத்துப் பார்க்க ரூபாய்கள் இருந்தன. மூங்கிற் குழாய்கள் சில பணத்தோடு மிதந்து வந்தன. இவ்வளவு காட்சிகளும் அளவுக்கு மிஞ்சிய மழையாலும். வெள்ளத்தாலும் விளைந்தவையேயாம்.

## 4. கிராமம் தீப்பற்றியது

கோயமுத்தூர் ஜில்லாவில் பொள்ளாச்சி என்பது ஒரு தாலுக்கா ஆகும். அது மிக்கவளம் படைத்த பகுதி என்றே சொல்லலாம். செல்வர்கள் மிகுந்த ஊர்களில் அவர்களை அண்டிப் பிழைக்கும் பல ஏழைகள் இருத்தலும் இயல்புதானே! அந்நகரின் செல்வம் எல்லாம் அங்குள்ள சந்தை வியாபாரத்தால் வருவதேயாம். அச்சந்தை சாமானியமானதன்று. அந்த ராஜதானியிலேயே அத்தகைய பெரிய சந்தை எங்கும் கூடுவதில்லை. அச்சந்தைக்குப் போனால், உலகில் மனிதர் வாழ்வுக்கு வேண்டிய எவ்வகைப் பொருள்களையும் விலைக்கு வாங்கலாம். மூட்டை தூக்கிப் பிழைக்கும் ஏழைகள் சந்தையிலே இரண்டு மூன்று ரூபாய் சம்பாதித்து, அதிற் பெரும் பகுதியை மாலைக்காலத்திலே குடி விஷயத்திற் செலவிட்டுப் பெரும்பாலும் வெறுங்கையோடு வீட்டுக்குச் செல்வதுண்டு; புத்தியுள்ளவர் பணம் சேர்ப்பதுமுண்டு. வியாபாரிகள் ஒரு சந்தையில் திடீரென்று பெருத்த இலாபமும் அடுத்த சந்தையிலே எதிர் பாராது மிகுந்த நஷ்டமும் அடைவதுண்டு. ஏழைகளும் முயற்சியாற் பொருளீட்டி வாழத்தக்க சௌகரியங்கள் பல அமைந்த அவ்வூரில் நிகழ்ந்த ஒரு செய்தியைப் பற்றி இனிக் கூறுவோம்.

பொள்ளாச்சியின் ஒரு பக்கத்திற் பறைச்சேரி ஒன்று உண்டு. அச்சேரியிலே சிறு சிறு கூரைக் குடிசைகள் அங்கு மிங்குமாக நூற்றுக்கு மேலே இருந்தன. அக்குடிசைகளி

லெல்லாம் அன்றன்று உழைத்துக் கிடைத்ததைக் கொண்டு வயிறு வளர்க்கும் எளிய குடியினராகிய பலர் வாழ்ந்திருந்தனர். அவரனைவரும் பிறர் பொருட்டு உழைப்பதே கடமையாகக் கொண்ட தாழ்த்தப்பட்ட வகுப்பினராவர். அவர்களுக்கென்று நிலமும் பொருளும் இல்லை. அந்தக் குடிசைகள் பல நாள் முயற்சியின் பயனாக மண் சுவர் எழுப்பப்பட்டுப் பனையோலையாற் கூரை அமைக்கப்பட்டவையாகும்.

திடீரென்று ஒரு நாள் இரவு அக்குடிசைகளில் ஒன்றில் தீப்பிடித்துக்கொண்டது. எல்லாம் பனையோலைக் கூரைகளேயாகையால், தீ விரைவிலே பரவத்தொடங்கியது. எங்கும் இருள் சூழ்ந்திருந்த அப்பொழுது, முதலிலே பிடித்த தீயை யாரும் அறியவில்லையாயினும், அது பரவத் தொடங்கியதும் அறிந்துகொண்டனர். பகலெல்லாம் உழைத்துச் சிரம பரிகாரத்துக்காக வெறுந்தரையிற் படுத்திருந்த ஆடவர், பெண்டிர், இளைஞர் ஆகிய பலரும் எழுந்தனர்; பக்கத்தில் அவர்கட்கென அமைக்கப்பட்டிருந்த ஒரு கிணற்றிலிருந்து குடம் குடமாகத் தண்ணீர் கொண்டுவந்து கூரைகளின்மேல் ஊற்றினர்.

அவர்கள் என்ன செய்தும் தீ அணையும் வழியாய் இல்லை. அவ்வளவு செல்வ மிக்க நகரிலே தீயணைக்கும் இயந்திரம் ஒன்று கூட இல்லை. தண்ணீர் எடுப்பதற்கு ஒரு கிணறே இருந்தது. இரவு சுமார் எட்டரை மணிக்குப் பிடித்துக்கொண்ட தீ, இரண்டு மணி நேரம் நன்கு கொழுந்துவிட்டெரிந்தது; பிறகு மெல்ல அடங்கியது. எங்கும் நெருப்பு மயமாய்க் கிடந்தது. அவசரத்திலே வாரி வெளியிலே எறியப்பட்ட சட்டி பானைகள் வழியெங்கும் சிதறிக் கிடந்தன.

மறுநாள் சூரியோதயம் ஆயிற்று. ஒவ்வொருவரும் தத் தம் வீடுகள் இருந்த இடத்தை நோக்கினர்; இரா முழுதும் பனியால் நனைந்து விறைத்திருந்த தம் உடம்பின் சிரமத் தையும் பொருட்படுத்தாது, கரிபட்டுக் கிடந்த குட்டிச் சுவர் களுக்குள் நுழைந்து, தம் பொருள்களைத் தேடலாயினர்.

ஓர் ஏழை அநேக வருஷங்களாக மிகச் சிரமப்பட்டுச் சேர்த்து வைத்திருந்த நூறு ரூபாய்களை நோட்டாக மாற்றி மூங்கிற்குழாய் ஒன்றிற் செருகிக் கூரையில் மறைத்து வைத்திருந்தான். கூரையில் தீப்பிடித்த அவசரத்தில் தனது மூங்கிற் குழாயை மறந்து தப்பி ஓடிய அவன், தீப்பற்றி வெகு நேரமானபின், அதன் நினைவு வர, வயிற்றிலும் வாயி லும் அறைந்துகொண்டு, சிரமப்பட்டு அதனைத் தேடி எடுத் துப் பார்த்தான். பாடுபட்டுத் தேடிய பொருளைக் கடவுளே காப்பாற்றிக் கொடுத்ததுபோல அந்த நோட்டு எரிந்து சாம்ப ராய்ப் போகாமல் இருந்தது. இன்னொருவன் ஒரு சிறு சட் டிக்குள் தன் சேம நிதியைப் போட்டு வைத்திருந்தான். அவனும் ஐம்பது ரூபாய் வரை சேர்த்திருந்தான். பலர் புகுந்து வாரியெறிந்த அவசரத்தில் அந்தச் சட்டி போன இடமே தெரியவில்லை. ஒரு கிழவி தன்னுடைய கந்தைத் துணியைத் தீ உண்டதால், 'ஐயோ! கட்டிக்கொள்ள ஆடை இல்லையே!' என்று புலம்பினாள். தாய் ஒருத்தி தன் குழந் தையை வெளியில் எடுத்த அவசரத்தில், 'இதைத் தூங்க வைத்த துணியை எடுக்க மறந்தேனே!' என்று ஏங்கினாள். அத்துணி தீப்பற்றி அழிந்தது. 'குழந்தையை இனி எதில் படுக்க வைப்பேன்!' என்று அவள் வருந்தி அழுதாள்.

பெரிய மனிதர் பலர் அங்கே வந்து அந்தக் கோரமான காட்சிகளைக் கண்டு, இரண்டு தினங்களுக்கு அவ்வேழை

களுக்குக் கஞ்சி வார்க்க ஏற்பாடு செய்தனர். சிலர் சொற்பச் செலவில் அகப்படும் துணிகளை வாங்கி அவ்வேழைகளுக்கு உதவினர். 'நல்ல வேளையாக உயிர்ச்சேதம் ஒன்றும் உண்டாகவில்லையே!' என்று எல்லாரும் கடவுளை வாழ்த்தினர். உழைத்துப் பிழைப்பதே தங்கள் குலத்தொழிலெனக் கொண்ட அவ்வேழைக் குடிகள், சில செல்வந்தர் உதவியாற் சில தினங்களுக்குள் முன்போலவே மீண்டும் கூரைகளை அமைத்துக்கொண்டார்கள்:

---

## II. வாழ்க்கை வரலாறு (Biography)

வாழ்க்கை வரலாறு என்பது இரண்டு வகையாக எழுதப்படும். ஒன்று, ஒரு பெரியார் சரித்திரத்தை உலகத்தார் உணருமாறு நாம் எழுதுவதாம். மற்றொன்று, ஒருவர் தம் வரலாற்றைத் தாமே எழுதுவதாம். இவ்விரு வகையிலும் இந்நாளிலே பெரும்புத்தகங்கள் பல தோன்றியுள்ளன.

ஒருவர் வரலாற்றை எழுதுவது என்று தொடங்கும் போது, அவர் நம் காலத்தில் வாழ்பவராயின், இயன்றவளவு உண்மையான செய்திகளைச் சேகரித்து எழுதல் எளிதாயிருக்கும். அநேக நூற்றாண்டுகளுக்கு முன்னே வாழ்ந்திருந்த கம்பர், திருவள்ளுவர், வான்மீகர், காளி தாசர், புகழேந்தியார் முதலிய புலவர் வரலாறுகளை எழுதப் புகுவோமாயின், நம் அறிவுக்கெட்டியவளவில் நன்கு ஆராய்ந்து, பலர் உண்மை என்று அங்கீகரிக்கத்தக்க விதத்தில் அவற்றை எழுதவேண்டும். நம் நாட்டுப் பண்டைப் புலவர் சரித்திரங்களும், அரசர் சரித்திரங்களும் தெளிவாக நன்கு விளங்காமையால், கட்டுக் கதைகளை நிரப்பி எழுதக்கூடாது. உண்மையொன்றும் நமக்கு

விளங்காவிட்டால், 'இவ்வாறு வழங்குகின்றன,' என்று கூறி விடுதல் நலம். இந்நாளில் உள்ளவர்களைப்பற்றி எழுதுவதி லும் உண்மையை நன்கு ஆராய்தல் வேண்டும். பெரும் பாலும் ஒருவரைப் பற்றிப் புகழவே எவர்க்கும் தோன்றும். நாம் எழுத எடுத்த சரித்திரத்திற்குரிய பாத்திரத்தின் வர லாற்றிற் குறைகள் எவையேனும் இருப்பின், அவற்றை முற் றிலும் மறைத்துவிட முயலலாகாது; குணங்களை அளவுக்கு மிஞ்சிப் பேசுவதும் கூடாது. 'குணமும் குற்றமும் கலந் ததே மனித வாழ்வு,' என்பதை நன்கு மனத்தில் வைத்துக் கொண்டே எழுதத் தொடங்க வேண்டும். இவ்வாறு எழு தப்பெறும் வரலாறுகள் ஆங்கில மொழியில் 'பயாகிரபி' (Biography) என்னும் பெயர் பெறும்.

இனி ஒருவர் தம் வரலாற்றைத் தாமே விளக்கி எழுதும் ஒரு வகையும் உண்டென்றோம். அதை இரண்டு பிரிவாக்க லாம். உண்மையாக ஒருவர் தம் சரித்திரத்தை உலகிற்கு உணர்த்தும் கருத்தோடு எழுதும் சுய சரிதை அதன் முதல் பிரிவில் அடங்கும். உயிருள்ளவையும் இல்லாதவையும் ஆகிய பொருள்கள், தம்மிடம் உள்ள விசேஷங்களை உலகத் தார் உணருமாறு வாய் வன்மை படைத்து எடுத்துரைப்பது போல, அறிஞர்கள் தங்கள் கற்பனு சக்தியின் வன்மையால் அமைக்கும் சுய சரிதைகள் இரண்டாம் பிரிவின்பாற்படும்.

சுய சரிதையிற் பெரும்பான்மையாக ஒருவர் தம் குறைகளை உலகறியா வண்ணம் மறைக்கவே முயல்வர் அபூர்வமான மாண்பு படைத்த பெரியோர் தம் சரித்திரங் களிற் பிறர் எள்ளி நகையாடத் தக்க செய்திகளையும் மறை யாமலே கூறிவிடுவர். இவ்வித வாழ்க்கை வரலாறுகட்கு ஆங்கில மொழியில் 'ஆட்டோ - பயாகிரபி' (Auto-Bio-

graphy) எனப் பெயர் வழங்கும். இங்கு ஒவ்வொரு வகைக்கும் உதாரணம் காட்டி விளக்குவோம்.

## 1. கம்பர்

சோழ நாட்டிலே மாயூரத்திற்கு அருகில் உள்ள திருவழுந்தூர் என்னும் கிராமத்தில், 'கல்வியிற் பெரியவர் கம்பர்,' என்று புகழ் படைத்த புலவர் பெருமான் பிறந்தார். இவர் பிறந்த காலத்திலே, சோழ நாட்டில் அரசு புரிந்த மன்னன் ஆதித்தன் என்னும் பெயர் பூண்ட சோழனாவன். இவன் தமிழ்க் கல்வியிலே சிறந்த அபிமானம் உடையவனாயிருந்தனன்.

கம்பர் இளம்பருவத்திலே தம் பெற்றோரை இழந்து, ஆதரிப்பாரற்று, மிக்க கவலைக்குள்ளானார். கல்விப் பயிற்சிக்குரிய கூரிய அறிவு இவரிடம் திகழக் கண்ட திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப முதலியார் என்னும் செல்வர், இவரைத் தம் மைந்தர் போலப் பாராட்டிப் பொருளுதவி செய்து, தக்க ஆசிரியரிடத்தே கல்வி பயில்வித்தார். அக் காலத்திலே நம் நாட்டில் எங்கும் பரவியிருந்த சங்க இலக்கிய இலக்கணங்களைக் கம்பர் ஐயந்திரிபறக் கற்றுத் தெளிந்து சிறந்த புலமை படைத்தார்.

கம்பர்க்குக் கலை மகளிடம் அளவிறந்த பக்தி உண்டு. அந்தப் பக்தியின் பயனாகிய கல்விச் செல்வத்தைப் பிறர் எவர்க்கும் அமையாத அவ்வளவு சிறப்பான நிலைமையிலே இவர் பெற்றார்; 'சரசுவதி அந்தாதி' என்னுமொரு பிரபந்தத்தை இளம்பருவத்திலேயே பாடிப் புலவருள் தலைமை பெறத் தக்கவரானார். தமிழ் நாட்டில் அக்காலத்திலே வழங்கிய இராமாயணம் பழமையான சங்கச் செய்யுளாய்ப் பல இடங்களிலே குறைவுபட்டதாய் இருந்தது. இராமா

யணம் முழுவதும் விருத்தப்பாவாற் பலவகைப்பட்ட சந்தங்களில் அமைந்தால் நன்றாயிருக்கும் என்று அறிஞர் பலரும் கருதினர். சடையப்ப முதலியாருக்கும் இந்த எண்ணம் இருந்தது.

அந்தப் பிரபு ஒரு நாள் கம்பரை அருகில் அழைத்து, "ஐய, நீரும் நானும் பிறந்த நாட்டுக்கு அழியாப் புகழ் விளையுமாறு ஒரு பெருங்காவியம் இயற்றுதல் நலமாமன்றோ?" என்றார். அதற்குக் கம்பர், "ஆம்; நானும் சில நாட்களாக இதுபற்றி யோசிப்பதுண்டு. எந்தச் சரித்திரத்தை அவ்வாறு காவியமாக இயற்றுவது என்பதே யோசித்து முடிவு செய்ய வேண்டிய விஷயமாம்," என்றார். சடையப்ப முதலியார் அது கேட்டு, "புலவரே, உத்தமமான நீதிகள் பலவற்றை உலகம் உள்ளளவும் உணர்த்த வல்லதாகிய இராமாயண மகா காவியத்தைத் தமிழில் இயற்றுவது சிறந்த புண்ணியமாகும்," என்றார். உடனே கம்பரும், "அதுவே தகும்; அதனை யான் விரைவிலே செய்து முடிப்பேன்!" என்று கூறித் தம் மனைக்குச் சென்றார்.

பிறகு இவர் அந்நாளில் ஸம்ஸ்கிருத பாஷையிலே வழங்கி வந்த இராமாயணங்கள் பலவற்றையும் நன்கு பயின்ற பெரியார் பலரோடு பகலெல்லாம் அளவளாவி, இராமாயண இரகசியங்களை நன்கு உணர்ந்துகொண்டு, கலைமகள் திருவருளால் மிகவும் விரைவிலே பால காண்டம் முதல் யுத்த காண்டம் வரையில் உள்ள ஆறு காண்டங்களையும் பாடி முடித்தனர். உத்தர காண்டச் செய்திகள் இவர் மனத்துக்கு மகிழ்ச்சி விளைவிக்கவில்லை போலும்! அதனால் அவற்றைப் பாடாது விட்டார்.

பிறகு கம்பர் சடையப்ப முதலியாரும் பிற பெரியோர்களும் வேண்டிக்கொண்டதற்கிணங்கித் தாம் பாடிய இராமாயணத்தைச் சோழ மன்னனது சபையிலே அரங்கேற்றினர்; அந்நாளிலே சிதம்பரத்தில் வாழ்ந்த அந்தணர்களும் ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்த வைணவர்களும் சிறந்த புலவர்களாய்த் திகழ்ந்தமையால், மிகவும் சிரமப்பட்டு அவர்கள் முன்னிலையிலும் தம் பெருங்காவியத்தை அரங்கேற்றிப் புகழ் படைத்தார். ஸ்ரீரங்கத்திலே நம்மாழ்வார் ஸ்தோத்திரமாகச் 'சடகோபரந்தாதி' என்னும் பிரபந்தத்தைப் பாடிய பிறகே கம்பர் இராமாயணத்தை அரங்கேற்ற இடம் பெற்றார்.

இவரது அரும்புலமைச் செயலைப்பற்றிக் கேள்வியுற்ற அரசர் பலரும், இவரைத் தத்தம் நாடுகளுக்கு வரவேற்று, அங்கெல்லாம் இராமாயணம் பிரசங்கிக்கச் சொல்லிக் கேட்டு மகிழ்ந்தனர். வடக்கே வெகு தூரத்தில் இருக்கும் ஓரங்கல் நாட்டு அரசனாகிய பிரதாப ருத்திரன், இந்த இராமாயணத்தில் ஈடுபட்டுக் கம்பரைத் தன்னாட்டுக்கு அழைத்து, அநேக ஆண்டுகள் ஆதரித்து வந்தான்.

கம்பருக்கு அம்பிகாபதி என்ற குமாரர் இருந்தார். அவரும் சிறந்த புலமைச் செல்வம் படைத்தவர். அவர் 'அம்பிகாபதிக் கோவை' என்னும் ஒரு சிறு நூல் செய்ததாக வழங்குகிறது. அம்பிகாபதியின் குமாரராகிய தண்டியாசிரியர் என்பவர், தமிழில் 'தண்டியலங்காரம்' என்னும் அணியிலக்கணப் புத்தகத்தைச் செய்து உதவினார். அவர்க்குப் பிந்திய கம்பரது மரபின் வரலாறு தெரியவில்லை.

கம்பர் வேளாளர் பெருமையை விளக்க 'ஏரெழுபது' என்னுமொரு சிறு நூலும் செய்திருக்கிறார். இராமாயணம் ஒன்றே தமிழ் மொழிக்கு உயிருள்ள அளவும் இவரை நினைவூட்ட வல்லதாம்.

## 2. கோபால கிருஷ்ண கோகலே

இந்தியா தேசத்தின் பொது நலத்துக்காக உழைத்துப் புகழ் படைத்த உத்தமரில் கோபால கிருஷ்ண கோகலே ஒருவராவர். அவர் பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த கோலாப் பூரில், கி. பி. 1866-ஆம் ஆண்டில், ஓர் எளிய மராட்டியப் பிராமண குலத்தில் பிறந்தார்; இளம்பருவத்தைத் தம் ஊரிலேயே கழித்து, உயர்தரக் கல்வி பெறக்கருதிப் பம்பாய் நகரம் அடைந்தார். அங்கு எல்பின்ஸ்டன் கல்லூரியிலே மாணவராய்ச் சேர்ந்து, கல்வி பயின்று, தமது பதினெட் டாம் வயதிலே பி. ஏ. பட்டம் பெற்றார்.

பிறகு அவர் தக்ஷிணக் கல்விச் சங்கம் என்ற புதிய சங் கத்திலே அங்கத்தினராய்ச் சேர்ந்து, குறைந்த சம்பளத் துக்கு இருபது வருஷம் உபாத்தியாயராய் உத்தியோகம் வகித்து, கல்வி அபிவிருத்திக்குத் தம்மால் இயன்றன புரிந் தார். அவர் அச்சங்கத்தைச் சேர்ந்த பெர்குஸன் கலாசாலை யில் முதலிலே சரித்திரம், கணிதம், பொருள் நூல் முதலிய பாடங்களைக் கற்பிக்கும் ஆசிரியராயிருந்து, பிறகு தலைமை ஆசிரியர் ஆனார். அவர் ஆசிரியராய் இருந்த காலத்தில் மாணாக்கர்களைத் தம் அன்பினாலும் சொல் வன்மையினாலும் வசப்படுத்தி, நல்வழியில் நடந்து கல்வி பயின்றுவரச் செய் தார். கலாசாலையில் ஆசிரியராய் இருந்த காலம் எல்லாம் அவர் வேறு பொது ஜன சேவையில் அதிகமாய் ஈடுபடவில்லை.

அக்காலத்திலே பம்பாயில் ஹைகோர்ட்டு ஜட்ஜாய் இருந்த மகாதேவ கோவிந்த ரானடே என்றவர், பொருள் நூல் ஆராய்ச்சியிலும், மஹாராஷ்டிர சரித்திர ஞானத்தி லும், ஆசாரச் சீர்திருத்த முயற்சியிலும் மிகவும் பெருமை படைத்தவராயிருந்தார். அவரிடம் நெருங்கிப் பழகும் பாக்

கியம் கோகலேக்குக் கிடைத்தது. அதன் பயனுக அவர் ராஜாங்க வரவு செலவுத் திட்டங்களை ஆராய்ந்து முடிவுகட்டி வாதம் செய்யும் புத்திமான்களிற் சிறந்தவராய் விளங்கினுர்.

அப்பால் அவர் பம்பாய் மாகாண மஹாஜன சபையிலே அங்கத்தினராய்ச் சேர்ந்து, நன்கு உழைத்து, நான்கு வருஷ காலம் அதன் காரியதரிசியராய் இருந்தார். அக்காலத்திலே, இந்தியாவின் வரவு செலவுத்திட்டத்தைப்பற்றி இங்கிலாந்தில் இந்திய ஜனங்களின் சார்பாகச் சாட்சியம் கூறச் சென்றவர்களில் கோகலேயும் ஒருவராவர்.

பிறகு அவர் பம்பாய்ச் சட்டசபை அங்கத்தினர் பதவி வகித்தார்; இதற்குள் ஆசிரிய பதவியினின்று விலகிக்கொண்டார். சில வருஷங்களுக்குள் இந்திய சட்ட சபையிலும் சேர்ந்து உழைக்கத் தொடங்கினுர். இந்திய சட்டசபையிலே அவர் செய்திருக்கும் அருஞ்செயல்கள் இன்றும் பாராட்டப் படுகின்றன. அவற்றுள் ஒன்று, நம் நாடெங்கும் இலவச ஆரம்பக் கல்வி கட்டாயமாகப் பரவவேண்டும் என்று அவர் முயன்றதாகும்.

பொதுவாக அவர் இந்தியாவிலும் இங்கிலாந்திலும் பல சந்தர்ப்பங்களிலே செய்த பிரசங்கங்களை அறிஞர் அனைவரும் இன்றும் போற்றுகின்றனர். அந்நாளில் சிறந்த மதியூகியென்று உலகத்தாரால் பாராட்டப்பட்டவரான கர்ஸன் பிரபுவே, ஒரு சமயம் கோகலேயின் வாதிக்கும் சக்தியை மிகவும் பாராட்டிப் புகழ்ந்திருக்கின்றுர். அவரே ஸி. ஐ. இ. (C. I. E.) என்ற பட்டத்தைக் கோகலேக்குச் சூட்டினுர். கோகலே தாம் எப்பொழுதும் சாமானியராய் இருக்கவே விரும்புவதாகக் கூறி, தமக்கு வந்த பெரும்பதவிகளையும் பட்டங்களையும் ஏற்றுக்கொள்ளவேயில்லை. ‘மிண்டோ மார்லி

சீர்திருத்தம்' என்னும் பெயரால் வழங்கிய அரசியல் அமைப்புக்குக் கோகலேயின் உழைப்பே காரணமென்று உண்மை உணர்ந்தோர் கூறுவர். கோகலே அரசியல் விஷயங்களில் மிதவாதியாகவேயிருந்து, காங்கிரஸ் மகா சபையிற் சேர்ந்து உழைத்தார்.

மேற்சொல்லிய பல வகைப்பட்ட பணிகளைக்காட்டிலும் சிறந்தது என்று கூறத்தக்கதாய் அப்பெரியார் செய்தது ஒன்று உண்டு. அஃது இந்திய ஊழியர் சங்கம் என்னும் சங்கத்தை ஸ்தாபித்ததேயாகும். இந்தச் சங்கம், இந்திய ஜனங்கள் பல வகையிலும் முன்னேற்றமடைவதற்காக உழைப்பதற்கே கங்கணம் கட்டிக்கொண்ட சிலரை அங்கத்தினராக உடையது. இதில் அங்கத்தினராகச் சேர்வது சுலபமான காரியமன்று. மிக்க கல்விப்பயிற்சியும், அநுபவமும், தேச சேவகத்தில் ஊக்கமும் உடைய நல்லோர்களே இதில் அங்கத்தினராகச் சேர இயலும். எவ்வளவு திறமை படைத்தவரா யிருப்பினும், தமக்கென்று பொருள் தேடும் ஆசையுடையாரை இச்சங்கம் சேர்த்துக்கொள்ளாது. அங்கத்தினர்க்குச் சொற்பமான ஊதியம் கொடுத்து, இந்தியா முழுவதிலும் பல துறைகளிலும் பொது நலத்துக்கு உழைக்கும்படி தூண்டுவதே இச்சங்கத்தின் நோக்கமும் காரியமுமாகும்.

ஆசாரச் சீர்திருத்தத்திலும் கோகலே முன்னேற்றமான கொள்கைகள் உடையவராய் இருந்தனர். தென்னாப்பிரிக்காவில் வாழும் இந்தியரின்பொருட்டு, அவர் ஒரு முறை நேரில் அங்குச் சென்று, உண்மையை உணர்ந்து செய்த நன்மைகள், உலகம் அறிந்து பாராட்டப்படுவனவாம். இவ்வாறு பல துறைகளிலும் பரோபகாரியாய் இருந்த அப்பெரியார், நாடெல்லாம் இரங்க, 1917ல் விண்ணுலகமெய்தினர்.

### 3. ஆறுமுக நாவலர்

திருக்கேதீச்சுரம், திரிகோண மலை என்னும் சைவத் திருப்பதிகளையும், கதிர்காமம் என்னும் முருகர் திருப்பதியையும் தன்னிடத்தே கொண்டு விளங்குவது யாழ்ப்பாணம் என்னும் இலங்கையின் வடபாகமாகும். இவ்யாழ்ப்பாணத்திலுள்ள நல்லூரிலே கார் காத்த வேளாளர் மரபிலே, கந்தர் என்ற திருநாமமுடைய உத்தமர் ஒருவர் இருந்தார். அவருடைய மனைவியார் பெயர் சிவகாமியம்மையார் என்பது. கந்தர் தம் முன்னோர்களைப்போல மருத்துவத்தில் மட்டுமன்றி, தமிழ்ப் பயிற்சியிலும் சிறந்து விளங்கினர். அவருக்கு ஐந்து ஆண் மக்களும் மூன்று பெண் மக்களும் பிறந்தார்கள். அம்மக்களுள் கடைசி மகவாகச் சாலிவாகன சகாத்தம் 1745-ஆம் ஆண்டுக்குச் சரியான சித்திரபானு ஆண்டு, மார்கழித் திங்கள், ஐந்தாம் நாள், சைவமும் தமிழும் தழைக்கத் தோன்றிய பெரியாராகிய ஆறுமுக நாவலர் பிறந்தார்.

அக்காலத்தில் நல்லூரில் சுப்பிரமணிய பிள்ளை என்பவர் ஒரு சிறிய தமிழ்ப் பள்ளிக்கூடம் வைத்திருந்தார். ஆறுமுக நாவலர் ஐந்து வயதடைந்ததும், அவர் பெற்றோர் அவரை அப்பாடசாலையில் சேர்த்தனர். அந்த இளம்பருவத்திலேயே நாவலர் மூதுரை, நிகண்டு முதலியவைகளை நன்கு பயின்றனர். நாவலர் ஒன்பதாண்டுச் சிறுவராய் இருந்த போதே அவருடைய அருமைத் தந்தையார் விண்ணுலகெய்தினர்.

தந்தையார் இறந்த பின்னர் நாவலர் தமையன்மார் அவரை அன்போடு ஆதரித்து வந்தனர். நாவலர் மிகுந்த நுண்ணறிவுடையவர். அவரது நுண்ணறிவையும் கல்வித் திறமையையும் கண்ட தமையன்மார், அவரைப் பீற்றர் பார்

ஸிவல் என்னும் பாதிரியாரது ஆங்கிலப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பினர். அப்போது அவருக்கு வயது பன்னிரண்டு. நாவலர் மிகு விரைவில் ஆங்கில மொழியிலும் ஆன்ற புலமை அடைந்தனர்.

நாவலருக்கு ஆங்கிலத்திலும் தமிழிலும் நிரம்பியிருந்த பேரறிவைக் கண்ட பீற்றர் பார்ஸிவல் துரைமகனர், அவரைத் தமது பள்ளிக்கூடத்திலேயே கீழ் வகுப்புக்கட்கு ஆங்கிலமும் உயர் வகுப்புக்கட்குத் தமிழும் கற்பிக்கும் ஆசிரியராக அமர்த்தினர். அவ்வாசிரியத் தொண்டை நாவலர் மிகவும் செம்மையாய்ச் செய்து நற்பெயர் பெற்றனர். அப்பொழுது அவருக்கு வயது பத்தொன்பது.

அக்காலத்திலே விவிலிய நூலைத் (Bible) தமிழில் மொழி பெயர்க்கும் முயற்சி துவங்கப்பட்டது. பார்ஸிவல் பாதிரியார், ஆறுமுக நாவலரைத் தமக்குத் துணையாக வைத்துக்கொண்டு அதனை மொழி பெயர்க்க ஆரம்பித்தார். அறிஞர் சிலர் சென்னையிலும் அந்நூலை மொழிபெயர்த்து வருவாராயினர். இறுதியில், கிறிஸ்தவ சபையார் யாழ்ப்பாணத்து மொழி பெயர்ப்பே சிறந்ததென்று கண்டு, அதனையே வழக்கில் கொணர முடிவு கட்டினர். இதனால், ஆறுமுக நாவலர் பெருமை மேலும் வளர்வதாயிற்று.

ஆறுமுக நாவலர் கிறிஸ்தவ வேத நூலைத் தமிழில் மொழி பெயர்க்க உதவியாய் நின்றாலும், தமது சமயமாகிய சைவ சமயத்தில் இடையறாத பற்றுடையவராயிருந்தனர். அக்காலத்தில் கிறிஸ்தவப் பாதிரிமார்கள் தங்கள் சமயத்தை நாளுக்கு நாள் பெருகச் செய்தலையும், அங்ஙனம் செய்து வரும் முயற்சியால் சைவ சமயம் குன்றிப் போதலையும் நாவலர் அறிந்து, தமது சமய வளர்ச்சிக்காக உழைக்க வேண்டுமெனத் திடமான முடிவு செய்துகொண்டார். அது முதல்

அவர் சிவஞான போதம், சிவஞான சித்தியார் முதலிய வேத சிவாகமங்களை நன்கு பயின்றனர். அப்பொழுதுதான் நாவலர் வடமொழி கற்கத் தொடங்கினர். ஆயினும், மிகு விரைவில் வடமொழியிலுள்ள ஆகமங்களைத் தெளிவுறக் கற்று, அவைகளில் உள்ள உண்மைகளை விரிவுரை வாயிலாக மக்களுக்கு எடுத்துக் கூறினர்.

நாவலர் அரிய பெரிய சைவ சமய உண்மைகளைத் தமக்கு இயல்பாய் அமைந்த இன்குரலோடு பிரசங்கித்து, மக்களில் பலரைத் தம்மால் இழுப்பாராயினர். இதனால், யாழ்ப்பாணத்தில் சைவசமயம் நன்கு பரவத்தொடங்கியது. கிறிஸ்தவ மதத்தில் சேர இருந்த பல பெருமக்கள், நாவலர் கூறிய உண்மைகளைக் கேட்டு மனம் திருந்தி, சைவ சமயத்திலேயே பற்றுக் கொள்ளலானுர்கள்.

சைவ சமயத்தைப் பரவச் செய்வதில் நாவலருக்கிருந்த ஆர்வத்தைவிடத் தமிழ் மொழியை வளம்படச் செய்வதிலிருந்த ஆர்வம் எந்த வகையிலும் குறைந்ததன்று. பற்பல இடங்களில் கலாசாலைகள் ஏற்படுத்திச் சம்பளம் இல்லாமல் சிறுவர்களுக்குக் கல்வி கற்பிக்க நாவலர் பெருமுயற்சி செய்தார். அவரது பெருநோக்கத்தின் பெருமையை அறிந்த பலர், அவருக்கு உதவி செய்ய முன் வந்தனர். யாழ்ப்பாணத்தில் வண்ணூர் பண்ணை என்னுமிடத்தில், 'சைவப் பிரகாச வித்தியா சாலை' என்னும் பெயரோடு முதலில் நாவலர் ஒரு கலாசாலை ஏற்படுத்தினுர்; தாம் பாதிரியாரிடம் பார்த்துவந்த உத்தியோகத்தை அப்பொழுது விட்டு நீங்கினுர். நாவலருக்கு அப்பொழுது வயது இருபத்தாறு.

நாவலர் தமது நாற்பத்திரண்டாம் வயதில் சிதம்பரத்தில் ஒரு வித்தியாசாலை தாபித்தார்; சில ஆண்டுகள் சென்று

கோப்பாய் என்னுமிடத்தில் ஒரு கலாசாலை ஏற்படுத்தினார். அவருடைய முயற்சியாலும் தூண்டுதலாலும் யாழ்ப்பாணத் திலே கொழும்புத்துறை, கந்தமடம், பருத்தித்துறை, மாத கல் முதலிய பற்பல இடங்களில் பல பாடசாலைகள் தோன்ற லாயின. மக்களுக்கு அறிவுக் கண்ணை விளங்கச் செய்ய நாவலர் எடுத்துக்கொண்ட உழைப்பின் பெருமையை என் னென்போம்!

கல்வியைப் பரவச் செய்தற்கு அரிய நூல்கள் அழகு பெறப் பிழையற அச்சிட்டு வெளிப்படுத்தலும் சிறந்ததொரு வழியாம் என்பதை நாவலர் அறிந்தார். தமது பெருமுயற்சி யால் வண்ணார் பண்ணையில் 'வித்தியாநுபாலன யந்திர சாலை' என்னும் பெயரோடு ஓர் அச்சுக்கூடம் அமைத்து, நாவலர், தாமெழுதிய பாலபாடம் திருமுருகாற்றுப்படையுரை முதலிய நூல்களை வெளியிட்டார். நூல்வெளியிடும் தமது முயற்சிக்குச் சென்னையே தகுந்த இடம் என்று எண்ணி, நாவலர் சிறிது காலத்தில் தாம் முதலில் ஏற்படுத்திய அச்சுக்கூடத்தை விற்றுவிட்டு, சென்னைக்கு வந்து, ஓர் அச்சுக்கூடம் முன்ன தின் பெயராலேயே அமைத்துத் தமது தொண்டைத் தொடங்கினார்.

நாவலர் நூல்களைப் பிழையின்றியும், அழகு பெறவும் அச்சிட்டு வந்தார். அவரது பதிப்பாசிரியத் திறமையை அறிந்த பெருஞ்செல்வரான இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவரவர்கள் அவரைக்கொண்டு திருக்குறள் மூலம் பரிமே லழகர் உரையுடன், திருக்கோவையாருரை முதலிய சிறந்த நூல்களை நாவலர் அச்சுக்கூடத்தில் பதிப்பித்தார். திருவாச கம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம், திரு விளையாடற் புராணம், கந்த புராணம் முதலிய பல சிறந்த நூல்கள் நாவலரால் நன்கு பரிசோதித்து வெளிப்படுத்தப்

பட்டன. பல நூல்களுக்கு நாவலர் சிறந்த உரையும் எழுதியிருக்கின்றார். நாவலர் எழுதிய சிறந்த வசன நூல்கள் இலக்கணப் பிழையின்றிச் செவ்விய நடையோடு தமிழ் எழுதப் பயிலும் மாணவர்கட்குப் பெரிதும் பயன்படுவனவாகும்.

நாவலர் தமிழ், ஆங்கிலம், வடமொழி முதலிவற்றில் நிறைந்த கல்வி அறிவும், சிறந்த சொல் வன்மையும், அரிய தமிழ் நடை எழுதும் ஆற்றலும் பெற்றிருந்ததோடு சிறந்த குணங்கள் பலவும் உறைதற்கோர் இடமாய் விளங்கினார். தன்னயம் நீங்கி எம்முயற்சியும் செய்யும் இயல்பும், பிறரிடம் பிழை கண்டவிடத்து அதனை அஞ்சாது எடுத்துக் காட்டும் வீரமும், சைவ சமயத்திலும் சிவபெருமானிடத்துப் நீக்கமற்ற பற்றுதலும், எடுத்த காரியத்தைத் தொடுத்து முடிக்கத் தகுந்த பேருழைப்பும், விழுமிய ஒழுக்கமும் நாவலரிடம் குடிகொண்டிருந்தன.

நாவலர் தம் வாழ்நாள் முழுவதிலும் பிரமசாரியாய் இருந்து தம் தொண்டுகளைச் செய்து வந்தார். மடாதிபதிகளும், பெரும்புலவர்களும், ஆங்கில அறிஞர்களும் நாவலரிடம் பெருமதிப்புக் கொண்டிருந்தார்கள். இங்ஙனம் சுயநலமற்ற தூய வாழ்க்கை நடாத்தித் தமிழ் மொழிக்கும் சைவ சமயத்திற்கும் பெருந்தொண்டுகள் செய்த நாவலர், தமது ஐம்பத்தேழாவது ஆண்டில், இறைவன் திருவடி நீழலடைந்தார். நாவலரின் பூதவுடல் அழிந்தாலும், இத்தமிழுலகம் உள்ள வரையில் அவரது புகழுடல் அழியாதன்றோ!

---

# III. சுய சரிதை

# (Auto-Biography)

## 1. சுந்தரத்தின் சுய சரிதை

என் சரித்திரம் விசேஷ அபூர்வ சம்பவம் ஏதும் உடையதன்று. ஆயினும், அதை மற்றவர்களுக்குச் சொல்ல வேண்டும் என்னும் விருப்பம் எனக்கு மிகவும் உண்டு. என் பெயர் சுந்தரம். பெயருக்கேற்ப நான் அழகன் என்பதே என் எண்ணம். என்னைப்பற்றி மற்றவர்கள் என்ன எண்ணு கிறார்கள் என்பது எனக்குத் தெரிய வழியில்லை.

நான் ஒரு சிறு கிராமத்திலே வாழ்ந்த வைதீகப் பிரா மணர் ஒருவருடைய குமாரன். என் தகப்பனுருக்கு என்னைத் தவிர ஐந்து பெண் குழந்தைகள் உண்டு. பெண்களைக் கலி யாணம் பண்ணிக்கொடுப்பதற்கே அவர் பணத்தையெல்லாம் செலவிட்டார். பூர்வீக ஆஸ்தி அதிகம் இல்லாததாலே, விரை வில் நாங்கள் ஏழைகளாய்ப் போனோம். நான் என் தகப்ப னுருக்குக் கடைசிப்பிள்ளையாய் இருந்தும், என் படிப்பு விஷயத்தில் தக்க கவனம் கொள்ள அவரால் இயலவில்லை.

நான் ஏகபுத்திரனேயாயினும், வறிய குடியிற் பிறந்தே னைகையால், என்னை எவரும் நிமிர்ந்துகூடப் பார்ப்பதில்லை. வயிற்றுச் சோற்றுக்கும் அல்லற்பட வேண்டிய நிலைமையில் நான் இளம்பருவத்திலே வாழ்ந்தேன். என் தகப்பனுர் உஞ்சவிருத்திக்குப் போய், ஏதாவது அரிசி கொண்டு வரு வார். நான் எங்களூர் வேத பாடசாலையிற் படித்து வந்தேன். என் சாப்பாட்டைப் பற்றி எங்கள் வீட்டில் உள்ளவர்களுக் குக் கவலையில்லை. பாடசாலையிலேயே நான் சாப்பிட்டுக் கொண்டு வந்தேன். நான் என் வயதுள்ள அநேகம் பிள்ளை கள் சட்டையும் குல்லாவும் அணிந்து பள்ளிக்கூடங்களுக்குப்

போய் இங்கிலீஷ் படித்து வரும் காட்சியைக் காண்பேன். 'நமக்கு இந்த மாதிரி படிக்கும் பாக்கியம் கிடைக்கவில்லையே!' என்று எண்ணியெண்ணிக் கண்ணீர் விடுவேன்; விளையாட்டுத் தோழர்களாய்ப் பழகிய சில சிறு பிள்ளைகளிடம் நெருங்கி அன்போடு பழகி அவர்கள் புஸ்தகங்களை வாங்கிப் பார்த்து, மற்றவர்கள் கண்ணிற்படாது மறைவான இடங்களில் உட்கார்ந்துகொண்டு மணலிலும் கோயிற் சுவர்களிலும் எழுதிப் பழகுவேன். அத்தியயன பாடமும் கிரமமாக நடந்து வந்தது. நான் சில மாதங்களுக்குள்ளே இங்கிலீஷ் எழுதவும் பழகிக்கொண்டேன்.

எங்களூரில் ஒரு கிழவர் இருந்தார். அவர் பதினைந்து வருஷங்களுக்கு முன்பு பக்கத்தூரில் உபாத்தியாயராய் இருந்தவர். இப்பொழுது தமக்கிருந்த நிலத்தின் வருவாயைக்கொண்டு அவர் அமைதியாய் வாழ்ந்துவந்தார். ஒருநாள் நான் அவரிடம் போய் என் எண்ணத்தைத் தெரிவித்தேன். அவர் எனக்கு இங்கிலீஷ் கற்றுக்கொடுப்பதாகச் சொல்லிச் சில புஸ்தகங்களையும் வாங்கிக் கொடுத்தார். ஒரு வருஷ காலம் பாடசாலைக்கு வேளை தவறாமல் போய்க்கொண்டு, அவரிடமும் ஆங்கிலம் படித்து வந்தேன். பிறகு எனக்கு வேத பாடசாலைக்குப் போக மனம் வரவில்லை. அவரிடம் இருந்துகொண்டு படித்தேன். அவர் வீட்டிலேயே எனக்குச் சாப்பாடு நடந்தது.

என் தகப்பனாருக்கு நான் இவ்வாறு இருப்பது சில நாள் வரையில் தெரியாமல் இருந்தது. பிறகு ஒரு நாள் அவர் என் நிலைமையை அறிந்து மிகவும் கோபித்துக்கொண்டார். நான் என் மனக் கருத்தை உள்ளபடியே வெளியிட்டேன். அவர் கோபம் தணியாமல், "நீ வேத பாடசாலையிற் படிக்காவிட்டால், இவ்வூரிலேயே இருக்கக் கூடாது. எங்கா

வது தொலைந்து போ," என்றார். நான் மிகவும் சங்கடப் பட்டு, என் கஷ்டத்தை என் இங்கிலீஷ் உபாத்தியாயரிடம் சொன்னேன்.

அவர் உடனே என்னிடம் ஒரு கடிதம் எழுதிக் கொடுத்து, அருகிலிருக்கும் ஒரு நகரத்துக்கு என்னை அனுப்பினார். நான் அக்கடிதத்தை அதற்கு உரியவராகிய விசுவநாத அய்யர் என்னும் பிரபு ஒருவரிடம் கொண்டுபோய்க் கொடுத்தேன். அவர் அதைப் பார்த்து, என்னிடம் மிக்க முக மலர்ச்சியோடு பேசினார் ; மறு நாளே என்னை அவ்வூர்ப் பெரிய இங்கிலீஷ் பள்ளிக்கூடத்திலே ஏழாம் வகுப்பிலே சேர்த்தார். இரண்டு வருடங்களுக்குள்ளே ஏழு வருஷப் படிப்பையும் படித்துவிட்டேன் என்பதை அறிய எனக்கே ஆச்சரியமாய் இருந்தது. பிறகு அவர், சில பிரபுக்களிடம் சொல்லி என் ஆகார சௌகரியங்களையும், புஸ்தக முதலிய விஷயங்களையும் பற்றி நான் கவலைப்படாமல் இருக்கத்தக்க ஏற்பாடுகளையும் செய்தார். என் தகப்பனார் என்னைக் கூப்பிடக்கூடாது என்று மிகவும் உறுதியாய் இருந்தார். ஆகையால், நானும் அவரைப் போய்ப் பார்த்து மன்னிப்புக் கேட்டுக்கொள்ளவில்லை.

எனக்கு எப்படியாவது இங்கிலீஷ் படிப்புப் படித்து உத்தியோகம் பெற வேண்டுமென்ற ஆசை இருந்ததால், நான் சில வருஷங்களுக்குள்ளே தர்மப் பிரபுக்கள் பலர் உதவியாலும், என் குணத்தைக் கண்டு வித்தியார்த்திகள் ஊட்டிய உற்சாகத்தாலும், பி. ஏ. பரீக்ஷைக்குப் படித்து, இந்த ராஜதானியில் முதல்வனாய்த் தேறினேன் ; இங்கிலீஷ் பாஷையைத் தங்கள் சொந்த பாஷையாகக் கொண்ட வெள்ளைக்காரரை அவர் தம் தேசத்திலே போய்ப் பார்த்து, அங்கு அவரோடு பழகி வரவேண்டும் என்ற ஆசை எனக்கு நெடுநாளாய் இருந்தது. ராஜாங்கத்தார் என்னைச் சில உயர்

வான பரீக்ஷைகளின்பொருட்டு இங்கிலாந்துக்கு அனுப்பத் தீர்மானித்தனர். என் தகப்பனார் நான் கப்பலேறிப்போகச் சம்மதிக்கமாட்டார் என்று யான் அறிவேனாகையாலும், என் நிலைமையைப்பற்றி இதுவரை அவர் ஒன்றும் கவனிக்காமலே இருந்துவிட்டபடியாலும், நானே மனத்தைத் திடம் செய்து கொண்டு, புறப்படத் துணிந்தேன்.

என் எண்ணம் சிரமமின்றியே நிறைவேறியது. ஐந்து வருஷ காலம் நான் இங்கிலாந்தி லிருந்தேன்; 'இந்தியன் ஸிவில் ஸர்விஸ்' பரீக்ஷையில் தேறினேன்; அங்கிருந்த வரையில் திரிகரண சுத்தியாகவே நடந்து வந்தேன்; ஆகார நியமங்களிலும் அதிக சாக்கிரதையாகவே இருந்தேன். அவ்வாறு நடந்துகொள்வது சிரமமாகவே இருந்தது. 'வைதீகர் பிள்ளை இந்தக் கதிக்கு வந்துவிட்டானே!' என்று வாசகர் நகைப்பர். 'இவன் இங்கிலீஷ் பாஷையை நன்றாக உச்சரித்துப் பேசும் இந்தியன்!' என்னும் பெயர் வாங்க வேண்டும் என்பதே எனக்குப் பெரிய ஆவலாய் இருந்தது. அது நிறைவேறியதும் நான் நம் நாடு நோக்கித் திரும்பினேன்.

சில நாள்வரை நான் உத்தியோக முறைகளில் பழகினேன். எங்கள் ஜில்லாவிலேயே ஒரு பகுதிக்கு என்னைச் சப் கலெக்டராக நியமித்தார்கள். வேலையை ஒப்புக்கொண்டு சில மாதங்களான பிறகு ஒரு வழக்கு என்னிடம் விசாரணைக்கு வந்தது. எங்கள் கிராமத்தின் கோயிலுக்குள்ளே இதற்கு முன் போகும் வழக்கம் இல்லாத சில ஜாதியார் நுழைய முயன்றதாகவும், அதனால் பெருங்கலகம் நேரிட்டதாகவும் அந்த வழக்கால் அறிந்தேன். அவ்வழக்கில் சம்பந்தப்பட்ட உயர்ந்த ஜாதியைச் சேர்ந்த ஜனங்களில் என் தகப்பனாரும் ஒருவராய் இருந்தார். விசாரணை முடிந்து தீர்ப்புக் கூறும் வரையில் நான் இன்னான் என்று தெரிவித்

துக்கொள்ளாமலே இருந்தேன்; புது வழக்கத்தைப் பலர் சம்மதமில்லாது ஆரம்பிப்பது தவறாகையால், அவ்வழக்கிலே என் தகப்பனார் முதலியோர் குற்றவாளிகளாய் நின்றாலும், தண்டிக்கத் தகுதியற்றவராவர் என்று தீர்மானித்து, அதற்குத் தக்க முடிவு கூறினேன்; தீர்ப்புக் கூறிய பிறகு ஒரு சேவகனை அனுப்பி அவரை என் அறைக்கு அழைத்துவரச் சொன்னேன்; அங்கே அவர் முன்னிலையில் நமஸ்காரம் செய்து, என் சரித்திரத்தைக் கூறி, என்னை முன்போலத் தம் புத்திரனாக அங்கீகரிக்குமாறு கேட்டுக்கொண்டேன். அன்றே என் தாயாரையும் வந்து பார்ப்பதாகச் சொன்னேன். எவ்வளவுதான் கடின சித்தமுடையவராயிருந்தாலும், என் தகப்பனார் நான் ஏக புத்திரன் என்பதை நினைத்து, என்னை அங்கீகரித்துக்கொண்டார்.

அன்று மாலையில் நான் என் கிராமத்துக்குப் போனேன்; என் தாயாரை வீட்டு வாயிலிற் கண்டேன். அவர் என் புதிய வேஷங்களைக் கண்டு என்னை இன்னானென்று அறியாமல் திகைத்து, பின் தம் இயற்கைக் குணத்தால் அறிந்து, "அப்பா சுந்தரம், வாடா! எங்கேயடா போயிருந்தாய் இத்தனை வருஷங்களாக?" என்று அன்போடு கேட்டார். நான் என் கதை முழுவதையும் சொல்லி, அப்பொழுது நான் இருந்த நிலைமையையும் இனி எனக்கு வரப்போகும் நிலைமையையும் கூறினேன். என் தாயார் என்னை வீட்டுக்குள் அழைத்துச் சென்று, வெகு நேரம் தாம் பட்ட கஷ்டங்களை எல்லாம் சொல்லித் தீர்த்தார். நான் இன்னும் கலியாணம் செய்துகொள்ளவில்லை என்பதைத் தெரிவித்தேன். அதைக் கேட்டுப் பெற்றோர் இருவரும் மகிழ்ந்தனர்.

அந்தச் சமயத்திலே எனது படிப்பு விஷயத்தில் முதல் முதல் உதவி செய்த கிழவர் அங்கு வந்து சேர்ந்தார். அவர்

கண் குளிர என்னைப் பார்த்துச் சந்தோஷித்துத் தம் மன மார்ந்த ஆசீர்வாதம் கூறினர். ஒரு தினம் அங்கிருந்துவிட்டு நான் என் இருப்பிடத்துக்கு வந்து சேர்ந்தேன்.

அந்நகரத்திலேதான் நான் இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் புகுந்து படிக்கத்தொடங்கினேன். முதலில் நான் படிப்பதற்கு உதவி செய்த விசுவநாத அய்யர் இன்னும் அங்கு இருந்தார். அவர் பெண்ணொருத்தி சென்னைப் பட்டினத்தில் பி. ஏ., பரீக்ஷைக்குப் படித்துக்கொண்டிருந்தாள். ஒரு நாள் அவர் என்னிடம் வந்து தம்பெண்ணை எனக்கு விவாகம் செய்துகொடுப்பதாகக் கூறினர். நான் அவருக்கு மிகவும் கடமைப்பட்டவனுகையால், உடனே அதற்கு இணங்கினேன்.

கலியாண ஏற்பாடுகள் நடந்தன. அதற்குள் அப்பெண்ணும் பி. ஏ. பரீக்ஷையில் தேறிவிட்டாள். என் தகப்பனர் சந்தோஷத்தோடு வந்திருந்து தாம் தம் வாழ்நாளெல்லாம் கண்டிராத இப்புதுமையான கலியாணத்தைப் பார்த்து, எங்களை ஆசீர்வதித்தனர்.

நாங்கள் எங்களுக்கென அமைந்த பெரிய மாளிகையில் வாழ்ந்து வருகிறோம். என் பெற்றோர் கிராமத்தை விட்டு விட்டு இங்கேயே வந்துவிட்டனர். வெகு சீக்கிரத்திலே எனக்கு ஜில்லாக் கலெக்டர் உத்தியோகம் கிடைத்தது. இப்போது என் பெற்றோர் என்னிடமே இருந்து வருகின்றனர். பல ஜில்லாக்களுக்கும் சென்று உத்தியோகம் வகிக்கும் நிலைமை எனக்கு ஏற்பட்டது. இந்த நிலைமை பல விதத்தில் எனக்கு நன்மை பயப்பதாயிற்று. எங்ஙனமெனில், பற்பல ஜில்லாக்களைக் காணும் பாக்கியமும், பற்பல பாஷைகளை அறிந்துகொள்ளும் பாக்கியமும் எனக்குக் கிடைத்தன. பற்பல விதமான குணங்கள் வாய்ந்த மனிதருடைய பழக்கமும்

ஏற்பட்டதால், நான் உலக அனுபவமும் சிறிது அடைந்தே னென்று சொல்லலாம். இதன் பயனாக மனித சமூகத்துக்கு என்னாலியன்ற பணி ஏதேனும் செய்ய வேண்டுமென்னும் அவா என் மனத்தில் எழலாயிற்று. பெருங்காரியங்களைச் சாதிக்கும் சக்தி எனக்கில்லாவிடினும், 'என் கடன் பணி செய்து கிடப்பதே" என்னும் கருத்துக்கொண்டு என்னா லியன்றன செய்து வருகிறேன்.

## 2. ஒரு கிழக் குதிரையின் சொந்தக் கதை

இப்பொழுது நான் ஒரு கிழக் குதிரை. என் உடம்பெல் லாம் மயிர் வளர்ந்து, என் அழகெல்லாம் போய், நான் அவ லக்ஷணமாய் இருக்கிறேன். ஆயினும், என் சரித்திரத்தை அறிந்தால், நீங்கள் என்மேல் வெறுப்படைய மாட்டீர்கள். என் சரித்திரம் விசித்திரமானது.

என் முன்னோர் அநேக நூற்றாண்டுகளாக வாழ்ந்த இடம் அரேபியா. நானும் அங்கேதான் பிறந்தேன். என் தாய் நல்ல பருவத்தில் கப்பற் பிரயாணம் செய்து, இந்தத் தேசத்துக்கு வந்தாள். நானும் அவள் கூடவே வந்தேன். குட்டியாய் இருக்கும்போது நான் மிகவும் அழகாய் இருந் தேன். என் அழகைக் கண்டு மகிழ்ந்த ஒரு பெரிய ராஜா என்னையும் என் தாயையும் விலை கொடுத்து வாங்கினார்.

அந்த ராஜாவுக்கு ஒரே குமாரன் இருந்தான். அவன் விளையாட்டில் மிகவும் பிரியம் உள்ளவன். அவன் தினந் தோறும் என்னைக் கட்டி வைத்திருக்கும் இடத்துக்கு வந்து, தன் தோழர் சிலரோடு என்னைத் துள்ளிக் குதிக்க விட்டு விளையாடுவான். எனக்குத் தேக திடம் உண்டாகி என்னை வெளியிலே நடமாட விடலாம் என்ற நிலைமை ஏற்பட்ட

வுடன், அந்த ராஜ குமாரன் எனக்குத் தக்கபடி அழகான சிறியதொரு சேணம் செய்து வைத்துக்கொண்டு, ஒரு நல்ல நாளில் எனக்கு அலங்காரங்கள் செய்து, என் முதுகில் சேணம் அமைத்துச் சந்தோஷமாய் என்மீது ஏறிச் சவாரி செய்யலானன். நானும் அவனைச் சுமந்துகொண்டு அரண் மனை முற்றத்தில் சுற்றிச் சுற்றி ஓடி வந்து, ராஜாவின் சமீ பத்தில் வந்ததும் தலையை ஆட்டிக்கொண்டு நின்றேன். ராஜா என்னைப் பார்த்து, மிகவும் சந்தோஷப்பட்டு, என் திறமையை மெச்சித் தட்டிக்கொடுத்தார்.

பிறகு சில தினங்களில் அரச குமாரன் வேறு சில துணைவர்களோடு மாலைக்காலங்களில் என்மேல் அமர்ந்து நகர் வலம் வந்தான். அப்பொழுது எனக்குச் செய்திருந்த அலங்காரங்கள் மிகவும் மேன்மையானவையாய் இருந்தன. எனக்கும் அப்படி வெளிப்புறப்பட மிகவும் உற்சாகமாகத் தான் இருந்தது. இப்படிச் சில மாதங்கள் சென்றன.

எனக்கு உடம்பு நன்கு பெருத்துக் கால்கள் உறுதி யாய் அமையத் தொடங்கின. என்னைப் பார்த்தவர் எல்லாம், 'அந்தக் குட்டி இப்படியும் ஆய்விட்டதோ!' என்று ஆச்சரி யப்படுவர். இரண்டு வருஷம் ஆவதற்குள் அரச குமாரன் என்மேல் தைரியமாய் ஏறி உட்காரக்கூடாத அவ்வளவு முரட்டுக் குதிரை ஆய்விட்டேன். என்னை வாங்கிய ராஜா இனிமேல் என்னைப் பட்டாளத்தில் பழக்கவேண்டும் என்று தீர்மானித்து, என் கூட்டத்தார் சிலர் இருந்த இடத்துக்கு என்னை அனுப்பினர். பட்டாளத்துக் குதிரைகளுக்குத் தெரிய வேண்டிய அபூர்வ வித்தைகளையெல்லாம் நான் வெகு சீக்கிரத்தில் கற்றுக்கொண்டேன். அங்கே எனக்கு எஜமான ளுக வந்தவன் ஒரு சிறந்த வீரன். அவன் எனக்குப் புதுப் புது வித்தைகள் எல்லாம் கற்றுக்கொடுத்தான். அவைகளை

எல்லாம் நினைத்துப் பார்த்தால், இப்பொழுது எனக்குத் தலை சுற்றுகிறது.

என் எஜமானன் சில சத்தங்களை மந்திரங்கள் போலப் பிரயோகிப்பான். அந்தச் சத்தங்களைக் கேட்டதும் அவற்றுக்குத் தக்கபடி நான் செய்வேன். சில மாதங்களுக்குள் பக்கவாட்டில் நாட்டியம் ஆடுவதற்கும், மேலே இரண்டு கால்களைத் தூக்கிக்கொண்டு நடப்பதற்கும், பத்துப் பதினைந்தடி உயரமுள்ள வேலிகளைத் தாண்டுவதற்கும், இருபது முதல் இருபத்தைந்தடி வரை அகலமுள்ள வாய்க்கால்களைத் தாண்டுவதற்கும் நான் பழகிக்கொண்டேன்; சொற்ப கனமுள்ள பொருள்களைப் பற்களாற் கடித்துச் சுமந்துகொண்டு ஓடவும் பழகினேன். இப்படி நான் பழகிய வித்தைகள் பலவாம். சேணமில்லாமலும் கடிவாளம் இல்லாமலும் என் எஜமானன் என்மீது பல விதமான வித்தைகள் செய்யப் பழகிக் கொண்டான்; பிறகு என்னை ஓட்டத்துக்குப் பழக்கினான். இரண்டு மூன்று பெரும்பந்தயங்களில் நானே முதன்மையாய் வந்து விசேஷ மரியாதைகள் பெற்றது எனக்கு நினைவில் இருக்கிறது. பட்டாளத்தில் வரிசையாய் வருகின்ற குதிரைகளில் நானே அதிக அழகுடையவன் என்ற பெயரும் வாங்கியிருக்கிறேன்.

இப்படி நான் வாழ்ந்து வருகையில், என் எஜமானன் ஒரு நாள் என்னை ஒரு பெரிய வாய்க்காலைத் தாண்டச்சொன்னான். நானும் நன்றாகவே பாய்ந்து குதித்தேன். குதித்த இடத்திலே ஒரு பெரிய பாறை இருந்தது. நான் சறுக்கி விழுந்தேன். என் எஜமானன் கீழே விழுந்து உருண்டான். என் கால்களில் ஒன்று ஒடிந்தது. நான் நொண்டியானேன். என் பெருமை குறையும் காலம் வந்தது. ராஜா தக்க வைத்தியர்களைக்கொண்டு எனக்குச் சிகிச்சை செய்து பார்த்தார்.

முன்போல் என்னால் நன்றாக நடக்க முடியவில்லை. சில மாதங்கள் பார்த்துவிட்டு, இனி நான் பிரயோஜனப்படமாட்டேன் என்று அவர்கள் எண்ணி, ஒரு வண்டிக்காரனிடம் என்னை விற்றுவிட்டார்கள்.

அவன் ஒரு பழைய வண்டியில் என்னைப் பூட்டி வாடகைக்கு ஓட்டிக்கொண்டிருந்தான். அவன் என்னை வாங்கின விலைக்குமேல் மூன்று பங்கு நான் அவனுக்குச் சம்பாதித்துக்கொடுத்தேன்; கடைசியாக இப்பொழுது இருக்கும் நிலைமைக்கு வந்து சேர்ந்தேன். இப்பொழுது எனக்குக் கொள்ளும் கிடையாது; புல்லும் கிடையாது. என் கண்ணும் மங்கிப் போயிற்று. என்னைத் தேய்ப்பவரும் இல்லை; தேடுவாரும் இல்லை. வழியிலே ஏதாவது புல் கிடைத்தால் கடித்துத் தின்று ஜீவனம் செய்து வருகிறேன்.

## IV. சிறு கதைகள்

## (Short Stories)

மற்றொரு வகைச் சிறு கதையைப்பற்றி முன்னே கூறப்பட்டது. ஒருவர் தாமாக ஒரு கருத்தை அமைத்துச் சிறிது பொழுது பிறர் மனத்தைக் கவரும் நிலையில் எழுதும் சிறு கதை இவ்வகையாம். இந்நாளில் ஆங்கில மொழியிலும், தமிழ் மொழியிலும், பிற மொழிகளிலும் இவ்வாறு பல சிறு கதைகள் வெளி வருகின்றன. இவற்றை எழுதும் முறை அவரவர் மனோ பாவத்துக்கும் கல்வியறிவுக்கும் உலக அறிவுக்கும் தக்கபடி வேறுபடும். கட்டுரை எழுதும் முறையில் இவ்வகைக் கதைகள் எழுதப் பயிலுவதும் ஒரு வகையாம். ஆகையால், இம்முறையைப்பற்றி இங்கு இரண்டு உதாரணங்கள் காணலாம்:

### 1. முயற்சியின் பயன்

புஷ்ப புரி என்பது ஒரு சிறிய நகரம். அந்நகரில் ஓர் உயர்தரக் கலாசாலை உண்டு. அதில் ஒரு தலைமை ஆசிரியரும் இருபது உதவி உபாத்தியாயரும் இருந்தனர். அங்கு ஒரு சமயம் பரிசு கொடுக்கும் விழாவொன்று நிகழ்ந்தது. அதில் அக்கிராசனம் வகிப்பதற்காக அவ்வூரில் நியாய வாதியாயிருந்து செல்வம் படைத்திருந்த ஒரு பெரியவர் அழைக்கப்பட்டார். ஊரார் எல்லோரும் பெருங்கூட்டமாய் வந்திருந்தனர். பரிசு கொடுக்கும் விழா, சிறப்பாக நடைபெற்றது.

தலைமை ஆசிரியர் நியாயவாதியின் நிலைமை மிகவும் மதிப்புடையது என்று எண்ணினார்; பிறர் அறியாமலே சட்டப் புத்தகங்களைப் படிக்க ஆரம்பித்தார்; தம் உத்தியோகத்திலிருந்து விலகிக்கொண்டு, சட்டக் கலாசாலைக்குப் படிக்கப் போனார்;

படித்துப் பரீக்ஷையில் முதல்வராய்த் தேறினர்; பின்பு புஷ்ப புரியிலேயே வந்து நியாய வாதம் செய்ய ஆரம்பித்தார்.

ஒரு வருஷம் ஆகியும் வருவாய் ஏதும் வரவில்லை. கட்சிக்காரர் எல்லாரும் அனுபவமிக்கவர்களையே நாடிப் போவதை அவர் பார்த்தார்; மனம் வருந்தினர்; 'வேறோர் ஊருக்குப் போயாவது பிழைக்கலாம்,' என்று புறப்பட்டார்; அங்கு இரண்டு மூன்று வருஷ காலம் இருந்தார்; வருவாய் இல்லை; கடன் அதிகம் ஆயிற்று. 'திரும்பவும் தலைமையாசிரியர் பதவி கிடைக்காதா!' என்று அவர் எண்ணினர். சென்ற சில வருஷங்களிலே கலாசாலைத் தொடர்பு நீங்கியதால், அவரை முன்போல ஆசிரியப் பதவியில் ஏற்றுக்கொள்ள யாரும் விரும்பவில்லை. நியாயவாதத் தொழிலும் இப்பொழுது அவர் மனத்துக்கு உவப்பாயில்லை.

அப்பால் அவர், 'கிராமப் புனருத்தாரணம் செய்யலாம்,' என்று எண்ணிச் சுற்றுப்புறங்களிலுள்ள கிராமங்களுக்குச் சென்று பிரசங்கம் செய்ய ஆரம்பித்தார். அவர் பிரசங்கத்தைக் கேட்க எவரும் வரவில்லை. எடுத்த முயற்சிகளெல்லாம் இவ்வாறு பயன்படாது போவது கண்டு, அவர் மனம் தளர்ந்தார்; 'வைத்திய சாஸ்திரம் கற்போமா! ஜோஸ்யம் கற்றுக் கொள்வோமா!' என்று எண்ணவும் தொடங்கினர்.

இந்த நிலையில் அவர்க்கு ஒரு நல்லதிர்ஷ்டம் வந்தது; வேதபுரி என்ற சிறு நகரத்திலிருந்த அனுபவமிக்க பெரிய நியாய வாதி ஒருவர், அவரைத் தமக்கு உதவியாய் இருக்குமாறு அழைத்தார். அவர் அங்கே போய்ச் சேர்ந்தார். அந்த அனுபவசாலி, "எந்தத் தொழிலை மேற்கொண்டாலும் சாதாரணமாக முதன்முதலிலே தோன்றுவனவாகிய நஷ்டத்தையும், அவமதிப்பையும் எண்ணுமல், விடாமுயற்சியோடு

செய்தால், நல்ல நிலையடையலாம்,'' என்று கூறினர். அந்த யோசனையின்படியே அவர் நடந்துகொண்டு, நான்கைந்து வருஷங்களிலே சிறந்த நியாய வாதி என்னும் புகழ் படைத்துச் செல்வம் மிக்க சீமானும் ஆயினர்.

## 2. நாணயஸ்தர் நன்மதிப்பு

சுக்கிரக் கவுண்டர் என்பவர் அம்மன்பட்டியிற் பெரிய மனிதர். அவர் பரம்பரையார் அவ்வூரில் அநேக நூற்றாண்டுகளாகக் கிராமத் தலைவராயிருந்தனர். கம்பெனியார் ராஜாங்கம் ஏற்படுவதற்கு முன்னிருந்தே அப்பரம்பரையார் அந்தக் கிராமத்தின் வழக்குகளையெல்லாம் பஞ்சாயத்துச் செய்து தீர்த்து வைப்பார். புது அரசாங்கம் ஏற்பட்டதும், கிராமங்களிலே தீர்வைகளை வசூலித்துத் தாலுக்காக் கச்சேரிகளுக்கு அனுப்ப வேண்டுவது அவசியமாயிற்று. ஒவ்வொரு கிராமத்துக்கும் புதுமையாக ஒரு கிராமாதிகாரி ஏற்பட்டார். அம்மன் பட்டிக்கும் ஒரு தாசில்தார் வந்து விசாரித்து, சுக்கிரக் கவுண்டரை அதிகாரியாக நியமித்து, வரி வசூல் செய்து அனுப்பச் சொன்னர். அவரும் ஒரு குமாஸ்தாவை வைத்துக்கொண்டு, கணக்கெல்லாம் ஒழுங்காக எழுதச் சொல்லி, வரிப்பணத்தைத் தாலூக்காவுக்கு அனுப்பினர்.

தாசில்தார் கணக்கெல்லாம் பார்த்து, ஒழுங்காய் இருக்கக் கண்டு, அடியிலே கையெழுத்துப் போட்டிருப்பவர் பெயரை வாசிக்க எண்ணிக் கடைசிப் பக்கத்தைத் திருப்பினர். 'கிராமாதிகாரி' என்ற இடத்தில் ஓர் எழுத்தும் இல்லாமல் விடப்பட்டிருந்தது. 'கையெழுத்து இல்லாத கணக்கு அங்கீகரிக்கப்பட மாட்டாது,' என்று, தாசில்தார் அந்தக் கணக்கைக் கிராமத்துக்குத திருப்பி அனுப்பினர். குமாஸ்தா கணக்கில் ஒன்றும் குற்றமில்லை என்று தெரிந்துகொண்டு,

மணியக்காரர் கையெழுத்துக்காக அது வந்திருப்பதாகச் சுக்கிரக் கவுண்டரிடம் சொன்னார். அவருக்குக் கோபம் வந்து விட்டது. "இது நாள் வரையில் நாம் எவர்க்கும் கையெழுத்துப் போட்டதில்லையே! இன்று என்ன புதுமை! அப்படியே கணக்குக் கட்டைத் தாசில்தாருக்கு அனுப்பும்," என்றார்.

அடுத்த வாரத்திலே தாசில்தார் அம்மன் பட்டிக்கு வந்தார்; மணியக்காரரை அழைத்து! "ஐயா, நீர் ஏன் உம்முடைய கணக்குப் புஸ்தகத்தில் கையெழுத்துப் போடாமல் அனுப்பினீர்?" என்று கேட்டார். அதற்கு அவர், "நாம் ஒரு நாளும் கையெழுத்துப் போட்டதில்லை. நம் பேர் சொன்னால் எங்கும் செல்லும். 'இன்னார் அனுப்பிய சீட்டு,' என்றால் போதும், அவ்வளவுதான் இங்கே உள்ள வழக்கம்," என்றார்.

தாசில்தார், "ஐயா, கையெழுத்துப் போடாவிட்டால் இந்தக் கணக்கைக் கச்சேரியில் ஏற்றுக்கொள்ளமாட்டோம். நீர் கையெழுத்துப் போட்டுத்தான் அனுப்ப வேண்டும்." என்றார்.

கவுண்டர், "எங்கள் வமிசத்திலே இவ்வளவு கேவலமான பேச்சை யாரும் கேட்டதில்லை; எங்கள் வாய் வார்த்தையே நம்பிக்கைக்குரியது நாங்கள் கையெழுத்துப் போடமாட்டோம். கணக்கெழுதக் குமாஸ்தா இருக்கிறார். அவர் கணக்கை வாசித்துக் காட்டினால் உள்ள விஷயங்களைத் தெரிந்துகொள்வோம். எமக்குக் கையெழுத்துப் போடத் தெரியாது," என்று கூறினார்.

உடனே தாசில்தார் உண்மையை அறிந்துகொண்டு, "கையெழுத்துப் போடத் தெரிந்தவர்க்குத்தான் இந்த வேலையைக் கொடுக்க வேண்டும். உம்மை இந்த வேலையை விட்டு நீக்கிவிடுகிறோம்," என்று கூறினார்.

கவுண்டருக்கு மிகுந்த கோபம் வந்துவிட்டது. அவர் தாசில்தாரை நோக்கி, "எஜமான்கள் இந்தக் கிராமத்திலே கால் வைப்பதற்கு முன்னர் இங்கே யார் பெரியதனக்காரர் என்பது இங்குள்ள பச்சைக் குழந்தைகளுக்கும் தெரியும். புதுமையாக நீங்கள் கொடுக்கும் உத்தியோகம் எனக்கு வேண்டா. யாரை வேண்டுமென்றாலும் அதிகாரியாக நியமித்துக்கொள்ளுங்கள். உங்கள் கஜானாவுக்கு இங்கேயிருந்து வரிப்பணம் வரவேண்டும் என்ற எண்ணம் இருந்தால், செய்வதை யோசித்துச் செய்யுங்கள்," என்று சொன்னார்.

தாசில்தார் கிராமத்தாரையெல்லாம் விசாரித்து, வேறு யாரும் அங்கே மணியக்காரராக இருக்க இயலாது என்பதை அறிந்தார். பிறகு அவர் சுக்கிரக் கவுண்டரிடம் வந்து, "ஐயா, நீரே மணியக்காரராய் இருக்கலாம். கணக்குகளிற் கையெழுத்துப் போடாவிட்டாலும், பாதகமில்லை. ராஜாங்கத்துக்கு நம்பிக்கையுள்ளவர்களாயிருக்க வேண்டும் என்பதே என் எண்ணம்," என்று சொல்லிவிட்டுப் போனார். முன்போலவே சுக்கிரக் கவுண்டர் மணியக்காரராய் இருந்தார்.



## V. கப்பற்பிரயாண வரலாறு
## (Voyage)
### 1. காப்டன் குக்கின் மூன்றாம் பிரயாணம்

கப்பற் பிரயாணத்தால் ஆங்கில நாட்டுக்குப் பெரும்புகழ் விளைத்தோரிற் காப்டன் குக் என்னும் பெயர் பூண்ட மீகாமர் தலைவர் மிகவும் சிறந்தவராவர். அவர், தன்னல உணர்ச்சியின்றி, நாட்டின் நன்மையின் பொருட்டு, மூன்று பெரிய கப்பற்பிரயாணங்கள் செய்தார். அவற்றுள் மிகவும் முக்கியமான மூன்றாம் பிரயாணத்தின் வரலாறுஇங்கே கூறப்படும்.

அக்காலத்தில் இங்கிலாந்தின் அரசராயிருந்த மூன்றாம் ஜார்ஜ் அரசருடைய ஆதரவால் இப்பிரயாணத்தின் பொருட்டு இரண்டு பெருங்கப்பல்கள் அமைக்கப்பெற்றன. அவை இந்நாளிற் காணும் நீராவிக் கப்பல்கள் போலல்லாமல், பண்டை நாளைய பெரு மரக்கலங்கள்போலப் பாய் விரித்தோடும் கப்பல்களாம். அவற்றுள் ஒன்றுக்கு ரெஸல்யூஷன் என்றும், மற்றொன்றுக்கு டிஸ்கவரி என்றும் பெயர்களிடப் பட்டிருந்தன.

நல்ல நாளிலே புறப்பட்ட அக்கலங்கள் இரண்டும், கடலிலே நல்ல காற்றின் உதவியால் விரைவிலே பிரயாணம் செய்து, நியூஜீலண்டு என்னும் தீவின் அருகில் போய்ச்சேர்ந்தன. அங்கு ஒரு புதிய சிறிய தீவு கண்டுணர்த்தப்பட்டது. பிறகு அவை மெல்ல வடக்கு நோக்கிச் சென்று, சில சிறு தீவுகளைக் கண்டன. அங்கு உணவுப்பொருள்கள் சில அகப் பட்டன. அப்பால் அவை ஒரு வாரத்தில் பால்மர்ஸ்டன் என்னும் தீவை அடைந்தன; அங்கு அருகிலே பவளக் கொடிகளைக் கண்டு வந்தன.

பின்பு அக்கலங்கள் சில வாரங்களில் இடையிலே உள்ள பல தீவுகளைக் கண்டுகொண்டே, ஒட்டஹைற்டு என்

னும் தீவுக்கு வந்தன; அங்குச் சில தினங்கள் தங்கியிருந்தன. பின்பு கப்பற்றலைவர் விரைவாகத் தம் கலங்களைச் செலுத்தி மடவை விரிகுடாவை அடைந்தனர். அதற்கு அருகில் ஈமோ என்னுமொரு தீவு இருந்தது. அத்தீவின் தலைவன் கப்பல் தலைவர்களை வந்து கண்டு, விருந்துண்டு மகிழ்ந்து, விடைபெற்றகன்றான். பின்பு தலைவர் இருவரும் ஹூவா ஹைன் தீவை நோக்கிக் கப்பலைச் செலுத்திச்சென்றனர்; முன்னைய பிரயாணத்திலே தம்முடன் அழைத்துச் சென்ற ஒருவனை அங்கே இறக்கிவிட்டுப் புறப்பட்டனர்.

பின்பு அவர் சில வாரங்களில் மிக்க சிரமத்தோடு பிரயாணம் செய்து, ஆல்பியன் கரையை அடைந்தனர்; அங்குப் புதியதொரு துறைமுகத்தைக் கண்டு, அதற்கு ஜார்ஜ் அரசர் துறை எனப்பெயரிட்டனர். அதன் பின், எலிஸபேத்து முனையை அடைந்து, அதைத் தாண்டி வடமேற்குத்திசையை நோக்கிச் சென்றனர்; அங்கு ஒரு பெரிய ஆற்றைக் கண்டு, நெடுநாள் பரிசோதித்து, வடஅமெரிக்காவின் பெருமையை உணர்ந்தனர்.

இவ்வாறே, நிலங்களை ஆராய்ந்து உண்மை உணர்ந்து கொண்டே, குக்கும் அவர் துணைவரும் பின்னும் பல தீவுகளைக் கண்டு, கடைசியாகக் காரகக்கூடா விரிகுடாவை அடைந்தனர். அக்குடாவின் அருகில் ஒரு பழைய கிராமம் இருந்தது. கப்பல்கள் இரண்டும் அதற்கு அருகிலே கடலில் தங்கின. இராக்காலத்திலே அந்தக் கிராமத்தின் ஜனங்களில் சிலர் தந்திரமாகச் சிறிய படகுகளில் வந்து கப்பலிற் புகுந்து சில பொருள்களைக் கொள்ளையிட்டனர். இதனை யுணர்ந்து மிகவும் கோபம் கொண்ட குக், கிராம ஜனங்களைத் தண்டிக்கக் கருதிக் கரையில் இறங்கிக் கிராமத்துக்குள் நுழைந்தார். சில துணைவரும் அவருடன் சென்றனர்.

குக், கிராமத் தலைவனையும் அவன் மகனையும் அழைத்துக்கொண்டு கடலருகில் வர முயன்றார். இதற்குள் கிராம ஜனங்களில் பலரும் நடந்த செய்தியை உணர்ந்து, அங்கே கூடிவிட்டனர். குக், தாம் சொல்லத்தக்க நியாயங் களைச் சொல்லி, அந்த ஜனங்களைச் சமாதானம்செய்ய முயன் றார் அவை பயன்படவில்லை. அவர்கள் கத்தி, ஈட்டி, வேல் முதலிய ஆயுதங்களையும், தடிகளையும், கற்களையும் கொண்டு குக்கின் கூட்டத்தாரைத் தாக்கினார்கள். கப்பலில் இருந்த ஜனங்கள், தாங்கள் துப்பாக்கிப் பிரயோகம் செய்தால் குக் முதலியவர்களுக்கு ஆபத்து விளையுமென்று கருதி, வாளா இருந்தார்கள். இந்தச் சமயத்தில் ஒருவன் குக்கை ஈட்டியினால் தாக்கிக் கிராமத் தலைவனை விடுவித்தான். இந்த நிலைமையை எதிர்பார்த்திருந்த மற்ற ஜனங்கள், வெகு விரை விலே ஓடிவந்து பாய்ந்து, பல வகை ஆயுதங்களால் அவர் உடம்பைக் குத்திக் கிழித்துக் கடலில் உருட்டினர். இந்தக் கோரக் காட்சியைக் கண்ட கப்பல் மாலுமிகள், துப்பாக்கிப் பிரயோகம் செய்து பயனில்லை என்று கண்டு மிகவும் வருந் தினார்கள். இவ்வண்ணம் சிறந்த கடலரசராகிய குக் என் பவர் கோர மரணம் அடைந்தார். ஆயினும், அவர் புகழ் என் றும் அழியாததாய் அவர் நாட்டில் விளங்குகின்றது.

## 2. வாஸ்கோ - ட - காமாவின் இந்தியப் பிரயாணம்

போர்ச்சுகல் நாட்டிற் பிறந்த மாலுமிகள் தலைவருள் மிக்க புகழ் படைத்தவர் வாஸ்கோ-ட-காமா என்பவர். அவர் தம் நாட்டரசராகிய எமானுவல் என்ற அரசரின் ஆதரவு பெற்று, இந்திய நாட்டைக் காணச்சென்ற முதற்பிரயாணத் தின் வரலாறு இங்கே சுருக்கிக் கூறப்படுகிறது:

வாஸ்கோ-ட-காமா, பாலோ-ட-காமா என்ற சகோதரர் இருவரும் அவர் நண்பராகிய நிக்கோலஸ் கோயலோ என்ப

வரும், மூன்று கப்பல்களுக்குத் தலைவராகி, நமது இந்தியா தேசத்தை நோக்கிப் புறப்பட்டனர். முதலிலே சில தினங்கள் வரை நல்ல காற்று வீசியதால், அந்த மூன்று மரக்கலங்களும் பத்திரமாய்ப் பிரயாணம் செய்து, கானரித் தீவை அடைந்து, பிறகு பெருங்கடலிற் புகுந்து, விரைவாகச் சென்றன. ஆயினும், ஒரு கப்பல் இடையிலே வழி தவறி வேறெங்கோ போய்விட்டது. அதனால், மனம் தளராமல் மற்ற இரு தலைவர்களும் மேலே தங்கள் கப்பலைச்செலுத்திக் கொண்டுபோய்ச் சில தினங்களுக்குப் பிறகு அக்கப்பலைக் கண்டார்கள்.

பின்பு மூன்று கப்பல்களும் உற்சாகத்தோடு ஒன்று சேர்ந்து சென்றன. பெரும்புயல் பொங்கியெழுந்து, கப்பல்களை விழுங்குவன போல முன்னும் பின்னும் அலைத்தன. கப்பல் தொழிலாளர் அனைவரும் நடுங்கித் திகிலடைந்தனர். வாஸ்கோ-ட-காமா, "நாம் முன் வைத்த காலைப் பின் வாங்கலாகாது. வெற்றி பெற்றால் வரும் புகழை எண்ணிப் பாருங்கள்!" என்று கூறி, அனைவரையும் உற்சாகப்படுத்தினர். நன்னம்பிக்கைமுனைக்கருகிற் பெரும்புயல்கள் எழுவது எப்பொழுதும் வழக்கம். ஆதலால், அவர்கள் சில நாள் இவ்வாறு அல்லற்பட்ட பிறகு அமைதியான கடலை அடைந்தார்கள்; அப்பொழுதே நன்னம்பிக்கை முனையைக் கடந்து விட்டதாக அறிந்தார்கள்.

நன்னம்பிக்கைமுனையைக் கடந்து சிறிது தூரம் சென்றதும் பெருமழையும் புயலும் வந்து கப்பல்களை அலைத்தன. இச்சமயத்திலே கப்பலாட்களிற் சில கலகக்காரர் தலையெடுத்துக் குழப்பத்தைக் கிளப்பிவிட்டனர். அதனை வாஸ்கோ-ட-காமா தமது மனோ தைரியத்தாலும் சாமர்த்தியத்தாலும் அடக்கினர். பின்பு அவர்கள் சில மாத காலம் மெல்ல

மெல்ல மேற்சென்று, ஒரு பெரிய நதியின் முகத்துவாரத்தைக் கண்டார்கள்; கடவுளருளால் கண்ட அந்நதிக்குக் கருணை நதி என்று பெயர் இட்டார்கள்; அந்நதிக் கரையிலே பல அழகிய காட்சிகளைக் கண்டு களித்தார்கள். கரை ஓரத்திலிருந்து ஒரு சிறு படகு வந்தது. அதில் ஒரு மோரியன் வந்தான். அவன் வாஸ்கோ-ட-காமாவைக் கண்டு வணங்கி, அவரிடம் பணியாளனாக இருக்க இசைந்தான்.

வாஸ்கோ-ட-காமா தம் புதிய பணியாளன் உதவியால் அத்திசையில் உள்ள நாடுகளின் செய்திகளை நன்கு விசாரித்து அறிந்துகொண்டார். பிறகு அவர் மொஸாம்பிக்குத் தீவை அடைந்து, அத்தீவு ஜனங்களின் வஞ்சகச் சூழ்ச்சிகளைக் கண்டு அங்கு இறங்க விரும்பாமல், அருகில் இருந்த மேலிண்டா என்ற தீவை அடைந்தார். அத்தீவின் தலைவன் புதிய விருந்தினராகிய போர்ச்சுகேசியரை அன்போடு வரவேற்று உபசரித்தான். தலைவர் மூவரும் கப்பல்களைத் துறைமுகத்தில் நிறுத்திவிட்டு, அந்நாட்டிற் சில நாள் தங்கினர். அத்தீவின் தலைவன் வேண்டுகோளுக்கிணங்கி இந்தியாவுக்குச் செல்லுவதற்கு உதவியாய் இருக்கும் பருவக்காற்று வரும் வரை அங்கேயே தங்கியிருக்க முடிவு செய்தனர். சில மாதம் அங்குத் தங்கிக் களைப்பாறியதில் கப்பல்களை நன்கு பழுது பார்க்கவும் சௌகரியம் ஏற்பட்டது. பிறகு சரியான காற்றடிக்கும் காலத்திலே இந்தியாவின் திசையை நோக்கி அந்நாட்டிலிருந்து அவர்கள் புறப்பட்டார்கள்.

அக்கூட்டத்தார் பெருமுயற்சி செய்து சில தினங்களில் இந்து மகா சமுத்திரத்தை அடைந்தனர். அவர்கள் மெலிண்டா நாட்டையகன்று, இருபது தினங்களில் இந்தியாவின் கரையைக் கண்ணுற்றுக் கண்டார்கள். அந்த நிலத்தைக் கண்ட மகிழ்ச்சியால் எல்லாரும் கடவுளைத் தொழுதனர்

முதலிலே கண்ணனூரை நெருங்கிப் பின்பு கரையோரமாகவே சென்று கள்ளிக்கோட்டையை அடைந்தனர்.

அந்நாளிலே இந்தியாவோடு வியாபாரம் செய்துகொண்டிருந்த மோரியரும் பிறரும், புதியவர்கள் வரவு தமக்கு நஷ்டம் விளைக்கும் என்று கருதிப் பலவகைச் சூழ்ச்சிகளால் அவர்களைத் துரத்திவிட முயன்றனர். திவானி என்ற பணியாளன் உதவியாலும், வேறொரு சேவகன் உதவியாலும் வாஸ்கோ-ட-காமா அக்காலத்தில்கள்ளிக்கோட்டை அரசராய் இருந்த தம்பிரானுக்குத் தம் கருத்தைத் தெரிவித்து, அவர் அனுமதி பெற்று, நாட்டு மக்களோடு வியாபாரம் செய்யத் தொடங்கினர்.

இதற்குள்ளே சூழ்ச்சிக்காரர் சிலர் கள்ளிக்கோட்டை அரசர் மனத்தை மாற்றி, வாஸ்கோ-ட-காமாவைச் சிறைச் சாலையில் அடைக்கும்படி செய்தனர். தம்பிரான் அவரைத் தண்டிக்கவும் தீர்மானித்தார். இச்சமயத்தில் உண்மை வெளிப்படத் தம்பிரான் அவரைக் கௌரவித்துத் தம்மை மன்னிக்குமாறு கேட்டுக்கொண்டார். பிறகு முன்போலவே வியாபாரம் செய்யவும் அவர் அனுமதி கொடுத்தார். வாஸ்கோ-ட-காமா விரைவிலே தமது வியாபாரத்தை முடித்துக் கொண்டு இந்திய நாட்டிலே தம் நாட்டினர் வந்து வியாபாரம் செய்ய அனுமதி பெற்றுத் தம் நாடு நோக்கிப் புறப்பட்டார்.

வழியிடையிலே கொடிய நோய் ஒன்று கப்பலிற் பரவியது. அதனாற் பாலோ-ட-காமா இறந்தார். வேறு சிலரும் இறந்தனர். வாஸ்கோ-ட-காமா விடாமுயற்சியோடு தம் துயரத்தைப் பொருட்படுத்தாமலே தம் தேசம் வந்து சேர்ந்தார். அங்கே அரசரும் பிறரும் அவரை அன்போடு வரவேற்றுப் பல வகைச் சிறப்புக்கள் செய்தனர். இந்தப் பிரயாணத்திலே சென்று வந்த ஒவ்வோர் ஆண் மகனும் அங்

நாட்டவரால் மிகவும் பாராட்டப்பட்டான். இந்தப் பிரயாணத்திலிருந்தே நம் நாட்டின் புகழ் மேல் நாடுகளில் பரவத் தொடங்கியது.

## பயிற்சி

பின் வரும் விஷயங்களைப்பற்றி விருத்தாந்தக் கட்டுரைகள் வரைக:—

1. ஒரு வருஷோத்ஸவம்
2. கலியாண வைபவம்
3. ஒரு பெருந்திருவிழா
4. வண்டி கவிழ்ந்தது
5. ஆகாய விமான வீழ்ச்சி
6. காளி தாசர்
7. ஷேக்ஸ்பியர்
8. ஈசுவர சந்திர வித்யாசாகரர்
9. நூல் அரங்கேற்றம்
10. ஒரு பெரு விளையாட்டு
11. பீகார் பூகம்பம்
12. பிருதிவி ராஜன்
13. சேஷைய சாஸ்திரியார்
14. வடநாட்டு யாத்திரை
15. காசி யாத்திரை
16. எறும்பு தன்வரலாறு கூறுதல்
17. புகைவண்டித் தொடர் சரிந்தது
18. மோட்டார் பஸ் மோதி விழுந்தது
19. பழைய மோட்டார் வண்டியின் சொந்தக் கதை
20. பழைய இடிந்த சத்திரம் ஒன்று தன் கதை கூறுவது
21. ஒரு தபால் காகிதம் தன் போக்கு வரவு சொல்வது
22. மின்சார விளக்குத் தன் கதை சொல்லல்
23. மார்க்கோ போலோ பிரயாணம்
24. அமெரிக்க நாடுகளைக் கண்டு திரும்பியது
25. இங்கிலாந்து சென்று திரும்பியது
26. நன்றியறிவை விளக்க ஒரு சிறு கதை
27. சோம்பலின் பயன் விளங்க ஒரு சிறு கதை
28. அற்பர்க்கு அமையும் கேட்டை விளக்கும் ஒரு சிறு கதை
29. பெரியோர் வறுமையிலும் பெருமையோடு இருப்பதை விளக்க ஒரு சிறு கதை
30. தொழிலாளியின் நற்குணம் புலப்பட ஒரு சிறு கதை

## 3. சிந்தனைக் கட்டுரை
## (Reflective Essay)
### 1. தன்னலமறுத்தல்

மக்கள் இனத்தினருக்கு உள்ள சிறப்பு, மற்ற உயிரினங்களுக்கு இல்லாத பகுத்தறிவைப் பெற்றிருத்தலேயாம். இயற்கையறிவு எல்லா உயிர்களுக்கும் உண்டு. மக்கள் தங்கள் பகுத்தறிவால் புதுமை புதுமையாகப் பல உண்மைகளை உணரலாம். இயற்கை அறிவொன்றேயுடைய உயிரினங்களோ, தாங்கள் ஆதியில் அறிந்த பொருளுணர்ச்சிக்குக் கீழும் போவதில்லை; மேலும் போவதில்லை. உயிர்கள் எல்லாம் பொதுவாகத் தங்கள் நன்மையை நாடும் இயல்புடையனவே. தன்னைத்தான் காத்துக்கொள்ள முயல்வது என்பது இயற்கை வழிகளுள் முதலாவதாகும். தன்னைக் காக்கும்நெறியிலும் மற்ற உயிர்களுக்கு இயற்கையிலேயே பல வகைத் துணைகளும் கருவிகளும் அமைந்துள்ளன. மனிதர் இனத்துக்கோ, பல பல வகைப்பட்ட ஆயுதங்கள் வேண்டியிருக்கின்றன.

ஒரு குடியானவன் தன் மனைவி மக்கள் பின் வர, மாடுகள் இரண்டை ஓட்டிக்கொண்டு ஒரு காட்டாற்றில் இறங்கினான். திடீரென்று பெருவெள்ளம் வந்தது. மாடுகளை விட்டு மக்களைப் பிடித்துக்கொண்டான்; மனைவி தடுமாறுவதாய் அறிந்ததும், மக்களைக் கைவிட்டு மனைவியைக் கைப்பற்றிச் சிறிது தூரம் சென்றான்; பின்பு அவளைப் பற்றி இருப்பதால் தனக்கே ஆபத்து நேரும் என்று தோன்றியதும், அவளையும் கைவிட்டு நீந்திக் கரையேறினான்.

இச்சிறிய கதையால் மனித இனத்தின் பொதுவியல்பு விளங்கும். மனிதன் தன்னால் இயன்றளவு மற்றவர்களுக்கு

உதவி செய்ய முயல்வான். தனக்கே தீங்கு வருவதாக அறியும்போது பிறர் எல்லாரையும் கைவிட்டுத் தன்னைக் காத்துக்கொள்ள முயல்வதே மனித சுபாவமாகும்.

ஆயினும், நல்லறிவின் முதிர்ச்சியாலும் நல்லோர் சேர்க்கையாலும், மனிதன் தனது சாமானிய குணத்தை மறந்து, தன்னலத்தைப் பொருட்படுத்தாது, பிறர்க்கு உதவி செய்யத் துணிதலும் உண்டு. இத்தன்மையே தன்னலமறுத்தல் என்று பாராட்டப்படும் சிறந்த குணமாகும்.

உலகிற் காணப்படும் மனிதரெல்லாரும் இத்தகைய உயர் குணம் வாய்ந்தவராய் இருத்தல் இயலாது. இலட்சத்தில் ஒருவர், கோடிக்கொருவரே உண்மையில் இப்பெருங் குணம் வாய்ந்தவராயிருப்பர்.

இந்திரன் விருத்திராசுர வதத்தின்பொருட்டுத் ததீசி முனிவரிடம் முதுகெலும்பைப் பெற்று வச்சிராயுதமாக்கிக் கொண்ட புராணக்கதை நம் நாட்டுச் சிறுவர் அறிந்ததே.

“அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.”

என்னும் திருக்குறள் இவ்வருங்கருத்தை விளக்கும். சிபிச் சக்கரவர்த்தி, புறாவின் பொருட்டாகத் துலையில் ஏறித் தன் உடம்பையே வழங்கத் துணிந்ததும் இப்பெருங்குணத்தையே காட்டும்.

இந்நாளில் பனி நிரம்பிய தென்கோட்டுப் பெருங் கடலிலும், வடகோட்டுப் பெருங்கடலிலும், இமய மலையிலும், வெயிற்கொடுமையும் மணல் வெளியும் நிறைந்த பாலை வனங்களிலும், பிறர் கண்ணுற் காணாத காடுகளிலும், நாடுகளிலும் பல வகைப்பட்ட வாகனங்களை உதவியாகக் கொண்டு, அறிஞர் பலர் ஆராய்ச்சி செய்வதற்காகப் பிரயாணம் செய்கின்றனர். இப்பெரியோர் செய்யும் அரிய ஆராய்ச்சி

களால் உலகத்தாருக்குப் பின்னாளிலே பெருநலம் விளைகின் றன. ஆகையால், அவை தன்னலம் மறுத்த செயல்களாம்.

இவ்வாராய்ச்சியாளர்கள் பூமியிலும், பாதாளத்திலும், ஆகாயத்திலும் உண்மையை ஆராயக் கருதித் தங்கள் உயி ரையே தியாகஞ் செய்கின்றார்கள். சில சாஸ்திரிகள் தங்கள் அபூர்வ ஆராய்ச்சிகளால் தங்கள் அவயவங்களையும், சில சம யங்களில் உயிரையும் இழக்கின்றார்கள். ஒரு நோயின் கொடு மையை நன்கு பரீக்ஷை செய்ய விரும்பி, அதனை வருவிக்கக் கூடிய மருந்துகளைத் தம்உடம்பில் ஊசியால் ஏற்றுக்கொண்டு, அந்நோயைப் போக்கும் மருந்தைக் கண்டுபிடித்து உலகிற்கு உபகரிக்க முயன்ற உத்தமரும் சிலர் உளர். இத்தகைய அருஞ்செயல் புரிந்தோரெல்லாம் தம் பூதவுடம்பு அழிந்தா லும், புகழ் உடம்பு அழியாத புண்ணியராவர்.

இவ்வுடம்பே பிறர்க்குதவியாய்ப் பயன்படுமாறு தோன் றியது என்ற எண்ணமுடையவராய், சில பெரியோர், தம் வாழ் நாள் முழுவதும் எளியவர் பொருட்டு உழைத்து, அதனால் வரும் பழிப்பையும் பொருட்படுத்தாது, பெருநலம் விளைத்திருக்கின்றனர். அரச செல்வத்தைத் துறந்து உல கிற்கு உண்மை உணர்த்தத் துணிந்த புத்த தேவரைக்காட்டி லும் பரோபகார சீலர் உலகில் உளரோ! இவ்வரும்பெருங் குணத்தை இளமைப்பருவம் முதலே நாம் சிறிது சிறிதாகப் பெற்று வருவோமாயின், மகான்களைப்போலப் பரோபகாரி களாய் விளங்க இயலாதாயினும், மனிதப் பிறவி பெற்றதற் குரிய பேற்றையாவது அடையலாம் என்பது திண்ணம்.

## 2. பாஷாபிமானம்

உலகத்தில் வழங்கும் பாஷைகள் எண்ணிறந்தன. அவற்றுள் மிகவும் பழமையான பாஷைகள் சில. புதுமை யாய்த் தோன்றிய பாஷைகள் பல. முன் காலத்திலே நல்ல

நிலையிலிருந்து இந்நாளில் மிகச் சிலராற் போற்றப்படும் நிலையில் இருப்பன சில. பாஷைகளுக்கும் தோற்றம், வளர்ச்சி, அழிவு என்னும் மூன்று நிலையும் உண்டென்பதை உலக சரித்திரத்தால் அறிகின்றோம்.

ஒருவர் தம் மனம் கருத்தை மற்றொருவருக்கு வெளியிடப் பாஷைகளே உதவியாகும். ஜனங்கள் வாழும் சீதோஷ்ண நிலைக்கும், நிலத்தன்மைக்கும், சூழலுக்கும், இயற்கை நலத்துக்கும் ஏற்றவாறு பாஷைகளின் தன்மை வேறுபடும். பாஷைகளின் தோற்றம் வளர்ச்சி முதலிய விஷயங்களைப்பற்றிய சரித்திரங்கள் இந்நாளிலே பல வெளிவருகின்றன. அவற்றை நாம் நன்கு கவனித்துப் படித்துப் பார்ப்போமானல், நம் நாட்டில் வழங்கும் பாஷைகளில் மிகவும் பழமையானவை வடமொழி, தென்மொழி எனப்படும் ஆரியமும் தமிழுமேயாம் என்பதை அறியலாம். ஒரு பாஷையின் உண்மையான பெருமை அதன் பழமையினுல் மாத்திரம் நிர்ணயிக்கத் தக்கதன்று. மக்களுக்குப் பல துறைகளிலும் பயன்பட்டு வருதலாகிய அதன் பெருமையே போற்றத்தக்கது.

அவ்வகையான பெருமையில் நம் நாட்டுப் பழமையான செல்வங்கள் என்று போற்றத்தக்க ஆரிய மொழியும், தமிழ் மொழியும் இன்றளவும் உலகத்தில் உள்ள வேறு எம்மொழிகளுக்கும் பின்னடைவனவாகா. மற்றும் இம்மொழிகளிற் பழமைப் பெருமையும் நிறைந்து நிற்கின்றது. புதுப்புதுக் கருத்துக்களை நன்கு வெளியிட்டுரைக்கத்தக்க ஆற்றலும் நம் மொழிக்கு உண்டென்றும் கூறலாம்.

தெய்வ பக்தியைப்பற்றிய பாடல்களும், வேதாந்த சாஸ்திரங்களும், தர்க்க சாஸ்திரம், தர்ம சாஸ்திரம் முதலிய பழைய சாஸ்திரங்களும் எக்கருத்துக்களை வெளியிட எழுந்

தனவோ, அவற்றிற்குரிய சொற்களே இவ்விரு மொழி களிலும் உண்டு. நவீனக் கருத்துக்களை வெளியிடத்தக்க ஆற்றல் நம் தமிழ் மொழிக்கில்லை என்று சிலர் கூறுவ துண்டு. நறுந்தமிழிலே வெளியாகும் 'நவசக்தி' போன்ற பத்திரிகைகளையும், எல்லார்க்கும் விளங்கும் எளிய நடை யில் வெளிவரும் 'சுதேசமித்திரன்' போன்ற பத்திரிகை களையும் பார்த்தால், எவ்வகைப் புதுக் கருத்துக்களையும் நம் நாட்டு மொழிகளால் வெளியிடலாம் என்பது நன்கு விளங் கும்.

ஆரிய மொழியின் வழி மொழிகளாகிய குஜராத்தி, மராத்தி, ஹிந்தி, வங்காளி முதலிய பாஷைகளில் இந்நாளில் உண்டாயிருக்கும் வளர்ச்சியைப் பாருங்கள்! சாமானிய ஜனங்களும் அறிந்துகொள்ளும்படி தற்காலத்திலே தோன் றும் புதுமைச் செயல்களையும் கருத்துக்களையும் அம்மொழி கள் வெகு நன்றாக வெளியிட்டு வருகின்றன. தமிழ் மொழி யின் இனத்தைச் சேர்ந்த தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்னும் மொழிகளில், இந்நாளில் தோன்றும் புதுமைக் கருத்துக்கள் எல்லாம் புகுந்துவிட்டன. ஒரு கருத்தை அறிந்த ஒருவர் அதனை அறியாத மற்றொருவர்க்குத் தெரிவிப்பதே பாஷையின் நோக்கமாதலால், அவ்வழி யிலே நம் தமிழ் மொழியும் இந்நாளைய புதுமைகளை நன்கு ஆராய்ந்து தக்க சொற்களால் வெளியிட முன் வந்தி ருப்பதைக் 'கலைமகள்' போன்ற மாதப் பத்திரிகைகளில் வெளி வரும் சாஸ்திர ஆராய்ச்சி வியாசங்களால் அறியலாம்.

இவ்வாறு எல்லா வகைப் பெருமையும் அமைந்துள்ள நம் மொழியினிடம் நாம் உண்மையான அன்பு பாராட்ட வேண்டுமன்றோ? ஒருவன் தன் தேசத்தினிடத்தே அபிமா னம் கொள்வது பிற தேசங்களை வெறுப்பதற்கு என்று கரு

தப்படாதவாறு போல, ஒருவன் தன் பாஷையில் ஆழ்ந்த அபிமானம் கொள்வது பிற பாஷைகளை வெறுத்து இழித்துரைப்பதற்கு என்று கருதப்படலாகாது. ஒருவன் எத்தனை தேசங்களைச் சுற்றி வந்தாலும், தன் தேசத்தினிடத்தில் மட்டும் ஒரு தனி அபிமானம் கொள்வது இயற்கை. உண்ண உணவும் உடுக்க உடையும் இல்லாத நாட்டிற் பிறந்தவனும் தன்னாட்டையே பெரிது என்று பாராட்டுவான். பழங் கருத்துக்களையும் புதுக் கருத்துக்களையும் நன்கு வெளியிடும் ஆற்றல் படையாத பாஷைகளையுடைய ஜனங்களும், தங்கள் சொந்த பாஷையை விட்டுவிட்டு எல்லாக் கருத்துக்களும் நிறைந்துள்ள மற்றொரு பாஷையை உரிமையாக்கிக்கொள்ளத் துணியார்கள். எழுத்து உருவம் பெறாமலும், இலக்கிய நலம் கொள்ளாமலும் மிகவும் தாழ்ந்த நிலையில் இருக்கும் பாஷையையுடைய மக்களும், நயம் நிரம்பிய வேறு பாஷைகளைத் தேடார்கள்.

நம் நாட்டு மொழியாகிய தமிழ் மொழி பழமையும் புதுமையும் கொண்டது. நம் மொழியைப்போலப் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக உலகத்திலே பேசப்படும் பாஷை வேறெதுவும் எந்த நாட்டிலும் இல்லை. நம் மொழியில் மனிதனது இக பரசுகமிரண்டுக்கும் உரிய பலவகைச் சொற்களும் நன்கு அமைந்துள்ளன. ஆங்கில மொழி என்று இந்நாளில் வழங்கும் பாஷையின் சரித்திரத்தை நாம் நன்கு அறிந்து கொள்ள வேண்டும். புதுமையான கருத்துக்களை வெளியிடுதற்கு வேண்டிய அமிசங்களை அம்மொழியாளர் தம் மொழியில் தழைக்கச் செய்துள்ளனர். இன்று உலகமெங்கும் வெற்றிக் கொடி நாட்டி விளங்கும் அம்மொழி, நமக்கு ஒருவகை ஊக்கத்தை ஊட்டுகின்றதென்றே சொல்லவேண்டும். எந்தத் தேசத்தில் எந்தப் பாஷையில் எந்த அற்புத விஷயம் இருந்தாலும், அதையெல்லாம் ஆங்கில மொழியிற் காண

லாம். ஆங்கில மொழியிலே நாடகங்கள் செய்த ஷேக்ஸ்பியர் என்ற புலவர் உலகப் புலவர் என்று பாராட்டப்படுகின்றார். இந்த நிலைமையை ஆங்கில பாஷை அடைதற்குக் காரணம் அதன்கண் அந்நாட்டு மக்களுக்குள்ள உண்மையான அபிமானமே ஆகும்.

அத்தகைய பாஷாபிமானத்தை ஒவ்வொரு தமிழனும் தன் தாய் மொழியாகிய தமிழினிடம் கொள்ள வேண்டும்; உரை நடையும் மேன்மேலும் நன்கு வளருமாறு தன்னால் இயன்றன செய்தல் வேண்டும்; தமிழிலேயே பேசவும் எழுதவும் பயிலவேண்டும்; நண்பர்க்கும் உறவினருக்கும் எழுதும் கடிதங்களை அயல் மொழிகளிலே எழுதாதிருக்கவும் வேண்டும். மலையாளிகள் தங்கள் நாட்டை அகன்று எந்நாட்டுக்குச் சென்றாலும், தங்கள் இனத்தைச் சேர்ந்த மக்களைக் கண்டால், தங்கள் தாய் மொழியாகிய மலையாளத்திலேயே பேசுவதை இன்றும் காண்கின்றோம். ஆங்கிலேயர், நம்மோடு பழக நேர்ந்தும், தமது மொழியையே பேசுவதும் காண்கிறோம். இத்தகைய அழுத்தமான அபிமானம் நமக்கு நம் மொழியில் உண்டானாலன்றி, நாம் அதை நன்கு வளர்க்க இயலாது. பாஷாபிமானமே ஒரு தேச மக்களின் உயர்வுக்கு அடிப்படையாம்.

பயிற்சி

பின் வரும் விஷயங்களைப் பற்றிச் சிந்தனைக் கட்டுரைகள் வரைக:—

1. உழைப்பின் சிறப்பு
2. நன்றி மறவாமை
3. துறவியர் பெருமை
4. வறுமையில் மனவுறுதி
5. நல்வாழ்வு
6. தெய்வ பக்தி
7. வஞ்சக நெஞ்சம்
8. கல்வியும் செல்வமும்
9. நல்லினச் சேர்க்கை
10. புலவர் வறுமை
11. பொய்ம்மையும் மெய்ம்மையும்
12. தேசாபிமானம்
13. போது ஜன சேவை
14. கடன்படலின் கேடுகள்

## 4. விளக்கக் கட்டுரை

## (Expository Essay)

### செய்யுள் நயம் அறிதல்

உரை நடையும், செய்யுள் நடையும் இலக்கியத்தின் இரண்டுருவங்களாம். செய்யுள் நடையே உரை நடைக்கு முன் தோன்றி, நயம் பெற்றது என்பது ஒவ்வொரு பாஷையின் சரித்திரத்தையும் ஆராய்வோர் அறியத்தக்க உண்மை ஆகும். மக்கள் செய்யுள் நடையாலே பேசி வாழ்ந்த காலம் ஒன்று இல்லையாயினும், தங்கள் கருத்தை நிலையான உருவத்திலே பலர்க்கும் பயன்படுமாறு வெளியிட வேண்டும் என்ற எண்ணம் உதித்ததும், செய்யுள் நடையையே அதற்குச் சிறந்த உதவியாகக் கொண்டார்கள் என்று அறிய வேண்டும். தமிழகத்தே பழமையான இலக்கணம் என்று கூறப்படும் அகத்தியத்தில், இலக்கியமே இலக்கணத்துக்கு முந்தி எழுந்தது என்று கூறப்பட்டுள்ளது. இன்றும் நம் நாட்டிலே பழமையான நூல்கள் என்று கூறப்பெறுபவை எல்லாம் செய்யுள் நடையிலேயே அமைந்திருக்கின்றன என்றும் அறிகிறோம். ஆரிய மொழியின் பழமையான செய்யுளானது வேதமே. அதற்கு முந்திய செய்யுளேனும் வசனமேனும் எந்நாட்டிலும் இல்லை.

செய்யுள் எவ்வாறு அமையவேண்டும் என்பதைப்பற்றி நன்னூலார் கூறிய கருத்து மிகவும் அழகானது. 'பல வகைப் பட்ட தாதுக்களால் அமைந்த உடல் உயிருக்கு இருப்பிடமாயிருப்பதுபோல, பல வகைப்பட்ட சொற்களாற் பொருளுக்கு இடமாகும்படி புலமையின் மிகுந்தோரால் அணிபெற அமைக்கப்படுவதே செய்யுளாம்.' என்று அப்பெரியார் கூறி

னர். செய்யுட்கள் தமிழ் மொழியிற் பல திறப்படும். ஸம்ஸ்கிருத பாஷையிலும் எண்ணிறந்த விருத்த பேதங்கள் உண்டு. செய்யுள் அமைத்தலின் முக்கிய நோக்கம் மன எழுச்சிகளைப் பிறர் உள்ளங் கவர வெளியிடுவதேயாகும் என்பர்.

ஒரு காவியத்தை இயற்றும் ஆசிரியரது நோக்கம் வாசகர்களது உள்ளத்துணர்ச்சிகளை உற்றுணரச் செய்தலேயாம். செய்யுளமைக்கத் தொடங்கிய போது, யாதேனும் ஒரு பொருளைப்பற்றிப் புலவர் தம் மனக்கண்ணிலே எவ்வகைக் காட்சியைக் கண்டு இன்புற்றாரோ, அதனையே பிறரும் கண்டு இன்புறுமாறு நிலையான உருவத்தில் அமைக்கின்றனர். கம்பர், தமது அரிய காவியமாகிய இராமாயணத்திலே அமைந்த பாத்திரங்களின் வாய் வழியாக வெளியிடும் கருத்துக்களால், அவ்வப்பாத்திரங்களைப்பற்றி வாசகர்கள் எவ்வாறு கருத வேண்டும் என்பதை அவ்வவ்விடங்களுக்கேற்ப அமைத்துக்கொண்டு செல்கிறார் என்பதைக் கம்ப ராமாயணம் பயில்வோர் நன்கு அறிவர். பல வகைப்பட்ட விஷயங்களை அவர், அவற்றுக்குப் பொருத்தமான சந்தங்களால் அமைத்துக் காட்டுவதையும் காண்கிறோம். 'கம்பர் கைகேயியை வெறுத்தார்; இராமனைப் பரம்பொருளாகக் கருதினார்,' என்றால், நாமும் அவ்வாறே கொள்ளும்படி அவர் செய்யுள் அமைந்திருப்பதை ஆங்காங்குள்ள சந்தர்ப்பங்களுக்குப் பொருந்திய அமைப்புக்களால் அறிவோம். காவிய கர்த்தாவின் ஆற்றல் இதனால் விளங்கும்.

உரை நடையில் தன் கருத்தை வெளியிடுபவன், தனது வாதப் பிரதிவாதங்களால், தான் கூறும் கருத்துக்களை நியாய வாயிலாக ஸ்தாபிக்க முயல்வான். செய்யுள் செய்ப

வன், தான் கருதும் கருத்தை வாசகர் மனத்தைக் கவர்ந்து ஏற்றுக்கொள்ளும்படி அமைப்பான். புலவர் ஒருவர் தம் மனோதர்ம சக்தியால், மிகவும் அற்பப் பொருளையும் உயர்ந்த நீதியையும் உயர்ந்த உண்மையையும் வெளியிடும்படி செய்வார். செய்யுட்சுவை அறியாதவன், பஞ்சேந்திரியங்களால் உணரும் பொருள்களையே உணர்வான். கவிஞனோ, இந்திரிய விஷயங்களையும் எளிதாகத் தான் அறிந்து அனுபவித்தலோடு பிறர்க்கும் இன்பம் ஊட்டுவான்.

செய்யுள் நடைக்கும் உரை நடைக்கும் ஒரு முக்கியமான வேறுபாடு உண்டு: வசன நடையில் எழுவாய் பயனிலை ஒழுங்குகளைக் கவனித்து அமைக்க வேண்டும். செய்யுள் நடையிலோ, ஓசை நயத்தையே பெரிதாகக் கருதிச் சொற்களைத் தன் மனம்போல மாற்றி அமைக்கும் உரிமை கவிஞனுக்குண்டு. நவரசங்கள் தொனிக்கும் வண்ணம், எடுத்தல் படுத்தல் முதலிய ஓசைகள் இயல்பாக அமையுமாறு செய்யுட் சொற்கள் இயைக்கப்படும். செய்யுள் நூல்களைப் படிக்கும்போது நம்மை அறியாமலே சில இடங்களில் நாம் ஆவேசத்தின் வசத்தினராய் உரத்து வாசிக்க நேரிடும். சில இடங்களில் இரக்கக் குரலில் இரங்குவோம். இவ்வாறு பரவசப் படுத்தும் சக்தி செய்யுட்கே சிறப்பாய் உள்ளது. சில சந்தர்ப்பங்களில் நம் கண்கள் கண்ணீரால் நிரம்புவதும், சில சந்தர்ப்பங்களிற் கோபத்தாற் சிவப்பதும், நல்லிசைப் புலவர் செய்யுளால் இயலக்கூடிய செயல்களாம். சுருங்கச் சொல்லின், நவரசங்களும், மனோ தர்மமும், ஓசை நயமும் செய்யுளிலேயே சிறப்பாக அமைதற்குரியனவாகும்.

நம் நாட்டிலே புராண இதிகாசங்கள், சரித்திரங்கள் முதலியன ஆதியில் செய்யுள் நூல்களாகவே எழுந்தன.

நீதி நூல்களும் தொகை நூல்களும் சங்க காலத்திருந்தே தோன்றி வளர்ந்து வருகின்றன. செய்யுட்களின் அமைதியைக்கொண்டு சாமானியமாக அவற்றை நான்கு வகையாகப் பிரிக்கலாம்:

1. நீதிச்செய்யுட்கள் :—இவை ஒரு தொடர்ச்சியை அமைத்துக்கொண்டு பல வகை நீதிகளைக் கூறுவனவாம். இவ்வகைக்கு நாலடி நானூறு, திருக்குறள் என்பன சிறந்த உதாரணங்களாகும்.

2. பாண் பாட்டு :—தனிச் செய்யுளாகவும், தொகை நூல்களாகவும், அகப்பொருளும் புறப்பொருளும் கருதிப் புலவராற் பாடப்பெற்ற பழஞ்செய்யுட்கள் இவ்வகையினவாம். இவ்வகைக்கு அகநானூறு, புறநானூறு என்பன உதாரணங்களாம்.

3. காவியங்கள்:—இவை சிறு காவியம், பெருங்காவியம் என்று இரு வகைப்படும். இவ்வகையில் அந்தாதி, கலம்பகம், கோவை முதலியன சிறு காவியங்களாம். சடகோபரந்தாதி, நந்திக்கலம்பகம், திருக்கோவையார் ஆகியவை இம் மூவகைக்கும் உதாரணங்களாம். பெருங்காவியங்கள், ஒரு தலைமகன் சரித்திரத்தைப் பல வகைத் தொடர்பான அமைதிகளோடு விளக்குவதாம். இவ்வகைக்கு உதாரணங்கள் சீவக சிந்தாமணி, கம்ப ராமாயணம் என்பன.

4. நாடக நூல் :—தமிழ் மொழியிலே சமீப காலத்திலே இயன்ற மனோன்மணீயம், மான விஜயம், விசுவநாதம் முதலியன சிறந்த நாடக நூல்களாகும். பண்டை இலக்கியங்களுள் சிலப்பதிகாரத்தை இவ்வகையிற் சேர்த்தல் பொருந்தும்.

இந்நால்வகை இலக்கியங்களின் சுவைகளையும் இவற்றின் அமைதியையும் நன்குணர்ந்தே அனுபவிக்க வேண்டும்.

செய்யுட்கு உயிர் எனத் தக்கது பொருள் நலமே. பொருள் நலம் பெறாத செய்யுள், மற்ற அமைதிகள் எல்லாம் பொருந்தியிருப்பினும், உயிரற்ற உடம்பேயாகும். செய்யுட் சுவை அறிதற்கும், காவிய ரசம் அனுபவித்தற்கும் பொருள் நயமே முக்கிய சாதனமாகும்.

இனிப் புலமைச் செல்வம் படைத்த ஒருவர் எவ்வெப் பொருளைப் பற்றி எவ்வெவ்வண்ணம் தம் உள்ளக் கருத்தை வெளியிடுவர் என்பதைப் பற்றிச் சிறிது ஆராய்வாம். புலவர் செய்யுளிசைக்க எடுக்கும் பொருள் தமிழிலக்கண அமைதியின்படி அகம், புறம் என்னும் இரண்டில் அடங்கும். அகம் என்பது தம் மனத்தால் அனுபவித்துப் பிறர்க்கு எடுத்துரைக்க இயலாததாக இருக்கும் இன்பமாம். புறம் என்பது தாமும் அனுபவித்துப் பிறர்க்கும் தெரிவிக்கக்கூடியதாய் இருக்கும் பொருளாம். உறுதிப் பொருள் என்று முன்னோர் வகுத்த அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கும் இவ்விரு வகையில் அடங்கும்.

கடவுளின் அருளைப் பெறுங் கருத்தாற் பாடப்பெறும் தோத்திரப்பாக்கள் நம நாட்டில் அதிகம். அவை நாம் மேலே பிரித்த வகைகளில் அடங்காமல், தனித்தன்மை உடையனவாய் விளங்கும். தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி முதலியன இவ்வகையாம்.

இன்ன செய்யுளிலே இன்ன சுவை இவ்வளவு அமைந்திருக்கும் என்று அறுதியிட்டுரைத்தல் எவராலும் இயலாது. செய்யுளின் சுவை அறிதல் அவரவர் மனப்பான்மைக்கும் அறிவின் ஊற்றத்துக்கும் தக்கபடி இருக்கிறது.

'போனகம் என்பது தானுழந் துண்டல்,' என்ற இச் சிறு வாக்கியம் மிகவும் சிறு பருவத்தில் மாணவர் பயின்றதே. அப்பருவத்தே பதவுரையை மட்டும் அறிந்திருப்பர். பின்னுளிலே உலக அனுபவம் பெற்ற பிறகு, இதன்கண் அவரே காணற்குரிய பொருட்செறிவு இவ்வளவுதான் என்று கூறக் கூடுமோ ?

செய்யுள் செய்வோர் தாமாக ஒரு புது உலகத்தைப் படைத்து, அதன்கண் இன்புற்றுப் பெருமிதத்தோடு வாழ்கின்றவராவர். வறுமையால் மங்கிய வாழ்வுடையராயினும், உண்மைப் புலவர்க்குத் தாம் மனமுற அனுபவிக்கும் செய்யுட்சுவையின் மிக்க பேரின்பம் இல்லை.

> " தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
> இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
> நகலின் இனிதாயிற் காண்பாம் அகல்வானத்
> தும்பர் உறைவார் பதி."

என்ற பழஞ்செய்யுள் இக்கருத்தை நன்கு விளக்கும்.

## பயிற்சி

பின் வரும் விஷயங்களைப்பற்றி விளக்கக் கட்டுரைகள் வரைக :—

1. இந்திய அரசியல்
2. ஒலி பரப்பும் கருவிகள்
3. சுதேச ராஜாங்கங்கள்
4. நம் முன்னோர் வாழ்ந்த முறை
5. முற்காலப் போர்ப் படைகளும் தற்காலப் போர்ப் படைகளும்
6. எடிஸன் சாஸ்திரியார் கண்ட சாஸ்திர அற்புத விஷயங்கள்
7. பௌதிக சாஸ்திர நுட்பங்களும் நாட்டின் முன்னேற்றமும்

## 5. மனோதர்மக் கட்டுரை

## (Imaginative Essay)

நம் நாட்டின் கல்வி வளர்ச்சிக்காக உன் கையிற் பத்துக் கோடி ரூபாய் கொடுக்கப்பெற்றால் நீ என்ன செய்வாய்?

*"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்*
*கண்ணென்ப வாழும் உயிர்க்கு."*

என்ற பெரியார் திருவாக்கு உலவும் இத்தேசத்திலே இந்நாளிற் கல்வி நிலை மிகவும் தாழ்ந்திருப்பது வருந்தத்தக்கதொரு விஷயமே. இக்குறையைச் சீர்திருத்தப் பத்துக்கோடி ரூபாய் என்னிடம் கொடுக்கப்பெற்றால், நான் என்ன செய்வேன் என்பதைச் சுருக்கமாகக் கூறுகிறேன்.

முதலில் இந்த நாட்டை ஒரே அளவான பத்துப் பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு, ஒவ்வொரு பகுதிக்கும் கோடி ரூபாய் செலவிடுவது என்று தீர்மானம் செய்வேன். ஒவ்வொரு பகுதியிலும் நகரங்களிலே பெரும்பாலும் கல்விச் சாலைகள் நன்றாக ஓங்கி வளர்ந்திருத்தலால், அங்கே நுழையாமல் கிராமங்களில் நுழைவேன். நான் அப்படி நுழையும் போது கல்வியின் அவசியத்தை விளக்கப் பயன்படுவனவாகிய மாஜிக் லாந்தர் (Magic-Lantern) முதலிய சில புதுமைப் பொருள்களையும், உலகிலுள்ள பல நாட்டுச் சரித்திரங்களையும், நம் நாட்டுப் பூர்வ சரித்திரத்தையும் விளக்குகின்ற படங்கள் பலவற்றையும் கொண்டு செல்வேன். இவ் விஷயத்தில் ஊக்கம் கொண்ட பலரை அதிக ஊதியத்தை எதிர்பாராமலே இம்முயற்சியில் இறங்கும்படி தூண்டுவேன்.

கிராமங்கள்தோறும் புகுந்து, வீடுவீடாய் நுழைந்து, ஜனங்களுக்கு எப்பொழுது அவகாசம் கிடைக்குமோ அந்தச்

சமயம் பார்த்து, படங்கள் மூலமாகவும். பாட்டுகள் மூலமாக வும், கதைகள் மூலமாகவும் கல்வியின் பெருமை விளங் கும்படி செய்வேன். பகலிலே படிக்கத் தக்கவர்களைப் பகலி லும், இரவிலே படிக்கத்தக்கவர்களை இரவிலும் படித்துப் பயன் பெறுமாறு தூண்டுவதற்கு என் துணைவரிற் சிலரை ஒவ்வொரு கிராமத்திலும் நிறுத்துவேன். ஒவ்வொரு கிரா மத்திலும் ஒரு பொது நிலத்திலே சிறியதொரு கட்டடம் கட்டி, அங்கே நம் நாட்டின் பூர்வப் பெருமையை விளக்கத் தக்க பல புத்தகங்களையும், இக்காலத்து நூதனக் கருத்துக் களை விளக்கத்தக்க பல புத்தகங்களையும் சேகரித்து வைக் கச் செய்வேன். என் துணைவரை அங்கு வந்து போய்க் கொண்டிருக்கும்படி அவரது இன்மொழிகளால் வசப்படுத் தும்படி தூண்டுவேன். படிக்க அறிந்தவர்களுக்குத் தக்க புத்தகங்களைக் கொடுத்துப் படித்தறிந்து தெரிந்துகொள்ளும்படி தூண்டச் செய்வேன். படிக்கத் தெரியாதவர்களுக்காக, பாகவதர்களால் கதை சொல்லுதல் மூலமாகவும், நாடகம் நடித்தல் மூலமாகவும், 'சினிமா'ப்படப் பிரசங்கங்களின் மூல மாகவும் விஷயங்களை அவர்கள் எளிதில் அறிந்து கொள்ளும் படி வேண்டுவன செய்வேன்.

இப்படி ஆறு மாத காலம் வேலை செய்த பிறகு, ஜனங் களுக்கு அவரவர் வாழும் இடத்துக்கு அவசியமான தொழில் கள், வியாபார முறைகள் முதலிய வாழ்விற்குரிய சாதனங் களைப் பற்றி அறிஞர்களைக் கொண்டு பிரசங்கங்கள் நடத்து வேன். நம் நாட்டின் வறுமை நிலைக்கும், கிராம ஜனங்கள் அடிக்கடி கடனுக்குள்ளாகி அல்லற்படுவதற்கும் காரண மாயுள்ள விஷயங்களையும் அவர்கள் மனத்திற்படும்படி விளக் கிக் காட்ட வேண்டிய காரியங்களையும் செய்வேன். விவ

சாயம், வியாபாரம், கைத்தொழில் என்னும் துறைகளிலே அயல் நாட்டார் முன்னேற்றத்தின் அளவு, அந்த ஜனங்களுக்கு நன்கு விளங்கத் தக்கவாறு சிறு சிறு புத்தகங்களை எழுதி, புஸ்தக சாலைகளில் வைத்துப் பலரையும் படித்துப் பார்த்து அறிந்துகொள்ளச் செய்வேன்.

சாஸ்திர முறைகளிலே முன்னேறியிருப்பதால் அயல் நாட்டார் மேலும் மேலும் செல்வவளம் பெற்று ஓங்கி வருவதை, நம் கிராம ஜனங்கள் நன்கு அறியும்படி படங்கள் மூலம் விளக்கிக் காட்டிப் பல பிரசங்கங்கள் செய்விப்பேன். மழை வளம் மிகக் குறைந்த பகுதிகளிலுங்கூட அயல் நாட்டார் மிக்க சாமர்த்தியத்தோடு பயிர் செய்து பெரும்பயன் பெறுவதைச் சில புத்தகங்கள் மூலம் அவர்களுக்கு விளக்கிக் காட்ட முயல்வேன்.

கிராம ஜனங்கள் மேலும் மேலும் கல்வியிலே சிரத்தை கொண்டு புஸ்தக சாலைக்கும் பள்ளிக்கூடங்களுக்கும் வருவதைக் கண்ட பிறகு, அவ்விஷயத்தில் அவர்களே ஊக்கங் கொண்டு ஒற்றுமையோடு உழைக்கக் கூடிய வழியைக் கற்பித்துக்கொண்டு, என் துணைவருட் சிலரை அங்கே அதிக ஊதியத்தை எதிர் பாராது பணி பூண்டிருக்குமாறு விட்டுப் பிற இடங்களிலும் சுற்றிப் பார்க்கச் செல்வேன்.

ஒரு மத்திய ஸ்தலத்தில் பெரியதொரு புத்தகசாலையும், கலாசாலையும் ஸ்தாபித்து, அவற்றில் பழைய செல்வங்களும் புதுப் பொருள்களும் ஒன்றோடொன்று கலந்து விளங்கச் செய்வேன். பின்பு நகரங்களில் புகுந்து, தொழிற்சாலைகளிலும் பிற இடங்களிலும் கல்வியின்றி வேலை செய்துகொண்டிருப்போர்க்கு என்னால் இயன்ற பணி புரியத் தொடங்கு

வேன். அங்கும் கிராமங்களிற் செய்து வந்த காரியங்களைச் சிறப்பாகவும் சீர்படவும் செய்வேன். உத்தியோகம் கிடைக்க வில்லையே என்று அலைந்துகொண்டிருக்கும் பலரையும் இவ் வரும்பணியில் நுழைத்து, தேசத்து மக்களையெல்லாம் விலங்கின் நிலையிலிருந்து உயர்த்தும் பெருந்தரும மார்க்கத் தைக் கடைப்பிடித்துப் புகழ் பெறும்படி செய்வேன். இவ் வளவும் நான் செய்வது ராஜாங்கத்தார் பூரண அனுமதியின் பிறகே ஆக வேண்டியிருப்பதால், அவர்களிடம் முதலில் வேண்டிக்கொண்டு நான் செய்த வேலைகள் நிலையாக நடை பெறத்தக்க உதவிகளைச் செய்யும்படி அவர்களைப் பிரார்த்தித் துக்கொள்வேன்.

நான் சொல்லிய வண்ணம் இந்தியாவில் உள்ள லக்ஷக் கணக்கான கிராமங்களிற் புகுந்து வேலை செய்வதாயின், ஐந்து லக்ஷம் சேவகரேனும் வேண்டும். இவர்கட்குப் பெரிய சம்பளம் கொடுக்காவிட்டாலும், அவசியத்தின் அள வறிந்து கொடுக்க வேண்டும். புஸ்தக சாலைகளுக்கும், பள் ளிக்கூடங்களுக்கும், படப்பிரசங்கங்களுக்கும், பிற பிரசங் கங்களுக்கும் வேண்டிய செலவுகள் பல உண்டு. இச்செலவு கள் எல்லாம் பத்துக்கோடி ரூபாய்க்குள் அடங்கிவிடும் என்று யாரும் கூற முடியாது. 'பின் எப்படிச் செய்வாய்?' என்றால், குறைந்த அளவு ஒரு வருஷ காலத்துக்கு ஒருவிதச் சம்பளத் தையும் எதிர் பாராமலே தர்ம சிந்தையோடு இந்தப் பணியை மேற்கொள்ளத்தக்க நல்லெண்ணமுள்ளவர்களையே முதலில் சேவகர்களாகத் தேடிப் பிடிப்பேன். அவர்கள் தாங்கள் செய்யும் தரும கைங்கரியத்தைக் கண்டு மகிழ்ந்து, அந்தந்தக் கிராம ஜனங்கள் மனமுவந்து உதவும் பொருள்களைக் கொண்டே வாழ்ந்து வரவேண்டும். மற்றச் செலவுகள் எல்

லாம் இந்தப் பணத்திலிருந்தே செய்யலாம். புதிதாகக் கட்டடங்களைக் கட்டத் துணியமாட்டேன். அங்கங்கு இருக்கும் பொது ஸ்தலங்களையே பெரும்பாலும் பயன்படுத்திக்கொள்வேன். புஸ்தக சாலைகளுக்கும் எவரேனும் தருமம் வழங்குவாராயின், ஏற்றுக்கொள்வேன்.

இந்த வழியில் எல்லோரும் பரோபகார சிந்தையோடும் தியாக புத்தியோடும் வேலை செய்தால், ஒரு வருஷத்திற்குள்ளே இந்த நாட்டிலிருந்து அஞ்ஞானம் என்ற அந்தகாரத்தை ஒழித்துவிடலாம் என்பது எனது மனப்பூர்வமான எண்ணமாம். என் ஒரு வருஷத்து முயற்சி வீண் போகாதவாறு, ராஜாங்கத்தார் மேலும் மேலும் இவ்வழியில் ஊக்கம் கொண்டு இந்தப் பெருந்தருமத்தைத் தழைக்கச் செய்யுமாறு என்னால் இயன்றன செய்வேன்.

ஒவ்வொரு கிராமத்திலும் நான் ஏற்படுத்தும் புஸ்தக சாலையில் வித்தியாசாலைகளுக்கு அந்தந்தநாட்டுப் பாஷையிலே வெளி வருகின்ற பத்திரிகைகளை வருவித்து வைத்துப் பலர்க்கும் பயன் படும்படி உபயோகிக்க எத்துணை வழிகள் உண்டோ, அத்துணை வழிகளையும் கையாள்வேன். புத்தகப் படிப்பே பெரிது என்று எண்ணிவிடாமல், உலக ஞானத்திற் சிறந்த பலரையும் என் கைங்கரியத்துக்கு உதவியாய் இருக்கும்படி கேட்டுக்கொண்டு, ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு சபை அமைத்து, அதில் அவர்களைப் பொறுப்பு வகிக்கும்படி செய்வேன். கடவுள் கிருபையொன்று இருந்தாலல்லாமல் இவ்வளவு பெரிய தரும கைங்கரியம் நடவாதாகையால், அது பூரணமாய் வேண்டும் என்று பிரார்த்தனை செய்து பிறகே தொடங்குவேன். கல்வி சிறந்த நாடு என்ற புகழ் நம் நாட்டுக்கு விளைய வேண்டுமென்பதே என்னுடைய உள்ளத்தின் கருத்தாகும்.

## பயிற்சி

1. நன்முறையிலே புதியதொரு கிராமத்தை எங்ஙனம் அமைக்கலாம்?

2. நம் நாட்டிற் சிசு மரணம் குறைய என்ன செய்யலாம் ?

3. வறியோரே இல்லாதிருக்க என்ன முறையை மேற்கொள்ளலாம் ?

4. நாடெங்கும் எவரும் பணச் செலவின்றிப் பிரயாணம் செய்து பயன் பெறச் செய்தற்குரிய ஏற்பாடுகள் எவை ?

5. நாட்டினர் அனைவரும் மெய்ம்மையையே கடைப்பிடிக்க என்ன செய்யலாம் ?

6. பாவமே அறியாமல் வாழும்படி ஒரு சிறு கூட்டத்தாரை வளர்க்க என்ன செய்யலாம் ?

---

## வியாசத்திற்குரிய தலைப்புக்கள்

1. ஜீவ காருண்யம்
2. யான் வாழும் ஊர்
3. இந்திய நாட்டுப்புறம்
4. ஹென்றி போர்டு
5. சூரிய மண்டலம்
6. நட்பு
7. மனவொருமை
8. காலத்தின் அருமை
9. அயல் நாட்டுப் பிரயாணம்
10. தேசத்தோடொத்து வாழ்.
11. ஒரு புராதன ஹிந்து ஆலயம்
12. சிதம்பரம் ஆருத்திரா தரிசனம்
13. புத்தகங்களும் அவற்றால் விளையும் பயனும்
14. அரையணா நாணயத்தின் சுய சரிதை
15. சினிமா, சர்க்கஸ், நாடகம் முதலிய காட்சிகளும், அவற்றால் விளையும் நன்மைகளும்

16. அச்சுத் தொழிலைத் தெரிந்துணர்த்திய அருமை
17. கைத்தொழிற் சிறப்பு
18. வியாபாரக் கல்வியும் தொழிற்கல்வியும்
19. ஜனங்களுக்கு நன்மை விளைக்கத் தோற்றிய புதுப் பொருள்கள்
20. மின்சார சக்தியும் அதனால் விளைந்த நன்மைகளும்
21. ஓய்வு நேரத்தை எவ்வாறு பயன்படுத்தலாம் ?
22. கிராமத்துத் தெப்பக்குளம்
23. நம் கிராம விளையாட்டுக்கள்
24. செய்தி பரப்பும் யந்திர சக்தியும், அதனால் விளையும் நலமும்
25. நல்வாழ்வு என்பது எது ?
26. அற்ப அறிவு ஆபத்துக்கிடம்.
27. பொருட்சேம நிதிகள்
28. தன்மதிப்பு, தன்முயற்சி, தன்னடக்கம் என்னும் மும் மணிகள்
29. ஆகாய விமானத்திலே உலகெங்கும் சுற்றியதாகப் பாவித்துக்கொண்டு, உன் அனுபவத்தைக் குறித்து ஒரு வியாசம் எழுதுக.
30. ஈசுவர சந்திர வித்தியாசாகரர் சரித்திர மகிமை
31. கிளி முதலிய பறவைகள் கூட்டில் வாழ விரும்புமா, விரும்பாவா ? ஏன் ?
32. கடிகாரக் கோபுரம் தன் சுய சரிதையைக் கூறுதல்
33. மார்க்கோனி, ஹென்றி போர்டு, தாமஸ் ஆல்வா எடிஸன் என்னும் மும்மணிகள்
34. திருவள்ளுவர், கம்பர் என்னும் தமிழ்த்தாயின் இரு கண் மணிகள்

---